உ

ஸ்ரீபுரம் என்னும் திருவாரூர்

# ஸ்ரீ தியாகராஜ லீலை

மூந்நூற்றறுபதுள்

முதல் பகுதி

## தேவலீலை ஐம்பது.

திருச்சி மாவட்டம் பிக்ஷாண்டார்கோவில்-பண்ணையாளர்
ஜீ. இராஜகோபால் பிள்ளையவர்களால்



ஸ்ரீரங்கம்
ஸ்ரீ வாணீ விலாஸ அச்சாபீ
பதிப்பித்து
ஷியாரால் பிரசுரிக்கப்பெற்ற
1952
மை பெற்றது

# FOREWORD

I feel it to be a high privilege to write this foreword at the request of Sri Rajagopala Pillai of Bhikshandarkoil, a rare leader and patriot and devotee who has published this rare and valuable work, and thus link my name with his name and that of Sri N. Subrahmania Iyer, President of Guhananda Mandali, who has contributed a learned and weighty introduction to this work and who is a great authority in our sacred literature and especially in the Saiva Agamas and particularly in Sri Vidya Shakta literature. I hope that I shall be forgiven for having a minor strain of egotism in me and for saying that I used to go very often for worshipping Sri Tyagarajaswami in the famous temple at Tiruvarur when I was District Munsiff at Tiruturaipoondi and that for some years the administration of the temple was under my general control under the Negapatam Sub-Court's scheme when I was Sub Judge at Negapatam.

I have for some decades past been conducting searches in the Prasthana Traya and in the Puranas Itihasas and Agamas and am getting more and

more convinced about the integral character of ancient Hinduism, despite the sectarian persecutions and polemics of mediaeval Hinduism. The ebbing tide of Hinduism has come to an end and there is to-day a free forward-flowing tide of integral Hinduism once more. This book which contains a description of fifty out of three hundred and sixty acts of God Tyagaraja's benediction and grace will, I feel sure, quicken such forward flow.

It is often faultily assumed and glibly expressed that God Vishnu alone took form and did acts of grace for man's salvation. No doubt God Vishnu is the protective aspect of God. But God Siva as Sundareswara in Madurai and as Tyagaraja in Tiruvarur was as accessible and gracious as God Vishnu in any of his incarnations. God Siva is often regarded in his destructive *(Samhara)* aspect alone. As a matter of fact the destruction of evil-doers by Rama and Krishna was on a colossal scale. Every God and also every God-dess—has a gracious *(Saumya)* aspect as well as a destructive *(Krura)* aspect. But all the acts of Gods and Goddesses are motivated only by universal welfare, and aim, in the famous words of the Bhagavad Gita, at protecting the good and punishing the wicked ar re-seating Dharma on its throne.

One unique aspect of the Saiva Agamas and the Shakta Agamas is the way in which they unify and harmonise Advaita and Visishtadvaita and Dvaita. The two latter systems of thought deny the Formless Attributeless Noumenal Absolute (*Nishkala*) while some uncompromising aspects of Advaita give only a secondary importance and an inferior fleeting reality to God (i. e., the Absolute in the aspect revealing Name and Form i. e., Sakala). But the Saiva and Shakta Agamas show how the Absolute is God viewed out of relation to the world and how God is the Absolute viewed in relation to the world. They show also that God and His Shakti are essentially one, that the world is an emanation from God's Shakti, and that the world, though it has a reality dependant on God and is not a mere illusion or mirage or dream, in no way affects the integrality and the infiniteness of the Absolute or interferes with the infinite purity and bliss and grace of God.

The human fight about higher and lower among the Trimurthis (Trinity) have no real existence in the divine plane and is only in our deluded minds and sectarian hearts. That is shown by Siva's uttering the Taraka mantra in the right ear of the person dying at

Kāsi (Banaras) and Rama worshipping Ramalinga at Rameswaram. This work shows how God Tyagaraja shines in God Vishnu's heart and is worshipped there by God Vishnu.

Let us never forget the inner truth of the *Ajapa Natana* (dance) of God Tyagaraja in God Vishnu's heart. The Ajapa Gayatri Mantra (*Hamsah Soham Soham Hamsah*) is called so because our rhythmic in-taken and out-going breaths take that form. Let us consciously practise Ajapa Gayatri and thus realise the eternal and perennial dance of divine bliss in our hearts!

There is a great occult truth hidden in the well-known Panchalinga concept. Tiruvarur is said to be the shrine of the *Prithvi Linga* (the Earth-element as a manifestation and emanation of God). The subtler elements of water and fire and wind and ether rest on the earth-element which is nearest to us and which is the major part of our physical self and to which we are knit by the powerful and irresistible force of gravitation. God *Vanmeekanathar* of Tiruvarur is called so because the *Vanmeeka* (ant-hill) where the Linga was found symbolises the *Prithvi Tattwa*. Anothe truth is that five nerve plexuses (*chakras*) in the bo

(*Pinda*) correspond to the five centres of the elements in the universe (*Anda*). Tiruvarur is thus said to correspond to the Muladhara (sacral plexus) shrine in the human body which is the mobile temple of God. *Kamalambal* in the Tiruvarur temple is *Kamakala* or *Lalita Shakti*. Aum is *Uma* and *Uma* is Aum. Siva is *Uma* and Uma is *Siva*. Tiruvarur is thus *Siva Peetha* and *Shakti Peetha*.

Let us not forget also that King *Muchukunda* is connected with both God Siva at Tiruvarur and God Krishna and that the sage *Markandeya* is connected with God Siva in the Siva Puranas and with God Vishnu in the Bhagavata Purana. King Muchukunda brought God Tyagaraja to the earth, and God Tyagaraja willingly came to meet His Shakti (Kamala Devi) and to bless us all and shine in our hearts.

This is a rare and valuable work which the world owes to Mr. Rajagopala Pillai's research and piety and munificence. I hope and wish and pray that he will give the world all the other *Tyagaraja Leelas* also. I wish the work abundant divine grace and ever-growing public appreciation.

MADRAS,
28th September, 1952
VIJAYADASAMI DAY.

K. S. RAMASWAMI SASTRI.

உ

# *திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ லீலைகள்
# பதிப்புரை.

---

பூமிதேவிக்கு முககமலம்போல் விளங்குகின்ற திருவாரூர்த் தொன்னகரின் மூர்த்தி, தலம், தீர்த்தம் எல்லாம் எல்லையற்ற பெருமைவாய்ந்த தேவரகசியமாகவே விளங்குகின்றன.

பசுபதியாகிய பரமசிவம் உயிர்கள் மேல் வைத்த கருணையால் நம் தமிழ் நாட்டில், விரும்பிவந்து கோயில்கொண்டு எழுந்தருளி நாம் உய்யும்வண்ணம் அநேகம் திருவிளையாடல்களை அவ்வப்போது நடித்துக் காட்டி நல்லொழுக்கங்களை நிலைநாட்டியிருக்கின்றார். சிவபரஞ்சுடர் சோமசுந்தரமாக வந்து பாண்டிய ராஜ புத்ரியான மீனாம்பிகையை மணந்து பக்தர்கள்பொருட்டுச் செய்த லீலைகளே "ஹாலாஸ்ய மகாத்மியம்" என்னும் "மதுரை அறுபத்துநான்கு திருவிளையாடல்கள்" என்பதும் எல்லோருக்கும் தெரியும்.

---

* குறிப்பு:—தியாகேசர் லீலைகள் முந்நூற்றறுபதா, முந்நூற்றறு பத்து நான்கா என்பது ஒரு விஷயம். டாக்டர் சுவாமிநாதையரவர்கள் அச்சிடுவித்த தியாகராஜ லீலையில் லீலைகள் முந்நூற்றறுபது என்று கூறுகிறார்கள். முசுகுந்த ஸஹஸ்ர நாமாவளியில்

ஷஷ்டித்ரிஶதஸம்க்யாகலீலாகல்பிதவிக்ரஹாய நம: |

என்ற நாமம் லீலைகள் முந்நூற்றறுபது என்றே குறிக்கிறது. ஸ்ரீ தியாகராஜ லீலைகள் முந்நூற்றறுபதும் ஸ்காந்த புராணம் நாகர கண்டம் கமலாலய மஹாத்மியம் உத்தர பாகத்தில் கூறப்பட்டுள்ளதாக * திருவாரூர்த் தியாகராஜ லீலை' நைமிசப் படலம் 46, 47-வது செய்யுட்களால் தெரியமுடிகிறது. புண்யபுர மகாத்மியம் என்னும் திரு

கைலாஸபதியான சிவபரஞ்சுடரே, மூலாதார க்ஷேத்திரமும் சைவராஜதானியுமான தென் திருவாரூரில் சோழகுல திலகமாக 'தியாகராஜனாக' அருள்திருமேனிகொண்டு அவதரித்து அரசுசெலுத்தியும், தொண்டர் நாதனாக விளங்கி அனவரதம் அஜபாநடனம் புரிந்தும் அருளும் பெருமையும், சைவ சமயத்தினது தழைத்த வேர் போன்ற நாயன்மார் அறுபத்துமூவரது மகிமைகளை யுலகோர் காண, படிமத்தில்

---

வாரூர் ஸ்தல புராணங்களுள் ஒன்றின் தமிழ் மொழிபெயர்ப்பே தியாகராச லீலைகள் என்று இந்த நூலின் முன்னுரையில் கூறப்படுகிறது. சென்னை குகானந்த மண்டலியின் தலைவர் பிர்ம்மஸ்ரீ N. சுப்ரமண்ய அய்யரவர்கள் வெளியிட்டுள்ள ஸ்ரீ கமலாலயச்சிறப்பு வெளியீடு. 2. என்னும் கமலாலய க்ஷேத்திர தத்துவத்தில் 45-ம் பக்கத்தில் தியாகேசனது 360 லீலா தத்துவமும் விளக்கப்பட்டிருக்கிறது; லீலைகள் முந்நூற்றறுபது என்றே இந்த புஸ்தகத்திலும் எழுதியிருக்கிறது. ஆனால், வடபாதிமங்கலம் ஸ்ரீமான் V. T. சோமசுந்தரமுதலியாரவர்களால் ஜய-௵ (1895) பங்குனி-மீ அச்சாகி வெளியிடப்பட்டுள்ள "திருவாரூர்ப் புராணத்தின் "முகவுரையில்" மேற்கொண்டு இனி அச்சிடுவதற்குத் தயாராக விருக்கும் நூல்கள் பதினான்கென்றும் அவற்றுள் திருவாரூர் முந்நூற்றறுபத்து நான்கு லீலைகள்" என்னும் ஒரு நூலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் ஸ்ரீ தியாகராஜலீலைகள் முந்நூற்று அறுபத்து நான்கென்று தெரிகிறது. அடியேனுக்குக் கிடைத்துள்ளவை முந்நூற்றறுபதே. நான்கு லீலைகள் கிடைக்கவில்லை. இவையும், திருவாரூர்ப்புராண முகவுரையில் கண்ட பதினைந்து நூல்களும் திருவருள் செயலால் கிடைக்குமாயின் வாசகர்களுக்கு உபயோகமாக விருக்குமல்லவா? எமக்குக் கிடைத்த தமிழ்ப் படி ஏடுகளில் 57, 58, 59, 71 இந்த எண்களுடைய நான்கு லீலைகளும் காணப்படவில்லை. இவைகள் அன்பர்கள் யாரிடமாவது கிடைத்தால் மறுபதிப்பில் சேர்த்துப் பதிப்பிக்கலாம். திருவருளே துணை.

* அரியாசனத் தயில்வே லண்ணலோடும்
தேன்செய்த மலர்க்கூந்தற் றேவியோடும் வீற்றிருந்தும்
தியாகராசர்
தான்செய்த விளையாடலொரு முந்நூற்றறுபதவை சாற்றுமாலோ.

(தி. தியா, லீலை நைமிசப் படலம் 48.)

கண்ட தமது வடிவமேயான ஆலால சுந்தர மூர்த்தி மூலம் விளக்கம் செய்வதற்காகப் புரிந்த திருவிளையாடல்களின் தத்துவங்களும், "சத்தியாய்ச் சிவமாய் உலகெலாம் படைத்த தனி முழுமுதலுமாய் அதற்கோர் வித்துமாய் ஆரூர் ஆதியாய் வீதி விடங்கராய் நடங்குலாவிய" முந்நூற்றறுபது லீலைகளும் மக்கள் மனத்தை உருக்குவன. ஆனந்தவெள்ளம் பெருக்குவன. இவை யாவும் மிகவும் ரகசியமாகவே தேடுவாரின்றி ஏடுகளில் புதைந்துகிடந்தன எனலாம்.

கர்ண பரம்பரையிலும் இதர நூல்களில் கண்ட மேற்கோள்கள் மூலமாகவும் கிடைத்த சில வரலாறுகளைக் கொண்டும் 14 லீலைகளே ஸ்ரீ தியாகராஜ லீலைகள் என்று பேசப்பட்டு வந்தன. பழந்தமிழ் ஏடுகளைச் சேகரித்த தனிப்பெருமையுடைய தமிழ்த் தாத்தாவாகிய டாக்டர் உ. வே. சுவாமிநாத ஐயரவர்களும் இவற்றைத் தேடி அலுத்துப் போயினர். அவருக்கும் லீலைகள் பதினான்கே கிடைத்தன. திரிசிரபுரம் மகா வித்வான் ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் இந்த சொற்ப லீலைகளைக் கொண்டே "திருவாரூர்த் தியாகராச லீலை" என்ற பெரியதொரு காப்பியம் செய்துள்ளார். இதுகாறும் முந்நூற்றறுபது லீலைகளின் மூலக்ரந்தமோ தமிழ்மொழிபெயர்ப்போ கிடைக்கவேயில்லை. புண்யபுராதன க்ஷேத்ர ரகசியமாகிய இவ்வரிய லீலைகளை எப்படியும் கண்டுபிடித்து வெளிப்படுத்த வேண்டும் என்னும் அவா எப்போதும் பள்ளி பயிலும் நாள் முதலே அடியேனை ஊக்கிக்கொண்டே வந்தது உண்டு. கமலைப் பராசக்தியின் திருவருள் வாய்ப்பினல் சில நாளைக்கு முன் ஸ்ரீரங்கத்தில் எனது அரிய நண்பர் காலஞ் சென்ற குருபக்தசிகாமணி பிர்ம்மஸ்ரீ T. K. பாலஸுப்ரமண்ய ஐயரவர்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது தமது ஸ்ரீ வாணீ விலாஸம் அச்சாபீஸில் தாம் இதைத் தேடி வைத்திருப்பதாகத் தெரிவித்தார். குருடனுக்குக் கண் கிடைத்தது என மகிழ்ந்தேன், "அப்படியானல் மிகவும் நல்லது. இதன் செலவு.

களை அடியேனது திருத்தொண்டாக ஏற்றுக் கொண்டு தயவு செய்து அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டேன். அவரும் உடனே உடன்பட்டு மொழிபெயர்ப்புப் பிரதிகளை என்னிடமே எடுத்துக் கொடுத்தார். 'முன்னவனே முன்னின்றால் முடியாத பொருள் உளதோ' அவன் அருளே இது! அல்லவா?

பின்னர் டாக்டர் சுவாமிநாத ஐயரவர்களின் குமாரரான லேட் ஸ்ரீ கல்யாணசுந்தரம் ஐயரவர்களிடம் இப்பிரதிகளைக் காண்பித்து இவற்றைப் பரிசோதித்துத் தாங்களே பிரதிசெய்து தரவேண்டும் என்று வேண்டினேன். கண்பர் அவர்களும் மனமுவந்து செய்துகொடுப்பதாக ஒப்புக்கொண்டு சிலநாட்களில் ஐம்பது லீலைகளை அச்சுக்குக் கொடுக்கும் விதமாக எழுதி அனுப்பிவிட்டார்கள். இன்னும் சில நாட்களில் மீண்டும் நூற்றைம்பது லீலைகள் வந்தன. இந்த லீலைகள் யாவும் 'வட மொழி முதல் நூலிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை என்று அதிலே கண்டிருந்ததால் எப்படியாவது வடமொழி மூலமோ அல்லது வேறு கையெழுத்துப் பிரதியோ கிடைக்கும் என்று தேடாதும் தேடினோம். இன்னும் கிடைத்திலது. தியாகேசர் பிரபந்தங்கள், கமலாம்பிகை பிரபந்தங்கள் முதலியவையும் அஜபாகல்பம், கமலாலய க்ஷேத்ரதத்வம் முதலியவையும் அச்சாக வேண்டியிருந்தது. அவையும் அவன் அருளாலே அச்சாகி வெளிவந்தன.

சென்ற கர-ஸு பங்குனி-மீ முதல் வாரத்தில் இதன் அச்சுவேலை தொடங்கியது. எட்டு பாரங்கள் அச்சானதும் ஸ்ரீ தியாகேசனது பங்குனித் திருநாளன்று இவை தியாகேசன் பாத கமலங்களில் அர்ச்சிக்கப்பெற்றன. முதல் ஐம்பது லீலைகள் அடங்கிய தேவலீலைகள் என்னும் முதற் பிரிவு தான் முதலில் அச்சிட்டு இப்போது முடிந்திருக்கிறது. இது அச்சிட்டு வெளிவரும்போது எனது அரியபெரிய நண்பர்கள்

டாக்டர் ஸ்ரீ சுவாமிநாத ஐயர் திருக்குமாரர் ஸ்ரீ கலியாணசுந்தரம் ஐயரவர்களும், ஸ்ரீ வாணீ விலாஸம் பிரஸ் உரிமையாளர் ஸ்ரீ T. K. பாலசுப்ரமண்ய ஐயரவர்களும் உடனிருந்து ஆனந்திக்கக் கூடவில்லையே என்பதை எண்ணும்போது வருத்தம் தான்.

தனது அரிய திருக்கரங்களாலேயே எனது ஆப்த நண்பரும் ஸ்ரீ தியாகேச பக்தரும் ஆன கல்யாண சுந்தரம் ஐயரவர்கள் லீலைகளைப் பரிசோதித்து ப்ரதி யெழுதித் தந்தனர். பல வீனத்தால் தாம் நேரில் எழுதக்கூடாதபோது தமது குமாரன் அருமந்த பிள்ளையான, அறிவும் அடக்கமும் மிக்க ஸ்ரீ K. சுப்ரமண்யம் B. A., மூலம் எழுதச் செய்திருந்தனர். இவ்வளவில் தமது தந்தையாரின் பணிகளைப் பின்பற்றி அடையாற்றிலுள்ள டாக்டர் சுவாமிநாத ஐயர் அவர்களது புத்தகசாலையிலும் மற்றும் எங்கும் அன்புடன் நடந்துகொள்வதைப் போலவே, தமது தந்தையையும் தாத்தாவையும்போல், இவர் அடியேன் மாட்டும் அன்புகாட்டுவதற்கு மிகவும் கடமைப் பாடுடையேன். மேற்கொண்டு பரிசோதித்தல் அச்சிடுவித்தல் பணிகளை இவர்களே செய்து கொடுக்கிறார்கள். வித்வான் ஸ்ரீ பாலசாரநாதனும் உதவி புரிகின்றனர்.

அடியேனது நண்பர்கள், சென்னை குகானந்த மண்டலி அத்யக்ஷகர் பிரம்மஸ்ரீ N. சுப்ரமண்ய ஐயர் அவர்கள், டாக்டர் சுவாமிநாத ஐயரவர்கள் பேரன் ஸ்ரீ சுப்ரமண்யம் அவர்கள் B. A., தருமபுரம் ஆதீன வித்வான் திரு. எஸ். தண்டபாணி தேசிகரவர்கள், வித்வான் திரு ச. கு. கணபதி ஐயரவர்கள் M.A., மயிலை சே. வே. ஜம்புலிங்கம் பிள்ளையவர்கள், தஞ்சை சரஸ்வதி மஹால் ஸ்ரீ K. வாசுதேவ சாஸ்திரிகள், திரு. வித்வான் S. பாலசாரநாத் முதலியவர்களும் பதிப்புவேலைகளில் வேண்டிய உதவிகளை அவ்வப்போது கவனித்துச் செய்து வருகிறார்கள். ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸம் அச்சுயந்திரசாலை

யினரும் தங்களது பெரும் கீர்த்திக்குத் தகுந்தவாறு கண்ணுங் கருத்துமாய் பணி செய்கின்றனர். எல்லோருக்கும் எனது மனமார்ந்த நன்றி.

கைம்மாறு கருதாத மழைபோல் ஞானானந்த மண்டலி ஸ்தாபகர் பிர்ம்மஸ்ரீ N. சுப்ரமண்ய அய்யர் அவர்கள் இந்த நூலுக்கு சிறந்த தத்வ ஆராய்ச்சி முறையில் சிறப்புரை தந்து ஆதரித்திருக்கின்றனர்.

இப்பதிப்பு வெளியீட்டு வேலையில் அடியேனைத் தூண்டி விட்ட அஜபாகர்த்தனான ஸ்ரீ தியாகேசனது அருள் திறத்தை வியந்து வியந்து தமியேன் அடியேன் ஆகுவது அல்லது வேறு என் செயவல்லேன்.

ஸ்ரீ தியாகேசனது திருத் தொண்டர் திருக்கூட்டத்தின ருக்கு இது முழுதும் ஆராத காதலுடன் உரிமையாக்கப் பட்டது.

"மண்ணரசுகொளவந்து மண்ணரசாகிய வாரூர் மணிப்பூங்கோயில்
எண்ணரசு வீற்றிருக்கும் வீதிவிடங்கப் பெருமாள் இருதாள்போற்றி"

"ஆதிபரா சக்தியெனு மன்னைவாழி யல்லியங்கோதைப் பெயராம் அம்மை வாழி
மாதவர் சேர்வன்மீகநாதன் வாழி மகிழ்வருளுந் தியாகேச வள்ளல் வாழி
போதமுதவுந் தேவதீர்த்தம் வாழி புனித சிவனடித் தொண்டர் வாழி
நீதியருள் சிவதரும கருத்தர் வாழி நிறை செல்வத் திருவாரூர் நீடுவாழி"

ஆனந்த விலாஸம்
பிக்ஷாண்டார் கோவில்
நந்தன வருஷம்
ஆனித்திருமஞ்சன
நன்னாள் 29-6-52

அடியார்க்கடியன்,
'மீளாவடிமை',
ராஜகோபாலன்.

ஶ்ரீ தியாகராஜ லீலைகள்

முதற் பிரிவு

தேவ லீலைகள்

## மெய்யுரை.

சிதாகந்த ஸாகர வடிவ கைலாஸாதிபதியாகிய நிஷ்கள, அத்வைத சிவமானது மெய்யடியார்களின் அன்புவலையிற் சிக்கி அவர்களை உய்விக்க வேண்டி, தானே தனது இச்சையினால் ஒரு ஸகளவடிவம் தாங்கி, அருளொடு நிறைந்து யாதொரு பயனையுங் கருதாது அநாயாஸமாய்ப் பலசெயல்களைச் செய்கின்றதென்பது வேதாகம புராண இதிகாசங்களின் முடிபாகும். இங்ஙனம் இச்சாமாத்திரத்தினால் வேடிக்கையாக இயற்றும் செயல்களுக்கு "லீலைகள்" என்று பெயர்.

ஸகளஸ்வரூபியாகிய பரமசிவம் செய்த லீலைகளின் காலம், தேசம், நிமித்தம் முதலியவற்றைத் தான் புராணங்கள் கூறுகின்றன.

"கைலாஸபதியாகிய நிஷ்கள பரமசிவம் முதலில் காக்குங் கடவுளாகிய திருமாலையும், அதன்பின்னர் விண்ணரசாகிய தேவேந்திரனையும், அதன்பின்னர் மண்ணரசாகிய முசுகுந்த சக்ரவர்த்தியையும் உய்விக்க ஸோமாஸ்கந்த மூர்த்தம் தாங்கித் திருமாலின் இதயக் குகையிலும், விண்ணாட்டிலும் விளங்கிக் கடைசியில் இம்மண்ணுலகில் தெக்காட்டில் திருவாரூரில் செம்பொற் சிங்காதனத்தின்மேல் அமர்ந்து விளங்குகின்றார்."

என்று திருவாரூர்ப் புராணம் கூறுகின்றது. இதுவும் பரமசிவனது லீலையே.

இதன் பின்னரும், சங்கர சேவகச் சோழனது அன்பிற்கிணங்கி அவனது வேண்டுகோளின்படி சோழநாட்டின் அரசாட்சியைத் தாங்கிச் செங்கோல் செலுத்தினன். இதுவும் ஒரு பிரசித்தமான லீலையே. அன்றியும், ஸ்ரீ சுந்தர மூர்த்தி நாயனாரது விருப்பத்தின்படி ஸாகரிகை (பரவை) யென்னுங் கணிகையின் வீட்டிற்கு நள்ளிரவில், அர்ச்சகத் திருமேனி தாங்கித் தூது சென்றான் ஸ்ரீ தியாகராஜன். இந்த லீலையால் பரமசிவனுக்கு மெய்யடியாரிடமுள்ள எல்லையற்ற கருணை உணரப்படுகின்றதன்றோ?

“லோகவத்து லீலாகைவல்யம்”

என்னும் பிரஹ்ம ஸூத்திரப் பிரமாணத்தினால், ஸர்வஞ்ஞனும் ஆப்தகாமனும் ஸர்வ சக்திமானுமாகிய பரமேச்வரன் இந்த உலகைச் சிருஷ்டிசெய்கிறான். ஆப்தகாமனுதலின் இவ்வுலக சிருஷ்டியால் அவனுக்கு ஒரு பலனும் இல்லை; ஸர்வ சக்திமானுகையால் ஸம்பவிக்கக் கூடாதனவற்றை யெல்லாம் ஸம்பவிக்கும்படி செய்யவல்லவன். ஆதலின் பிரபஞ்ச சிருஷ்டி பரமேச்வரனது முதலாவது லீலையென சாஸ்திரங்கள் கூறுகின்றன. சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அநுக்கிரஹம் என்னும் பஞ்ச கிருத்தியங்களும் பகவானது லீலைகளேயாகும். அன்றியும்,

பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்|
தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ||

“நல்லோரைக் காக்கவும், அல்லோரை அழிக்கவும் தர்மத்தை நிலைநாட்டவும் அவ்வப்போது நான் தோன்றுகிறேன்” என்பது பகவானது திருவாக்கல்லவா?

இதற்கிணங்க, பரமேச்வரன் அவசியமானபோதெல்லாம் அசரீரியாகவோ அல்லது ஆவிர்ப்பாவ அவதாரமாய் லீலா மாநுடவுருவங்கொண்டோ, துஷ்டர்களை ஒழித்து, ஸாதுக்களைக் காப்பாற்றித் தர்ம மார்க்கத்தை ஸ்தாபித்துக் கொண்டு வருகின்றனர். இது சிதையாத சித்தாந்தமாகும். இத்தகையனவே ஸ்ரீ தியாகராஜ லீலைகளுமாகும்.

கமலாலய மென்னும் திருவாரூரில் பஞ்சப் பிரஹ்ம ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்துள்ள ஸ்ரீ தியாகேசன் இயற்றியுள்ள லீலைகள் முந்நூற்று அறுபதென்று ஸ்காந்த புராணம், நாகர கண்டம், கமலாலய மாகாத்மியம் உத்தர பாகம் கூறுகின்றது. இவற்றுள் இம்முதற் பிரிவில் அடங்கியவை தேவ லீலைகள் எனக் கூறப்படும். இப்பிரிவில் ஐம்பது லீலைகள் அடங்கியுள்ளன.

இவற்றுள் முதல் எட்டு லீலைகள் உபோத்காதமாய் உள்ளனவாகும். ஈற்றைய இரண்டும் கலிபுருடனது கொடுஞ் செயல் சிவபக்தியில் திளைக்கும் மெய்யன்பர்பால் செல்லாதென்றும், புண்யபுரமாகிய திருவாரூரில் புகாதென்றும், சிவ ஸ்வரூப தத்துவம் இத்தகையதென்றும், நிஷ்கள பரசிவத்தி லிருந்து எங்ஙனம் பிரபஞ்ச சிருஷ்டி ஏற்பட்டிருக்கிறதென்றும் நன்கு விமர்சிக்கின்றன.

இடையே உள்ள நாற்பது லீலைகளும், அசுரர்களாலும், அரக்கர்களாலும் தேவர்களுக்கும் ரிஷிகள், முனிகள், சாதுக்கள், அந்தணர், மெய்யடியார் முதலியவர்களுக்கும் அவ்வப்போது ஏற்படும் துன்பங்களை ஒழித்து அவர்களைக் காத்தருளி வைதிகச் சைவ நெறியை நிலைநாட்டிய அற்புத விஷயங்களைக் கூறுகின்றன.

டம்பம், கெர்வம், அகங்காரம், கோபம், கொரேத்தன்மை யக்ஞயாகாதிகளை அழித்தல், ஸாதுக்களை ஹிம்ஸித்தல், தலை

யின்மை, பொறுமை, வஞ்சனை முதலியன ரஜோகுண தமோ குணங்களின் காரியங்கள். இவைகளையே ஸ்வபாவமாக உடையவர் அஸுரர்களும் ராக்ஷஸர்களுமாவர். இவர்களுக்குத் தெய்விக அறநெறியில் உள்ளவர்களான ரிஷிகள், மெய்யடியார் தேவதைகள் முதலியவர்களிடத்தில் தீராத பகைமையுண்டு. நன்னெறியிலுள்ளவர்களைத் தங்கட்குக் கிடைத்துள்ள ஆஸுர மந்திர பலத்தால் மயங்கித் துன்மார்க்கத்தில் பிரவர்த்திக்கச் செய்வதே அவர்களின் நோக்கமாகும். இவ்விஷயம் இந்த முதற்பிரிவின் லீலைகளைப் படிப்பதனாலேயே நன்கு விளங்கும்.

கமலாலயமென்னும் திருவாரூரில் அமர்ந்துள்ள ஸ்ரீ தியாகேசன் ரக்தாஸுரன், காலகேயன், கோலாசுரன், குடிலன், பிரதர்க்காசுரன், பிரளயபாதன், ப்ரதூமன், பல்லரோமன், சதகுப்யன், ப்ரமேகாசுரன், ப்ரலேபனன், மத்தன் - பிரமத்தன், திரிசிரஸ், ப்ரஹத்பாதாசுரன், ஜம்பாசுரன், யுக்திகல்பன், கிரிஸாரன், பர்வதாசுரன், பிந்துஜங்கன், சும்ப்ராசுரன், லம்பாசுரன், பிலம்பாசுரன் முதலிய அஸுரர்கள் இயற்றிய துன்மார்க்க மோஹ மாயங்களை ஒழித்து, அவ்வஸுரர்களைக் கேவலஇச்சையினாலோ, மஹாமந்திரங்களாலோ, ஆவிர்ப்பாவ லீலா மாநுஷ உருவத்தாலோ ஒழித்து ஸாதுக்களையும், புண்யபுராமகிய திருவாரூரையும் காத்தருளிய விஷயங்கள் இந்த நாற்பது லீலைகளிலும் வெகு நன்றாய்ச்சித்தரிக்கப்பட்டுள்ளன.

காக்கும் கடவுளாகிய திருமாலின் இருதய குகையில் அமர்ந்து ஹம்ஸ நடனம் புரியும் தியாகேசன், திருமாலுக்குரிய ஸ்திதித்தொழிலைப் பிரதானமாகக்கொண்டு அதிலடங்கிய ஸ்திதி சிருஷ்டி, ஸ்திதி ஸ்திதி, ஸ்திதி ஸம்ஹாரம், ஸ்திதி திரோபவம், ஸ்திதி அநுக்கிரஹம் என்னும் அவாந்தர பஞ்ச கிருத்தியங்களை லீலையாகப் புரிந்துள்ளனர். தர்ம ஸ்தாபனமே ஸ்திதியாகும். ஸ்ரீ தியாகேசனது லீலைகள் ஒவ்வொன்றையும்

தருவி ஆராயின், அவை யாவும் அறநெறியாகும் ஸன்மார்க்கத்திற்கு ஸஹஜ விரோதிகளாகும் அஸுரர்களின் மாயையை (அஞ்ஞானத்தை)யும் அவ்வசுரர்களையும் நிக்கிரஹித்து, வேத விஹிதமான யோகம், தவம், தியானம், யாகம், பக்தி, சிவ ஸ்தல வாஸம், சிவபுராண படனம் முதலிய ஸத்கர்மங்களை இயற்றும் சாதுக்களை அருள்புரிவதே பரம தாத்பரியமாய்க் கொண்டுள்ளனவாகப் புலப்படுகின்றது.

இந்த லீலைகளைச் சிவ சின்னங்களை அணிந்து பஞ்சாக்ஷர ஜபத்துடன் ஒருவன் அன்புமிக்கு படித்தாலும் சிரவணஞ் செய்தாலும், அந்த புண்ணியவானுக்குச் சிவஞானத்தின் உண்மைச்சொரூபம் நன்கு விளங்கிப் பேரானந்த நிலையாகும் ஸாயுஜ்யமும் ஏற்படும்.

"உம்பர் புகழ் திருவாரூர் தியாகராஜன்
உண்மை செறி லீலைகளை உவந்து கேட்போர்
இம்பரிடை இருநிதியும் சுகமுமேவி
இனிய திருமகப் பெறுவர்; பிணிவந் தெய்தார்
வெம்பகைகள் முதலான துயரம் நீங்கி
மேதினியில் வாழ்ந்துமிக விண்பால் எய்தித்
தம்பெருமா னாகிய சங் கரன்தாள் நிழல்
சச்சிதா னந்த பர முத்தி சார்வார்,"

திருச்சிற்றம்பலம்.

(இதன் பொருள்) :—"தேவர்களால் புகழப்பட்ட திருவாரூர் தியாகேசனுடைய லீலைகளைப் பக்தி சிரத்தையுடன் சிரவணஞ்செய்பவரும், பாராயணம் செய்பவரும் இவ்வுலகில் அருட் செல்வத்தையும், பொருட் செல்வத்தையும் பெற்று, வம்ச விருத்தி, உடல் நலம் முதலிய ஸகல ஸுக போகங்களையுமுடைத்தாய், அஜாத சத்ருவாய் விளங்குவார்;

பின்னர் அவ்வுலகில் சுவர்க்க போகங்களையும் துய்த்துச் சிவ னடி நீழலாகும் ஸச்சிதாநந்த பரமுக்தியையும் பெறுவார் என்பது மெய்யுரையாகும்.

இவ்விஷயம் ஸ்ரீ ஸ்காந்த புராணம், உபதேச காண்டம் 48-வது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்க மாவது :—

மங்கள ஸ்வரூபியாகிய பரமசிவனது லீலைகளைப் பிரதி பாதிக்கும் சிவபுராணத்தைச் சிரவணம் செய்வதாலுண்டாகும் புண்ணியம் இவ்வளவவ்வளவென்று அளவிடத்தக்கதன்றி; ஆதலின், அதனைப் பக்தியோடு சிரவணம் செய்து அவ் வர்த்தத்தை மனனம் செய்யக்கடவீர். ஹே! ரிஷிகளே!! சிவபுராண சிரவணத்தைவிடச் சிறந்ததொரு தருமமில்லை. உண்மையான ஈச்வர உபாஸனை இதுவேயாகும் என்பதாம்.

இந்த லீலைகளில் பல மெய்யடியார்களின் அன்பும் பரசிவ வடிவ ஸ்ரீ தியாகேசனது அருளும் விரிவாய் விமர்சிக்கப் பட்டுள்ளன.

தியாகேசா! என்று ஒருமுறை மனமுருகி அவனது திரு நாமத்தை உச்சரித்தால், அந்த பக்தனுக்குள்ள ஸர்வ அனர்த் தங்களும் நாசமாகின்றன வென்பது இந்த லீலைகளால் உணர லாம்.

அன்றியும், இவற்றுள் இருபதாவது லீலையில் ருத்ரசாவக ரிஷியின் வரலாறும், இருபத்திரண்டாவது லீலையில் காசியப மகரிஷிக்குத் தத்துவ உபதேசம் செய்து "அபாம ஸோமம்" என்னும் வேத ருக்கிற்குப் பொருள் கூறிய விஷயமும் கூர்ந்து உணரத்தக்கனவாகும்.

இத்தகைய மகிமையுடைய நூலைச் சிவபக்த சிகாமணியும், தியாகராஜ செம்மலர்ச் சேவடி தாங்கும் சென்னியனுமாகிய

பிக்ஷாண்டார் கோயில் பெரும் பண்ணையாளர் ஸ்ரீ ராஜ கோபாலப் பிள்ளை அவர்கள் தமது விடாமுயற்சியால் தேடிச் சம்பாதித்து அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார். ஆதலின், இந்நூலின் மெய்ப்பயனுகும் சிவ ஸாயுஜ்யப் பெருவாழ்வெய் தும் மெய்யடியாரது ஆசியும், தமிழுலகத்தின் பாராட்டும் அவருக்கே உரியனவாகும்.

குஹானந்த மண்டலி,
சென்னை.
நந்தன ௵ ஆடி-மீ
15௳
29—7—1952.

சிவம்.

இங்ஙனம்,

விதேயன்,

N. சுப்பிரமணிய அய்யர்.



பொருளடக்கம்.

## தியாகராஜ லீலைகள்:— முதற்பிரிவு

# தேவலீலை

# ஸ்ரீ தியாகராஜர் கீர்த்தனம்.

## பூர்வி கல்யாணி — மிஶ்ரசாபு

### பல்லவி

. . பம க ரீ ரி ॥ ஸா . ஸா ரி க ரி ஸ நி த ॥
. . பே . றும் . . செல் வ . . த்ப்பா . . கர் . . .

. . ஸ ரி கா கா ॥ க கா ம ரி கா ॥
. . ஊர் செல் . வ . த்தி ரு . வா றர்

. . கத பா . ப ॥ மகா மரிகா ॥ . . ம ரீ . . ॥
. . ப் ர . யோ . ஜ னம் . . என் . ன . . . சோல் ஐ . .

. . . . . ஸா ॥
. . . . . யா

### அநுபல்லவி

. தா நிம தா ॥ ஸ் ஸ்ா ஸ்ா ஸ்ா ॥
. வா ரி . சோ . ரிவேன் என் . ற

. ரீ ஸ்ா ஸ்ா ॥ நி தா நி ம தா ॥
. வார்த்தை . மாத் திரம் . ஒன் . றே

. க் ரி ஸ்ா ஸ்ா ॥ ஸ் நி த த ப பா
. வா ரா தே போல்லா த . வன் .

க மரீ த ரீ ஸ்ா . ஸ் ॥ நி த ம க ரி ஸ த ॥ ஸ ரி கம
. வங. . . . சல் . . வைத் திருக் . கி றீர் . . . .
(பேரும்

### சரணம்

. பா பா . ப ॥ ப பா பா பா ॥ . பத பா . ப ॥
. வாசல் . . நந் திக்கு . . த்தப் . பி . . வரு வோம் . என்

பகா . மதா ‖ . பமகரி ஸா ‖ ஸஸா ஸரி ஸத
றல் . . மனம் . . வலக்கை . யில் அனல் . ஏந் தி .

. ஸ ரிகா . . ‖ . கம தா . த ‖ ஸ் ஸ்ா ஸ் ரி ஸ்ா ‖
. ச்சு டுமே . . . வீ சும் . . அ னலேத் . தள் . ளி .

. தரிஸ்ா . ஸ் ‖ நிதா தபபா ‖ ஸ்ா . நிதமக ‖
. வருவோம் . என் றல் . ம . னம் . வீ . ர . வண் .

ரி ஸா ஸரி ஸத ‖ . ஸரிகா மரி ‖ கமா பா . . ‖
டயத் . து . க்த . . மிக ப.யப் . ப6 . தே . .

(அனுபல்லவியைப்போல்)

வீரவண்டயத்துக்குள்—ஆடு ஆடரவத்தில்
விஷத்தைச் சொரிவேன் என்று
இருக்குதே ஸ்வாமி (பேரும்

இரண்டாவது சரணம்.

பேரைச் சொல்லி நம்பிப்
பிழைப்போம் என்றால் பெரும்
பித்தர் என் றொரு பேரை
வைத்துக்கொண்டிருக்கிறீர்
பித்தரோ தியாகரோ
பேசும் என்றால் மனம்
பெரும் பாவ நாசம் என்
றசைக் கிறீர் ஐயா
எத்தனை சொன்னாலும் உம்மை
விடுவதில்லை
இந்தா இருநீர் என்று தலையை
அசைக்கிறீர் (பேரும்

உ

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர்

# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

(முந்நூற்று அறுபது)

## முதற் பிரிவு

## (தேவலீலை)



ஏழிசையாய், இசைப் பயனாய், இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான் செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழை ஒண்கண் பரவையைத் தந் தாண்டானை, மதியிலா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே.

வங்க மலி கடல் நஞ்சை வானவர்கள் தாம் உய்ய
நுங்கியமு தவர்க் கருளி நொய்யேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோ டெனைப் புணர்த்த தத்துவனைச் சழக்கனேன்
எங்குலக்கப் பிரிந் திருக்கேன் என் ஆரூர் இறைவனையே.

## முன்னுரை.

---

தக்ஷிண கங்கை என்னும் காவிரி நதியினால் மேன்மையடைந்து விளங்கும் சோழ வளநாட்டில் திருவாரூர் என்னும் திவ்ய ஸ்தலமானது மிகவும் பிரசித்தி பெற்றது. இந்தத் திருவாரூர் க்ஷேத்திரத்துக்குக் (1) கமலாலய மாகாத்மியம் (2) நாகர கண்ட மாகாத்மியம் (3) வன்மீகநாத மாகாத்மியம் (4) முசுகுந்தபுர மாகாத்மியம் (5) கந்தபுர மாகாத்மியம் (6) மஹாபுர மாகாத்மியம் (7) ஸ்ரீபுர மாகாத்மியம் (8) க்ஷேத்திரபுர

மாகாத்மியம் (9) தேவாசிரிய மாகாத்மியம் முதலான அனேக ஸ்தல புராணங்கள் வட மொழியில் வரையப் பட்டிருப்பதாய்த் தெரிகிறது. மேற்கூறிய ஸ்தல மாகாத்மியங்களும் புராணங்களும் இப்பொழுது எவ்விடத்தில் இருக்கின்றனவோ தெரியவில்லை. அத்தகைய ஸ்தல புராணங்களுக்குள் தியாகராஜ லீலை என்னும் இந்தப் புராணமானது புண்ணியபுர மாகாத்மியமென்னும் திருவாரூர் ஸ்தலபுராணங்களுள் ஒன்றின் தமிழ் மொழி பெயர்ப்பு என்று தெரிகிறது. இப்படி வட மொழியிலிருந்து இனிய தமிழ் மொழியில் முன்னோர்களால் மொழி பெயர்க்கப்பட்டு விளங்கும் இந்தத் தியாகராஜ லீலையானது 1. தேவலீலை என்றும், 2. உத்தராயண லீலை என்றும் 3. தக்ஷிணாயன லீலை என்றும் மூன்று பிரிவுகளை யுடைய தாய்ப் பற்பல சமயங்களில் பக்தர்களைக் காக்கும் பொருட்டுத் தியாகராஜர் செய்த பற்பல திருவிளையாடல்களையே முற்றிலும் கூறுகிறது. கிருத யுகத்திலும் த்ரேதா யுகத்திலும் தியாகராஜர் செய்தருளிய லீலைகளுக்கு தேவ லீலை என்று பெயர். பிறகு துவாபர யுகத்திலும் கலியுகத்தின் ஆரம்பத்திலும் உத்தராயண காலங்களில் செய்த லீலைகளுக்கு உத்தராயண லீலை என்று பெயர். தக்ஷிணாயன காலங்களில் செய்த லீலைகளுக்கு தக்ஷிணாயன லீலை என்று பெயர். இப்படி மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்ட இந்தத் தியாகராஜ லீலையானது முற்றிலும் தியாகராஜர் பற்பல சமயங்களில் செய்த லீலைகளின் சிறப்பையே கூறுகிறதாக ஸூத முனிவர் நைமிசாரணிய ரிஷிகளுக்குச் சொல்லுவதாய் ஒவ்வொரு லீலையின் ஆரம்பத்திலும் கூறப்படுகிறது.

முன்பு ஒரு ஸமயத்தில் அகண்டரூப முள்ளவராயும், நாச மற்றவராயும், விச்வேசுவர மூர்த்தியாயும், உலகங்களுக்கு நாதனாயும், பார்வதி தேவியாருடன் சேர்ந்தவராயும் விளங்கும் பரமசிவனைக் கைலாஸ ஸ்தானத்தில் பணிந்து ஸந்தோஷமடைந்த ஸூதமுனிவர் அந்தப் பரமசிவனுடைய அருளினாலே ஸகல சாஸ்திரங்களின் தத்துவ ஞானத்தைப்பெற்று அந்த

சங்கரனே முன்பு புண்யவிரத புரமென்னும் திருவாரூர் நகருக்கு அதிபதியாய்த் தியாகராஜ மூர்த்தி எனப்பெயர் பூண்டவராய் பக்தர்களைக்காக்கும் பொருட்டு நான்கு யுகங்களி லும் செய்த லீலைகளின் ஞானத்தை யடைந்து அந்த லீலை களின் ஸாரத்தையே முதலில் கைலாஸ பர்வதத்தில் ஈசனது ஆனந்த ஸபையில் ஸந்தோஷத்துடன் ஸூதர் பாடினர். பிறகு அந்த ஸூத மஹரிஷியானவர் இந்திர சபையில் இந்தத் தியாக ராஜ லீலையைப்பாடினர். பிறகு மற்றொரு காலத்தில் கங்கைக் கரையில் பிருகு மஹரிஷியின் யாகத்தில் வந்து கூடிய அநேக மஹரிஷிகளின் ஸபையிலும் இந்தத் தியாகராஜ லீலைகளை உரைத்தார் என்று தெரிகிறது.



## 1. ஸூதமுனிவருக்கு

## ஸூக்ஷ்ம மார்க்கத்தை உணர்த்திய லீலை.

முற்காலத்தில் பிருகு மகரிஷி என்னும் பெரியார் ஒரு யாகம் செய்தார். அதற்காக வந்து கூடிய சௌனகர் முதலிய முனிவர்கள் ஸூதமாமுனிவரை வணங்கி மஹேச்வரனுடைய திவ்ய சரித்திரத்தைத் தங்களுக்கு உரைக்கவேண்டுமென்று கேட்டனர். அப்போது ஸூதர் பரமேசுவரன் தன் லீலையின் ஸூக்ஷ்மார்த்தத்தை முன்பு தமக்கு உணர்த்தியதாக உரைத்து விட்டு நைமிச முனிவர்களை நோக்கிச் சொல்லலானார்.

தபோதனர்களே,

பிரஹ்ம நிஷ்டர்களும், தேவரிஷிகளும், புரந்தரன் முத லிய தேவகணங்களும், சித்தர்களும், வித்தியாதரர்களும், கந்தர் வர்களும், புண்ணிய சீலர்களும் நிறைந்த கைலயங்கிரியில் உள்ள ஆனந்த சபையில் வீற்றிருக்கும் பார்வதி தேவியின் பாதமலர்களைப் பணிந்து களங்கமற்ற மனத்தோடு நான் முன்பு ஒரு காலத்தில் நைமிச வனத்துக்குத் திரும்பினேன். அப் போது தேவேந்திரன் பிருகஸ்பதி மூலமாக என்னைத்தடுத்து மறுபடியும் மஹேசுவரனுடைய ஆனந்த சபைக்குப் போகச் செய்து கைலாஸபதியின் மேன்மைகளை எல்லோரும் நன்றாக அறிந்து கொள்ளும்படி செய்யவேண்டுமென்று கட்டளை யிட்டான்.

உடனே நான் மிக்க வியப்புற்று, 'ஓ சதக்ரதுவே!' இம் மூவுலகங்களிலும் உமக்குத் தெரியாத விஷயம் ஒன்று மில்லை. மஹாமூடனுயும் நிமிஷத்தோறும் சலிக்கும் புத்தியுடைய வனுகவும் உள்ள நான் மஹேசுவரனுடைய குணங்களை எவ்வாறு உரைக்க வல்லவன்? 18 கோடி கண்டமாயும், 32 கோடி உப கண்டமாயும் உள்ள கைலாஸபதியின் திவ்ய சரித்திரங்களை யான் உரைக்க வல்லவனு? என்று கூறி மனம் நொந்து வாடி னின்றேன்.

அப்போது கைலாசபதி தம் கடைக்கண் பார்வையை என்மேல் செலுத்தி, "ஓ ஸூதரே, ஸகல சாஸ்திரங்களின் தத்துவங்களையும் உணர்ந்தவரே, இப்போது தேவேந்திரன் விரும்புகிறபடி நீர் நமது திவ்ய லீலைகளை இந்த ஸபையில் கானம் செய்வீர். உலக மாதாவாகிய நமது தேவியின் கடாக்ஷத்தினாலும் நமது கடாக்ஷத்தினாலும் உமது மனத்தில் சூக்ஷ்மமான விஷய ஞானம் உண்டாகும். நாம் முற்காலத்தில் தக்ஷிண தேசத்தில் காட்டிய லீலைகளின் சிறப்பை நீர் ஒருவரே உரைக்க வல்லவர். நாம் செய்த லீலைகளின் ரஹஸ்யங்களும் சபைக்கேற்ற விஷயங்களும், நமது ஆலயத்தின் கர்ப்பக்ருஹத்திலும், மண்டபத்திலும், பிராகாரத்திலும், கோபுரத்திலும், நகரத்திலும், ஆங்காங்குள்ள நாடுகளிலும், ஆகாயத்திலும், வாயுவிலும், முச்சுடர்களிலும், ஜலத்திலும், பூமியிலும், தேவ லோகத்திலும், மனுஷ்ய லோகத்திலும், கந்தர்வலோகத்திலும், பாதாள லோகத்திலும், வனத்திலும், குகையிலும் மற்றுமுள்ள இடங்களிலும், நாம் நிகழ்த்திய அற்புதங்களும், உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உமது மனத்தில் விளங்கக்கடவன. மகரிஷிகளும், தேவர்களும், சித்தர்களும், நிறைந்த நமது சபையில் நமது திவ்யலீலையை ஆதியோடந்தமாக உரைக்கத்தக்க திவ்ய ஞானத்தை உமக்கொருவருக்கே யளித்தோம். நமது லீலைகளை படிப்பவர்களும், கேட்பவர்களும், எழுதுபவர்களும், தியானம் செய்பவர்களும் நித்தியமான செல்வத்தை அடைவார்கள். பிணியுற்றவன் பிணி நீங்கி க்ஷேமத்தை யடைந்து பலசாலியாவான். ஸ்வர்க்கத்தை அடைந்த பித்ருக்கள் திரும்பார். புத்திரனற்றவன் நல்ல புத்திரனை அடைவான். கன்னியர்கள் நல்ல கணவர்களை அடைவார்கள். கர்ப்பிணிகள் ஸற்புத்திரரைப் பெறுவார்கள். செல்வத்தை விரும்புபவனுக்குச் செல்வம் வளரும். ஸாயுஜ்யத்தை விரும்புபவன் ஸாயுஜ்யத்தை அடைவான். கல்வியை விரும்புபவன் திவ்ய ஞானத்தை அடைவான். பக்தியுடன் நம் லீலைகளைக் கேட்பவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் சிறந்த சுகமே உண்டாகும். ஸகல

காரியங்களும் கைகூடும்" என்று இவ்வாறு கைலாஸபதி எனக்கு வரமளித்தார்.

அப்போதே எனது மனத்தில் ஸூக்ஷ்ம தத்துவங்களும் பரமேசுவரனுடைய திவ்ய லீலைகளும் ஸ்படிகத்தில் வைத்த நிதிபோல் விளங்கின. நான் கைலாசபதியின் எதிரே நின்று அவர் தியாகராஜ மூர்த்தியாக உலகில் நடத்திய திவ்ய லீலை களை யெல்லாம் கானம் செய்தேன். யக்ஷரும், கந்தர்வரும், நாகரும், தேவரும் ரிஷிகளும் கேட்டுப்பேரானந்தமுற்றனர். தேவதுந்துபி முழங்கிற்று. தேவர் புஷ்பமாரி பொழிந்தனர். தியாகராஜ லீலையின் மகிமையைக்கேட்ட அனைவரும் ஆனந்தக் கண்ணீர் மல்கும்படி பரமானந்தமடைந்தனர். இவற்றையெல்லாம் கேட்டுப் புளகாங்கிதனாயிருந்த தேவேந் திரன் "ஸ்வர்க்கலோகத்தில், நமது 'ஸுதர்மா' என்னும் சபையில் மற்றொருமுறை தியாகராஜ லீலையைக் கானம் செய்யவேண்டும்" என்று ஆஞ்ஞாபித்தான். நானும் அவ் வண்ணமே சுதர்மையை அடைந்து இந்திரன் முதலிய முப் பத்து முக்கோடி தேவர்களும் சித்தரும் சாரணரும், மற்று முள்ள புண்ணியசாலிகள் அனைவரும் கேட்டு ஆனந்திக்கும் படி பரமேசுவரன் லீலைகளைக் கானம் செய்தேன். அமிர் தத்தை உண்டு மெய்யறிவுபெற்ற ஸ்வர்க்கவாசிகளும் அந்த திவ்ய லீலைகளை முற்றிலும் கேட்டு வியப்படைந்தனர். ஸுதர் மையில் வீற்றிருந்து விளங்கிய வேதவியாஸரும், நாரதரும், பாரத்துவாஜரும், விசுவாமித்திரரும், அகஸ்தியரும் புலஸ்தி யரும், தௌம்யரும், தியாகராஜப் பரம்பொருளின் லீலையை அன்று முதல் அங்கங்கே கானம் செய்யலானார்கள்.

இந்த கங்கைக்கரையில் நடக்கும் பிருகுரிஷியின் யாகத்தைச் சிறப்பிக்க வந்து கூடியிருக்கும் மகா முனிவர்களே! நீங்கள் விரும்புகிறபடி பரமேசுவரனுடைய லீலைகளை உங் களுக்குச் சொல்லுகிறேன். மிகவும் கவனமாகக் கேளுங்கள். எல்லா ஜனங்களும் கலியுகத்தில் உய்யும் வண்ணம் பரமேசு

வரன் பிராமணரிடத்திலும், க்ஷத்திரியரிடத்திலும், வைசியரிடத்திலும், சூத்திரரிடத்திலும், ஸங்கர ஜாதியாரிடத்திலும், அளவற்ற காருண்யத்தினால் செய்துவந்த லீலைகளை மூன்றாவது தடவையாக இப்போது உங்களுக்கு நான் சொல்லுகிறேன். இந்த லீலைகளை நீங்கள் நிதிபோலும் மகா மந்திரங்கள் போலும் ஸத்வித்தைபோலும் காப்பாற்றவேண்டும். நியமத்துடன் இவைகளைப் பாராயணம் செய்யவேண்டும். எல்லாப் புண்ணிய கதைகளும், எல்லாத் தீர்த்தங்களும், ஸகல ஆகமங்களும், சகல வேதங்களும், சகல பீஜாக்ஷரங்களும், சகல யந்திரங்களும், சகல கவசங்களும், சகல சக்திகளும், சகல சித்திகளும், சகல சுபங்களும், நிறைந்து விளங்கும் இந்த தியாகராஜ லீலையின் கானமே சகல புராண படனத்தின் பயனை அளிக்கும். நற்கீர்த்தியும் இஷ்டஸித்தியும் வந்து எய்தும்.

“ தடவரியாதனம் போற்றி கருணை
பொழிமுகம் போற்றித் தயங்கோர் பாக
மடவரல் மெல்லியல் போற்றி மன்னு
மிளஞ்சேய் போற்றி மலர்க் கண் போற்றி
நிடவுலகுமேத்து கதிர்வாள் போற்றி
நிறை செல்வத் தியாகராஜர்
நடவு திருத்தேர் போற்றி நம்மை
யாட்கொள்ளும் அஜபா நடனம் போற்றி,”

## 2. நகர நிர்மாணம் செய்வித்த லீலை.

ஒருசமயம் காசிய மகரிஷி ஆயிரம் வருஷம் ஒரு காலால் நின்று நீட்டிய கையுடன் கடுமையான தவம் புரிந்தார். அவர் பக்தியைக் கண்டு மகிழ்ந்த கைலாசபதியான சங்கரர் பார்வதி தேவியுடன் அவருக்குக் காட்சியளித்து அவர் வேண்டியபடி "சாதுக்களுக்குத் தீங்கிழைக்கும் அசுரர்கள் அழியக் கடவர். யாகங்களினால் களிப்படையும் தேவர்கள் வாழக்கடவர்" என்று வரமளித்துவிட்டுக் கைலாசகிரியை அடைந்தார். உடனே மனத்தில் விசுவகர்மாவை நினைக்கவே அவன் கூப்பிய கையுடன் அவர் முன் தோன்றி வணங்கி நின்றான்.

அப்போது பரமேசுவரன் அவனுக்கு ஆசி கூறி அவனை நோக்கி, "விசுவகர்மாவே! ஜம்புத்தீவில் உள்ள பாரத வருஷத்தின் தென்பாகத்தில் காவிரியாற்றின் தென்கரையில் ஒரு திவ்ய க்ஷேத்திரத்தை யடைந்து நாம் ஜீவராசிகளுக்குத் தரிசனம் அளிக்க நிச்சயம் செய்திருக்கிறோம். இப்போதே நீ அங்கேபோய் நகர நிர்மாணம் செய்வாய். அந்த க்ஷேத்திரத்துக்குச் செல்லும் வழியைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. கைலாசமலையிலிருந்து புறப்பட்டு 130 யோசனை தூரம் தெற்கு முகமாகச் சென்றால் உனக்கெதிரில் தபனகிரி தோன்றும். அங்கிருந்து 50 யோசனை தூரம் தென்கிழக்குமுகமாகப் போனால் விந்தியமலையைக் காணலாம். அங்கிருந்து 200 யோசனை தூரம் தெற்கே போனால் சேஷகிரி உன் கண்களுக்குப் புலப்படும். அங்கிருந்து தெற்குமுகமாய் 70 யோசனை தூரம் செல்வாயாகில் மகோததிக்கு மேற்கில் ஸாரமான சோழநாடு விளங்கும். காவிரி நதி பாயும் சோழ நாட்டின் சிறப்பை விண்ணோர்களும் அறிவார்கள். அந்த நாடு முழுவதிலும் தமாலம் (பச்சிலை மரம்) கிருதமாலம் (கொன்றை) புன்னாகம் சரளம் வகுளம் (மகிழமரம்) கேஸரம் (குங்கும மரம்) சாலம் (ஆச்சா) திந்துகம் (தும்பை) கதம்பம் குடஜம் நீபம்

(கடம்பு), கர்ஜூரம் (ஈச்சை), கதளம் (வாழை), நாரிகேளம் (தென்னை), சூதம் (மா) பனஸம் (பலா) முதலிய ஸார விருக்ஷங்களும் பல விருக்ஷங்களும் நிறைந்திருக்கும். மந்தமாருதம் உலாவும் சோலைகளில் சண்பகம், மல்லிகை, குரவகம் (மருதாணி), குந்தம் (குடைமல்லிகை), முதலிய புஷ்பங்களின் தேனையுண்டு களிக்கும் வண்டுகளின் பாடல்கள் இன்பத்தை அளிக்கும். குயில் கூவும் சோலை சூழ்ந்த சோழநாட்டில் நாடகப் பயிற்சி எங்கும் விளங்கும். சிறந்த பசுக்களும், குதிரைகளும், மான்களும், மயில்களும், குயில்களும் விசேஷமாய் எங்கும் காணப்படும். இந்த நாட்டில் எனக்கு இருப்பிடங்கள் அநேகம் உண்டு. அவற்றுள் சோழநாட்டின் கிழக்கேயுள்ள வேணுவனத்தை அழித்து ஒரு சிறந்த நகரமாக நிர்மாணம் செய்வாய். அவ்வனத்தின் நடுவே அனந்த தீர்த்தம், வாமன தீர்த்தம், மங்கள தீர்த்தம், சந்திர தீர்த்தம், ஸரஸ்வதி தீர்த்தம், கமல தீர்த்தம் முதலிய புண்ணிய தீர்த்தங்கள் பல உள்ளன. அவற்றுள் கமலாலயத்தின் கீழ்கரையில் நமது வடிவமாகிய வன்மீக லிங்கமொன்று விளங்குகிறது. அந்தப் பிரதேசத்தை மத்தியாக வைத்துக்கொண்டு வேணுவனத்தை அழித்து நகர நிர்மாணம் செய்வாய். ஒரு யோசனை அகலமும், இரண்டு யோசனை நீளமும், உள்ளதாக ஒரு புரத்தை உண்டாக்குவாய். தென்மேற்குப் பாகத்தில் நமக்கு ஓர் அழகிய ஆலயத்தையும், வடகிழக்கில் மஹாராஜாவின் அரண்மனையையும் அமைப்பாய்.

சதுஷ்டிகா ஸ்வரூபமாய் (சதுர வடிவமாக) நகர நிர்மாணம் செய்து ஒவ்வொரு பத்தியிலும் பத்துப் பத்து வீதிகளும், பன்னிரண்டு பன்னிரண்டு உப வீதிகளும், நாலு வீதிகள் கூடுமிடத்தில் ராஜ வீதிகளும், அமைப்பாய். வஸந்த மண்டபம், கிரீஷ்ம மண்டபம், வார்ஷிக மண்டபம், கார்த்திகை மண்டபம், அபிஷேக மண்டபம், மந்திராஹ்நிக மண்டபம், அலங்கார மண்டபம், கல்யாண மண்டபம், லீலா மண்டபம் முதலிய மண்டபங்களும், பாகசாலை, திரவியசாலை, கோசாலை, கொடிமரம், மதில்கள், கோபுரங்கள், குளங்கள், கிணறுகள்,

மேடைகள், படிகள், சுபகாரியங்களைச் செய்யும் பெரிய இடங்கள், சிறிய இடங்கள் முதலியனவும் நிறைந்த சிறந்த ஆலயத்தை நமக்கும் நமது தேவிக்கும் கணேசன், ஷண்முகன் முதலிய பரிவாரங்களுக்கும் தக்கவாறு அமைப்பாய்.

ராஜ சபை, மந்திரி சபை, ஆலோசனை சபை, அபிஷேக சாலை, அலங்கார சாலை, போஜன சாலை, சங்கீத சாலை, நர்த்தன சாலை, சயன சாலை, கோசாலை, குதிரைச் சாலை, யானைச் சாலை, ரத சாலை முதலிய சாலைகள் நிறைந்த ராஜ பவனத்தை அமைப்பாய். காவலாளிகள் சூழ்ந்த வீதிகள் தோறும் ஆகாயத்தை அளாவிய மாடிகளும், ஸ்வர்ண மேடைகளும், நவரத்னங்கள் இழைந்த சயனஸ்தலங்களும் நிறைந்தனவாக, ஜனங்களின் வாசஸ்தலங்களையும் அமைப்பாய். வாவிகளும், பொய்கைகளும், சோலைகளும் சூழ்ந்து குளிர்ச்சி பொருந்தி விளங்கும் அந்நகரத்தைச்சுற்றிலும் பகைவரால் தீண்ட முடியாத அகழிகளையும், யந்திரங்களும் காவலாளிகளின் இருப்பிடமும் மறைவாக இணைக்கப்பட்ட உறுதியான மதிள்களுடன் கூடிய கோட்டை யணியையும் அமைப்பாய். தோரணங்களும், த்வஜ படங்களும், நிறைந்த ராஜ வீதிகளில் நீர் தெளித்தலும் புஷ்பாலங்காரமும் எப்பொழுதும் நிறைந்து வானவரும் மண்ணவரும் வியக்கத்தக்கபடி நகரத்தை அமைப்பாய்.'' என்று கட்டளையிட்டார்.

அப்போது அவரது பாதகமலங்களை மனத்தில் தியானித்து அவர் உரைத்தவற்றை விடாமல் கவனமாய்க்கேட்டு வந்த விசுவகர்மன் காவிரியின் தென் கரையில் உள்ள வேணுவனத்தின் அருகே வந்து நின்று வலக்கையை நீட்டிக் கொஞ்சம் அசைத்து வாயினால் ஒரு மந்திரத்தை உச்சரித்தான். நிமிஷ நேரத்துக்குள், பெருங்காடாக இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோயிற்று. அமராவதி போலவும், அளகை போலவும், போகவதி போலவும் மிக்க சிறப்புடன் கூடிய ஒரு நகரம் பூமியிலிருந்து வெளியே கிளம்பிற்று. தமது லீலைக்குத் தக்கபடி எவ்வித அழகுடன் அமையவேண்டுமென்று பர

மேசுவரன் விசுவகர்மாவுக்கு உத்தரவிட்டாரோ, அதைக் காட்டிலும் ஆயிரம்பங்கு அதிக அழகு வாய்ந்ததாக ஒரு நகரத்தை அவன் நிர்மாணம் செய்தான்.

நெடு நாளாயிருந்த வேணுவனம், மறைந்து திடீரென்று அங்கே ஒரு நேர்த்தியான நகரம் தோன்றுவதைக்கண்ட தேவர்களும், முனிவர்களும், மனிதர்களும் வியப்புற்று "இங்கே பிரமேசுவரனுடைய ஸாக்கித்தியம் உண்டாகும்போல் தோன்றுகிறது. இல்லாவிட்டால் இப்படிப்பட்ட நகரம் உண்டாவதற்குக் காரணமில்லை. நாம் ஈசனை அப்போது தரிசிப்போம்" என்று நிச்சயம் செய்து கொண்டும் சில சில புண்ணிய தீர்த்தங்களின் கரைகளில் யோகஞ் செய்துகொண்டும் ஈசுவரனுடைய ஆவிர்ப்பாவத்தை எதிர் நோக்கியும் இருந்தனர்.

## 3. தியாகராஜராய்த் தோன்றிய லீலை.

ரத்தினங்களையும் முத்துக்களையும் வாரிக்கொண்டு அலை வீசும் காவிரி நதியின் ஜலப்பெருக்கினால் குளிர்ந்து விளங்கும் சோழ நாட்டின் கிழக்குத் திசையில் வாக்காலும் மனத்தாலும் கருத வொண்ணாத அமைப்புடன் கூடி விளங்கும் அந்நகரைக் கண்டு பணிந்து தேவர்களும் முனிவர்களும் புண்யவ்ரத க்ஷேத்திரமென்றும், ஸ்ரீபுரமென்றும், திருவாரூரென்றும், பெயரளித்தார்கள். அப்போது நாரதர் அங்கே தோன்றிய ரிஷிகளைக்கண்டு 'கைலாசபதி அதி சீக்கிரத்தில் இங்கே ஆவிர்ப்பவிக்கப்போகிறார். அவர் பாத கமலங்களைப்பூஜிப்பதற்காக நான் முன்னமே இவ்விடம் வந்துவிட்டேன்' என்று சொல்லும்போதே அவருடைய கட்டளைப்படி புருஹூதன் முதலிய தேவர்கள் அந்தப்புண்ணிய நகரத்துக்கு வந்து சேர்ந்தனர். இவ்வாறு தேவர்கள் வந்து கூடுவதைக்கண்ட மானவர்களும் எண்டிசைகளிலிருந்தும் விரைவாக ஓடிவந்து தென்றிசைக்கே ஒரு சிறப்பு உண்டாகப்போகிறதென்று களிப்புடன் பரமேசுவரனுடைய குணங்களைத் துதிக்க ஆரம்பித்தார்கள்.

சிலர் ஆலயத்தின் அழகைக்கண்டும், சிலர் கோபுரங்களின் சிற்ப மேன்மையைக்கண்டும், சிலர் மண்டபங்களின் அழகைக்கண்டும் வியப்புற்று, "இந்நகர் போல் ஒன்றை மூவுலகிலும் எங்குங்கண்டதில்லை" என்று புகழ்ந்தார்கள்.

நாரதர், காசியபர், அகஸ்தியர், வசிஷ்டர் முதலிய முனிவர்கள் வல்மீகஸ்வரூபியைப்பணிந்து ஆலயத்தின் நடுவில் பரஞ்சுடர் உதிக்கப்போகும் சுபலக்கினத்தை எதிர் பார்த்திருந்தார்கள். தேவர்கள் சுவர்ண கலசத்தையும் ரத்தின கலசத்தையும் கோபுர வாயிலின் இரு புறங்களிலும் பூர்ண கும்பமாக வைத்தார்கள். மனுஷ்யர்களெல்லாரும் தூய்மையான வெள்ளை யாடைகளை அணிந்துகொண்டு பொரிகளை வீதியில் வாரி இறைத்தார்கள். அக்கினி ஜ்வாலைபோல் விளங்கும் ரத்தினங்களினால் சிலர் தோரணம் கட்டினார்கள். கோபுர வாசல்களிலும், நகரத்தின் கோட்டை வாசல்களிலும் ராஜ

வீதிகளிலும் சிலர் சந்தனக்குழம்பைத் தெளித்தார்கள். புஷ்ப மாலைகளால் சிலர் திருவாரூர் நகரை அலங்கரித்தார்கள். கொடிச்சீலைகளை விரித்துக் கட்டினார்கள். பதினாயிரக்கணக்கான பிராமணோத்தமர்கள் வந்து கூடி வேதமோதத் தொடங்கினார்கள். சிலர் ஸ்வஸ்திவாசனங்களை மொழிந்தனர். அரம்பை முதலிய தேவமாதர் நர்த்தனம் செய்தனர். மங்கள வாத்திய கோஷமும் தேவதுந்துபி நாதமும் பத்து திசைகளிலும் பரவின. சித்தரும், கந்தர்வரும், கின்னரரும், வித்தியாதரர்களும் இவ்வித கோலாகலத்தைக்கண்டு அங்கு வந்து கூடினார்கள். மற்றும் பல அலங்காரங்களினால் விளங்கும் அந்தப் புண்ணிய நகரத்தில் கைலாசபதியின் உதயத்தை எல்லோரும் எதிர் பார்த்தினர்.

வருஷாரம்பமாகிய வசந்த ருதுவில் பௌர்ணமி திதி கூடிய சுபதினத்தில் குரு சந்திர யோகம் சேர்ந்த கடக லக்கினத்தில் கைலாசபதியான பரமேசன் புண்ணியபுரமென்னும் திருவாரூர் நகரின் நடுவில் தியாகபதியாகத்தோன்றி உலகினருக்கு நன்மையளிக்க வேண்டுமென்று சங்கற்பம் செய்துகொண்ட தருணத்திலேயே திருவாரூர் தேவாலயத்தின் நடுவே வசிஷ்ட பாகமென்னும் வேத மேடையில் வேதாந்தப்பொருளாகிய சங்கார லிங்கவடிவமாகவும் தியாகராஜ வடிவமாகவும் தோன்றினர். கோடி சூரியப்பிரகாசத்தோடு விளங்கும் ஈசனைக் கண்டு தேவர்களும், முனிவர்களும், மனுஷ்யர்களும் கூப்பிய கையுடன் துதித்தனர். ரத்நாபரணங்களினால் விளங்கும் தியாக ராஜாவின் திருமேனியைக்கண்டு மகிழ்ந்து,

“ஸர்வலோகேசுவர, மகாதேவ, திரிமூர்த்திஸ்வரூபியே, புவனேசுவரனே, விசுவ மூர்த்தியே, விசுவ கர்த்தனே, ஸர்வ சிரேஷ்டனே, ஜகந்நாயக, ஜன்மமற்றவரே, ஜரையற்றவரே, மரண மற்றவரே, ஞானஸ்வரூபியே, ஞானத்தை யளிப்பவரே, ஞானத்தால் காண வல்லவரே, தேஜோ நிதியே, உமாபதியே, நீலகண்ட, அவ்யக்தரூப, தேவதேவ, பாஸ்கரரூப, பஹுரூப, முஞ்ஜபதே, விசுவரூப, விரூபாக்ஷ, வ்ருஷகர்ப, வ்ருஷபதே, ப்ராஹ்மணவக்த்ய, சூலபாணே, திரிபுரஹர, யக்ஞபாக,

த்ரீநயன, சூர்ய சந்திர ஸ்வரூபியே, பரம மூர்த்தியே, மஹத் பதே, ஹிரண்யவர்ண, ஹிரண்யகவச, பூதபதியே, ஸர்வலோக ஸேவ்ய, ஆதி மூர்த்தியே, பஸ்ம ரூபியே, அக்கினி ஸ்வரூபியே, தக்ஷயாகமழித்தவரே, பக்தப்பிரிய, பக்தவரத, கைலாச நிலய, ஆரூர்நாத, திக்பாலகஸ்வரூப, பூமிஸ்வரூப, கபாலஹஸ்த, காமனை யெரித்தவரே, சந்திரசேகர, கங்காதர, ஜபப்பிரிய, ஸ்வரப் பிரிய, வேதப்பிரிய, வ்ருஷத்வஜ, ஈசான, சங்கர, காலஸ்வ ரூபியே, காலகால, காலவிநாயக, சுந்தரரூப, பைரவரூப, பர்வத வாஸ, வ்ருஷபவாகன, பூதபவ்யஸ்வரூப, மங்களதாயக” என்று துதிசெய்தார்கள். 'தேவர்கள் தூரிய வாத்தியம் முழங் கினர். புஷ்பமாரி சொரிந்தனர். திசைகளெட்டும் நிர்மலமாய் விளங்கின. குளிர்ந்த காற்று வீசிற்று. அக்கினி ப்ரதக்ஷிண மாக ஜ்வலித்தான். தேவர்களின் மனமும், மகரிஷிகளின் மன மும், சாதுக்களின் மனமும், சந்தோஷத்தை அடைந்தன. பூவுலகின் பாக்கியமே தியாகராஜா என்று சிலர் களித்தனர். சோழ நாட்டுக்குலதெய்வமென்று சிலர் கூத்தாடினர். நாரதர் தமது வீணையினால் பரமேசன் குணங்களைப் பலவாறு கானம் செய்தார். காசியபர், அகஸ்தியர், வசிஷ்டர் முதலிய ரிஷிகள் காவிரி நீராலும், மகோததியின் தீர்த்தத்தாலும் கங்கா தீர்த் தத்தாலும், ஆலய சம்புரோக்ஷணம் செய்து ஸ்வஸ்திபடனம் படித்துப் பலிபீடத்தை அமைத்து, சைவாகம முறைப்படி மந்திர கலாபங்கள் குறையா வண்ணம் பூஜாவிதான மென்னும் முறையையும் செய்து தியாகராஜ மூர்த்தியை முக்காலத்திலும் பூஜித்துத் தொழுதுவந்தார்கள். கைலாசபதியின் தரிசனத்துக் காக வெகு காலமாகத் தவஞ் செய்திருந்தவர்களும், தமது யோகங்களை முடித்துவிட்டு நேரில் தியாக மூர்த்தியைக் கண் ணாரக்கண்டு நற்பதவியடைந்தனர். மண்ணவரும், விண்ண வரும் ஈசனைக்கண்டு பணிந்து தமது பாபங்களைத் தொலைத்து விட்டு நற்கதி யடைந்தனர்.



## 4. திருவாரூர்ச் சிறப்புரைத்த லீலை.

கைலாசபதியானவர் தியாகராஜ மூர்த்தியாகப் புண்ணிய புரியாகிய திருவாரூரில் விளங்குகையில் பிரமனும் திருமாலும் அங்கே வந்து தியாகேசரைப் பணிந்து துதித்தனர். அப்போது வசிஷ்டர் தமது சிஷ்யர்களுடன் அவ்விடம்வந்து தியாகேசரையும், திருமாலையும், திசைமுகனையும் கண்டு, "இந்த க்ஷேத்திரத்திலேதான் முதல் தடவையாக மும்மூர்த்திகளையும் நான் ஒருங்கே கண்டேன். பல்லாயிரம் வருஷ காலம் தவஞ்செய்து காணும் மும்மூர்த்திகளையும் இங்கே சுலபமாகக் கண்ட நானும் என் சிஷ்யர்களும் மஹா பாக்கியம் செய்தவர்கள். இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தின் பெருமையை நாங்கள் கேட்க விரும்புகிறோம். உங்கள் மூவருள் யார் உரைத்தாலும் அதுவே தொண்டருக்குப் பெருஞ் செல்வமாகும்" என்று பிரார்த்தித்தார். பிரமதேவர் அப்போது "இந்த ஸ்தலத்தின் பெருமையை உரைக்க வேண்டுமாயின், தியாகேசனே கருணை புரிய வேண்டும்" என்று கூறினர். தம்மாலும் முடியாதென்று நாகசயனரும் உரைத்தார். இருவரும் இவ்வாறு கூறக்கேட்ட வசிஷ்டர் பரமேசனை மறுபடியும் பணிந்து துதித்து, "அடியார்களிடம் கருணைகொண்டு தேவரீரே புண்ணியபுரியின் மகிமையை உரைத்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார். வசிஷ்டருடைய பிரார்த்தனையைக் கேட்ட தியாகேசர் மகிழ்ந்து புன்சிரிப்புடன் அடியில்வருமாறு கூறலானர்:—

"இவ்வுலகில் முக்கியமாயுள்ள 24 இடங்களில் நான் சுயம்பிரகாச லிங்க வடிவமாகவும், வியக்த வடிவமாகவும், அவ்யக்த வடிவமாகவும், திவ்ய வடிவமாகவும் விளங்குகிறேன். அந்த க்ஷேத்திரங்களின் சிறப்பை வரிசையாகச் சொல்லுகிறேன் கேளுங்கள்:

1. "கைலாசகிரியில் விளங்கும் நமது வடிவத்தை யார் பக்தியுடன் பஜனை செய்கிறாரோ அவர் அன்னதானத்தால் உண்டாகும் பயனையும், சரீர முடிவில் நமது பதவியையும் அடைவார்.

2. "கேதார க்ஷேத்திரத்தில் விளங்கும் நமது வடிவத்தை நேரிற்கண்டு வலம்வந்து துதிப்பவர்களுக்கு யாகம் செய்த பல னுண்டாகும். மறுபிறப்பு இல்லை. அஞ்ஞானம் நீங்கும்."

3. "காசி க்ஷேத்திரத்தில் விளங்கும் நமது லிங்க வடிவத்தைத் தரிசிப்பவர்கள் சிவராத்திரி விரதத்தை அனுஷ்டிப்பதால் உண்டாகும் பலனை யடைவார்கள். அஞ்ஞானம் நீங்கப் பெற்றுச் சரீர முடிவில் நமது ஸாயுஜ்யத்தை அடைவார்கள். தமது வாழ்க்கையை நன்றாக நடத்துவார்கள்."

4. "மகாகாள க்ஷேத்திரத்தில் விளங்கும் நமது லிங்க வடிவத்தைத் தொழுபவர்கள் கங்கா ஸ்நான பலனையடைவார்கள். மோகத்தை நீக்கி நமது பிரத்யக்ஷத்தையும் பெற்று வாழ்வார்கள்."

5. "விந்திய மலையில் விளங்கும் நமது சுயம்பிரகாச வடிவத்தைக் கண்டு துதிப்பவர்கள் நமது ஸஹஸ்ரநாமங்களைச் சொல்லிப் புஷ்பார்ச்சனை செய்பவர்கள் அடையும் பலனை யடைவார்கள். குஷ்டம் முதலிய கொடிய நோய்களும் நீங்கப் பெறுவார்கள்."

6. "பிரதிஷ்டானபுரத்தில் விளங்கும் நமது வடிவத்தைக் கண்டு வலம் செய்பவர்களுக்கு ஆருத்ரா தரிசன பலன் உண்டாகும். எல்லாப் பாபங்களும் ஒழியும்."

7. "அருணகிரியில் விளங்கும் நமது வடிவத்தைக்கண்டு வில்வார்ச்சனை செய்பவர்கள் புஷ்ப கைங்கர்யம் செய்பவர்கள் அடையும் பலனை அடைவார்கள். சிறந்த செல்வத்துடன் பூமியில் வாழ்ந்து பிறகு சிவஸாயுஜ்யத்தை அடைவார்கள்."

8. "விருத்தாசலத்தில் விளங்கும் நமது மூர்த்தியைப் பஜனை செய்பவர் பாலபிஷேகம் செய்வித்த பலனை யடைவர். நினைத்த காரியம் அவருக்குக் கைகூடும்."

9. "கோபர்வதத்தில் விளங்கும் நமது மூர்த்தியைக் கண்டு பணிபவர்கள் நியமத்துடன் லக்ஷம் தடவை ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஜபஞ்செய்பவர்களுக்கு உண்டாகும் பலனை அடைவார்கள்."

10. "காஞ்சி க்ஷேத்திரத்தில் விளங்கும் நமது திவ்ய வடிவத்தைக் காண்பவர் நான்கு வேதங்களையும் பாராயணஞ் செய்பவர் அடையும் பலனை அடைவார். சிறந்த செல்வமும் ஜயமும், நல்ல மக்கட்பேறும் அவருக்கு உண்டாகும். குடும்ப மாயையை நீக்கி நமது பதவியை அவர் அடைவார்."

11. "காளஹஸ்தி யென்னும் தக்ஷிண கைலாஸத்தில் விளங்கும் நமது வடிவத்துக்குத் தொண்டு செய்பவர்களுக்கு நினைத்த காரியம் நிறைவேறும். யோக பலனையடைந்து மாயை நீங்கி சிவஸாலோக்கியபதவியை அடைவார்கள்."

12. "ஜம்புகேசுவர க்ஷேத்திரத்தில் ஜம்புலிங்கேச வடிவமாகத் தோன்றும் நமது பாதத்தை வணங்கியவர்கள் பூப்பிரதக்ஷிணம் செய்தவர்களின் பலனை அடைந்து முடிவில் ஈசுவர வடிவத்தைக் காண்பார்கள்."

13. "பஞ்சநத க்ஷேத்திரத்தில் பிரகாசிக்கும் நமது வடிவத்தைக் கண்டு தொண்டு செய்பவர்கள் புராணங்களைக் கேட்பதனால் உண்டாகும் பலனை அடைவார்கள். பகைவரை ஜயித்து மன்னர்பதம் பெறுவார்கள், நீடூழிகாலம் நிலைபெற்று வாழ்வார்கள்."

14. "அர்ஜ்ஜுன க்ஷேத்திரத்தில் விளங்கும் லிங்க வடிவத்தைக் கண்டு தொழுபவர்கள் ஸன்னியாச ஆச்ரமத்தை அடைந்து அதன் தர்மம் அழியாவண்ணம் ரக்ஷித்த யோகிகள் அடையும் பலனை அடைவார்கள். சிறந்த செல்வத்துடன் விளங்குவதல்லாமல் மெய்ஞானத்தையடைந்து உலகில் மன்னர் தொழ வாழ்வார்கள்."

15. "கும்பேசுவரலிங்கமாய் விளங்கும் நமது உருவத்தைத் தொழுது தியானம் செய்பவர்கள் பசுரக்ஷண பலனை அடைவார்கள். பிரஹ்மஹத்தி முதலிய கொடிய பாபங்கள் நீங்கிச் சிறப்புடன் வாழ்ந்து முக்தி பெறுவார்கள்."

16. "சிதம்பரம் நடன சபையில் விளங்கும் நமது திவ்ய உருவத்தைத் தரிசிப்பவர்கள் பஞ்சகாலத்தில் பிராமணரைக்

காப்பாற்றிய பலனை அடைவார்கள். குடும்ப மாயை நீங்கித் தத்துவ ஞானம் பெற்று நமது பதவியில் ஐக்கியமுற்று வாழ்வார்கள்.''

17. ''மாயூர க்ஷேத்திரத்தில் மயூரலிங்க வடிவமாகத் தோன்றும் நம்மைத் தரிசித்து வலம் வருபவர்கள் தடாக நிர்மாணம் செய்தவர்களின் பலனை யடைவார்கள். அவர்களுக்கு எல்லாப் பாபங்களும் நீங்கி மனத்தில் தத்துவ ஞானம் உதிக்கும். பிறகு நமது பதவியில் ஐக்கியமுற்று வாழ்வார்கள்.''

18. ''வேதாரணிய க்ஷேத்திரத்தில் விளங்கும் நமது திவ்ய வடிவத்தைக் கண்டு பணிபவர்களுக்குத் தேவாலய ப்ரதிஷ்டை செய்த பலனுண்டாகும். பூர்வ பாபமும் இனி ஏற்படும் பாபமும் ஒழிந்துவிடும். சுபங்களுடன் இவ்வுலகில் வாழ்ந்து முக்தியடைவார்கள்.''

19. ''விஷ்ணுபுர க்ஷேத்திரத்தில் விளங்கும் நமது அழகிய உருவத்தைக் கண்ணால் காண்பவர்களுக்குப் பூரக்ஷண பலனுண்டாகும். அவர்கள் ஜயத்துடன் கூடி திக்பாலகர்கள் போல் விளங்குவார்கள்.''

20. ''ஸ்ரீ சுந்தரபுர க்ஷேத்திரத்தில் விளங்கும் நமது உருவத்தைப் பணிபவர்கள் நித்யதான நைமித்திகதான பலனை அடைவார்கள்.''

21. ''ஹாலாஸ்ய க்ஷேத்திரத்தில் விளங்கும் ஈசுவர வடிவத்தைத் தரிசிப்பவர்கள் நோயுற்றவர்களுக்கு ஔஷத தானம் செய்த பலனை அடைவார்கள்.''

22. ''ஸ்வாயம்புவ க்ஷேத்திரத்தில் விளங்கும் நமது ஸ்வரூபத்தைத் தரிசனம் செய்பவர்களுக்கு வித்தியாதான பலன் உண்டாகும். வர்ணாசிரம தர்மங்களின் சித்தியுண்டாகும். மங்களங்களைப்பெற்று அவர்கள் நீண்டகாலம் உலகில் வாழ்வார்கள்.''

23. "பிமேசுவர க்ஷேத்திரத்தில் விளங்கும் நமது மூர்த்தியை வணங்கித் துதிசெய்பவர்களுக்கு மணிகர்ணிகா நதிக்கரையில் செய்த தர்மபலனுண்டாகும். அவர்கள் பொங்கு நீருலகாண்டு முடிவில் நமது பதமெய்துவார்கள்."

24. "புண்ணிய விரத க்ஷேத்திரமாகிய இந்தத் திருவாரூர் நகரில் விளங்கும் நமது மூர்த்தியைத் தரிசிப்பவர்களுக்கு முற்கூறிய 23 க்ஷேத்திரங்களிலும் எவ்வளவு நன்மைகள் உண்டாகுமோ அவ்வளவு நன்மைகளும் உண்டாகும். எல்லாப் பாபங்களும் ஒழியும். இந்தப் புண்ணியஸ்தலத்தின் மகிமையை முற்றிலும் என்னாலும் சொல்ல இயலாது. இந்தத் தியாகராஜ க்ஷேத்திர மகிமையை உரைப்பவர்கள் வெண்குடை நிழலில் பூமியை ஆள்வார்கள். எவ்விதமான துன்பத்தையும் அடையார்கள். நமது பதமே அவர்களுக்கு இடமாகும். தேவர்கள் வீற்றிருக்கும் வானுலகையும் அடைவார்கள், தானபலனையும், யாகபலனையும், தீர்த்த பலனையும், லிங்கதரிசன பலனையும் அடைவார்கள். தீவினையை ஒழித்து இமையவருடன் நமது பதத்தில் வாழ்வார்கள். எங்கும் நிறைந்த காரணப்பொருளைக் கண்டோமென்ற மகிழ்ச்சியை அடைவார்கள். அஷ்ட ஐசுவரியங்களையும் பெற்றுச் சிறப்புடன் வாழ்வார்கள்."

இவ்வாறு தியாகேசரே திருவாரூர் க்ஷேத்திர மகிமையை வெளியிட்டதைக் கேட்ட திருமாலும் திசைமுகனும் முனிகணங்களும் வியப்படைந்து தியாகேசனைப் போற்றிப் பணிந்து தத்தம் இருப்பிடம் சென்றனர். சில முனிவர்கள் அங்கே விளங்கும் ஹம்ஸ தீர்த்தம், கமலாலய தீர்த்தம், சந்திர தீர்த்தம் முதலிய புண்ணிய தீர்த்தங்களில் நிலையாய்த் தவஞ்செய்யத் தொடங்கினர்கள்.



## 5. இமயராஜனுக்கு வரமளித்த லீலை.

எல்லா ஜீவர்களுக்கும் புண்ணியத்தை அளிக்கக்கூடிய திருவாரூரில் கைலாசபதியாகிய பரமேசுவரன் தியாகராஜர் வடிவத்தோடு விளங்கிவருகையில் பார்வதி தேவியானவள் கமலநாயகி என்னும் பெயரோடு அழகிய ஒரு பெண் வடிவம் கொண்டு கமலாலயத்தின் கரையில் பரமேசன் தன்னை மணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று தவம்புரியத் தொடங்கினாள். அது தெரிந்த மலையரசனாகிய இமயராஜன் திருவாரூர் நகரை யடைந்து தியாகராஜனை வாடிய முகத்துடன் பணிந்து போற்றி அஞ்சலி செய்து "ஓ! திரிலோகநாதா, சங்கரா, ஸர்வேசுவரா, எனது விண்ணப்பத்தைக் கருணையுடன் அங்கீகரிக்க வேண்டும். நெடுநாள் வசித்துவந்த வெள்ளியங்கிரியைத் துறந்து இந்தப் புண்ணியபுரிக்குத் தேவரீர் வந்து தோன்றியதுமுதல் கைலாச பர்வதம் பாழாகிவிட்டதுபோலும். தேவர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள், சாரணர்கள், முனிவர்கள் ஆகிய இவர்களுடைய சஞ்சாரம் குறைந்துவிட்டது. இதுவரையில் தவஞ்செய்வதற்கு ஏற்ற இடமென்று பேர்பெற்ற இமாலயச் சார்பையடைந்த ரிஷிகளும் இங்கேயே ஆச்சிரமத்தை அமைத்துக்கொண்டு விளங்குகிறார்கள். இத்தகைய புண்ணிய ஸ்தலத்தை அடைந்து விளங்கும் தேவரீரது சம்பந்தத்தை விரும்பிய என் புத்திரியாகிய பார்வதி கமலாலயத்தின் கரையில் ஒரு பர்ணசாலையை அமைத்துக்கொண்டு கமலநாயகி யென்னும் பெயருடன் உம்மைக் குறித்துத் தவம் செய்கிறாள். கந்தலேபனங்களை ஒழித்துவிட்டுக் கந்தமூலங்களை உண்டு மிக்க நியமத்துடன் தவம் செய்கிறாள். மென்மையான வெண்பட்டுக்களை அணிந்துகொள்ளக்கூடிய இடையில் மரவுரியை உடுத்தி வெயிலையும் மழையையும் பொறுத்துத் தன மனத்தை உமது சரணங்களிலேயே நிறுத்திவிட்டாள். பஞ்சேந்திரியங்களையும் அடக்கிவிட்டு மூக்கின் நுனியில் பார்வையை அமர்த்திக் கைகளை உயர்த்திக்கொண்டு விளங்கு

கிருள். முனிவர்கள் செய்யமுடியாத கடினமான தவங்களையும் புரிய நிச்சயித்துவிட்டாள். முகூர்த்தங்கள், தினங்கள், பக்ஷங்கள், வருஷங்கள் சென்றவருவதை என் பெண் அறிய வேயில்லே. கடினமான தவஞ்செய்வதால் தளிர்போல வாடு கிருள். முன் யுகத்தில் தக்ஷபிரஜாபதிக்கு மகளாகப் பிறந்து ஸதியென்னும் பெயருடன் உம்மை அடைந்தவளே இவள். பிறகு பார்வதியாக அவதரித்து உமது சரீரத்தின் பாதியை அடைந்து விளங்கியவளும் இவளே. இப்போது கமலநாயகி என்னும் பெயருடைய இப்பெண் என் குமாரியாகிய பார்வதியே யாவள். திரிகாலத்திலும் திரிகரணத்தாலும் உம்மை அடைய விரும்பிய இப்பெண்ணின் மீது உமது கடாக்ஷம் எப்போது விழுமோ! தூங்காமல் இரவுகளில் தியானம் செய்வதாலும் கடினமான உபவாசம் இருப்பதாலும் என் பெண்ணின் சரீரம் வாடிப்போகிறது. வனதேவதைகளும், ஜலதேவதைகளும், அஷ்டவசுக்களும், திரிமூர்த்திகளும் என் பெண்ணின் தவத்துக்கு சாக்ஷியாக விளங்குகிறார்கள். ஒப்பற்ற மனத்தூய்மையுடன் என் பெண் புரியும் தவத்தைக்கண்டு வியப்படையாதார் இவ்வுலகில் ஒருவரும் இல்லே. சில சமயங்களில் பரிசுத்தமான உமது நாமங்களை மனனம் செய்கிருள். ஹவ்யகவ்யங்களின் வடிவமாகவும் விருத்தபால உருவமாகவும் சாந்தி கர்மரூபியாகவும் ஸ்வாஹாகார வஷட்கார வடிவமாகவும் யக்ஞஸ்வரூபியாகவும் கோஸ்வரூபியாகவும் கபிலாதேனுவடிவமாகவும் வேதவடிவாகவும், சோகஹர்ஷஸ்வரூபியாகவும் திக்பாலகரூபியாயும் திரிமூர்த்தி வடிவமாகவும் உள்ள உமது திருமேனியை அணையக் கருதிக் கொடிய தவம் செய்கிருள். அவள் உடல் வாடி இளைத்து என்புமட்டும் விளங்குகிறது. பிராமண ஸ்வரூபியாகவும் ஸர்வதேவ ஸ்வரூபியாகவும் உள்ள உமது பாத கமலங்களை இடைவிடாது மனத்தில் தியானம் செய்துகொண்டு இருப்பதால் என் பெண்ணின் சரீரத்தில் பிரஹ்ம ஒளி வீசுகிறது. உமது தியான விசேஷத்தால் சிற்சில சமயங்களில் மயிர்க் கூச்சலே அடைகிருள். மை அணிவதை ஒழித்த என் பெண்

ணின் கண்களுக்கு உமது சரீர காந்தியே மைபோல் விளங்குகிறது. உமது பாதங்களை ராஜ்யமாகவும், ஒப்பற்ற செல்வமாகவும், தாயாகவும், தந்தையாகவும், தோழியாகவும், சுற்றமாகவும், நினைத்து கடினமான தவம்புரியும் என் பெண்மீது உமது கடாக்ஷத்தைச் செலுத்தக்கூடாதா? ஓ! பராபரப் பொருளே, ஸர்வ ஜகத் ஸ்வரூபியே, என் பெண்ணின் நற்குணங்களையும் அவளது தவத்தையுங்கண்டு நீரே அவளை அங்கீகரிக்க வேண்டும். ரஜோகுணத்தையும், தமோகுணத்தையும், மோகத்தையும் அடக்கி நீரே கதியென்று நம்பித் தவம்புரியும் என் பெண்ணை அங்கீகரிக்கவேண்டும்" என்று இமய ராஜன் வேண்டிக்கொள்ளவே, தியாகராஜன் மன்மதனுக்குச் சமமான ஒரு அழகிய வடிவத்தை மேற்கொண்டு புன்சிரிப்புடன் அவன் எதிரில் தோன்றினர். தாமரைபோன்ற அழகிய கண்களுடனும், இரத்தினாபரணங்கள் பூண்ட சரீரத்துடனும், மிருது பாஷியாக விளங்கும் புருஷனை இமயராஜன் தியாகராஜப் பிரமன் என்றே எண்ணி அவர் பாதத்தில் பணிந்தான். யுவ ராஜன்போல் விளங்கும் தியாகராஜனும் இமயராஜனை நோக்கி, "நீர் வேண்டிக்கொண்டதுபோல் உமது பெண்ணாகிய கமல நாயகியை இன்னும் சில தினங்களில் நான் விவாஹம் செய்து கொள்ளுகிறேன். அதைப்பற்றி நீர் இனிமேல் யோசிக்க வேண்டாம். உமது விருப்பம்போல் எல்லாம் சுபமாய் முடியும். ஜீவராசிகளின் நன்மைக்காகவே நான் இந்தப் புண்ணியபுரியிலேயே நிலையாக விளங்குவேன். இங்கிருந்துகொண்டே மூவுலகையும் காத்துவருவேன். இமயமலைச் சார்புக்கும் கைலாசமலைக்கும் மகிமை இன்னும் வளர்ந்துகொண்டே விளங்கும்" என்று சொல்லிவிட்டுத் திடீரென்று மறைந்தார். இமய ராஜன் மனக் களிப்புடன் தன் இருப்பிடம் சென்றான்.

## 6. பார்வதிதேவிக்கு ஆபரணமளித்த லீலை.

இமயராஜன் இமயமலைக்குச் சென்ற பிறகு தலையில் மலர் மாலையையும், காதில் மகர குண்டலங்களையும், கழுத்தில் இரத்தின ஹாரத்தையும், தோளில் பாகுவலயத்தையும், கையில் கடகத்தையும், விரல்களில் மோதிரங்களையும் பூண்டு இடையில் பட்டாடையையும் உடுத்திக்கொண்டு சந்திரனைப் பழித்த முகத்துடன் கூடிய தியாகராஜன் கமலாலயத்தின் கரையில் தவஞ்செய்யும் கமலநாயகியின் முன்னே தோன்றினர். யுவபுருஷ வடிவத்தோடு தனது பர்ணசாலையின் எதிர் முகமாக வருகிற திவ்விய புருஷனைக் கண்ணுற்ற கமலநாயகியானவள் சற்று நேரம் திரும்பிய முகத்துடன் இருந்தாள். அப்போது அவள் யோகத்தை முடித்திருந்த சமயம். அதனால் தனது ஆச்சிரமத்துக்குள் நுழைந்து செல்லும் திவ்விய புருஷனைத் தடுக்கவோ வரவேற்கவோ முடியாத நிலையிலிருந்த கமலநாயகி சிறிது நேரம் ஒன்றும் தோன்றாமல் தத்தளித்தாள். "இந்த யுவ புருஷன் எதற்காக இங்கு வருகிறான்? பர்ணசாலைக்குள் வரவேண்டாமென்று தடுக்கலாமா?" என்று முதலில் யோசித்தாள்.

நமது பர்ணசாலைக்கு அதிதியாக வருபவர் பாலராக இருந்தாலும் யுவபுருஷராக இருந்தாலும் விருத்தராக இருந்தாலும் வரவேற்பதே நமது தவத்துக்கு நன்மையாகும். அதிதியாக வருபவர்களின் வடிவத்தை அறிந்துகொள்ளாமல் தூரத்திலே தடுப்பதும் பாபமாகும். துஷ்ட அதிதிகளை உபசரிப்பதும் தோஷத்துக்கு இடமாகும். யௌவன வடிவமுள்ள நாம் பரமேசனையன்றி வேறு எவ்வித புருஷரையும் பார்ப்பதில்லை என்று விரதம் கொண்டிருக்கிறோமே. தவம்புரியும்போதும் யோகம் செய்யும்போதும் கோபமோகங்களை ஒழிக்க வேண்டுமே. நெடுநாளாக இவ்விடத்தில் பரமேசனைக் குறித்து நாம் தவம் செய்கிறோம். இதுவரையில் இங்கே அதிதியாக ஒரு

வரும் வந்ததில்லையே. எவ்விதமான துன்பமும் நேரிட்ட தில்லையே. வெகுதூரத்தில் வரும்போதே 'ஒரு பெண்ணின் ஆச்சிரமம் இது' என்று அதிதிகள் எல்லாரும் ஒதுங்கிவிடுவார்களே. இன்றுதான் நமது பர்ணசாலைக்கு இந்த யுவ புருஷர் அதிதிபோல் வந்திருக்கிறார். இவரை உபசரிக்கவும் மனம் துணியவில்லை. போகும்படி சொல்லவும் சாஸ்திரம் இடங்கொடுக்கவில்லையே. என்ன செய்வேன்! ஈசனையன்றி வேறு எவரும் நம்மிடம் நெருங்கமாட்டார்கள். இவரைப் பார்க்கையில் மனத்துக்குள் சிறிது சந்தேகம் உண்டாகிறது என்று எண்ணி எதற்கும் தியாகேசனே கதியென்று மனத்தில் தைரியத்தைக் கொஞ்சம் நிலைநிறுத்திக்கொண்டு "வாரீர் அதிதியே! இதோ அர்க்கியம். இதோ பாத்தியம். இதோ ஆசனம்! என்று காட்டி உபசரணை செய்து குனிந்த முகத்துடன் கமலநாயகி பர்ணசாலைக்குள் சென்றாள். தியாகராஜாவும் அவளுடைய மனத்தைச் சோதிக்கவெண்ணி, அழகிய புன்முறுவலுடன் ஆசனத்தில் அமர்ந்து "இவ்விதமான கொடிய தவம் புரியும் உனது பக்தியையும், மனோ நிலையையும் கண்டு மகிழ்ந்தேன். நீ விரும்பும் புவனபதி நானே. உன் எதிரில் நிற்கிறேன். உன் தவத்தை இப்போது விட்டுவிடு. உனக்கு ஒரு குறைவும் நேரிடாது" என்று உரைத்தார். அதுகேட்ட கமலநாயகி, "ஓ! யுவ புருஷரே! 'புவனபதி நானே' என்று சொல்லுகிறீர். புவனபதி என்ற வார்த்தைக்கு அரசனென்றும், பரமேசுவரனென்றும் இரண்டு விதமாகப் பொருள் தோன்றுகிறது. பரமேசுவரனைக் குறித்தே நான் தவம் செய்கிறேன். என் மனம் பரமேசுவரனையே நாடுகிறது. பரமேசனையல்லாமல் வேறு எவ்வித புருஷரையும் நான் மனத்திலும் நினையேன். நீர் சொல்லிய பெயரில் எனக்கு ஸந்தேகம் உண்டாகிறது. நான் நினைத்தபடி நீர் பரமேசனாக இருந்தால் என் தவம் நிறைவேறியதென்று களிப்புறுவேன். அவ்வாறு நீர் பரமேசனாக இராமல் வேறு அரச

குமாரராக இருப்பீராகில் எனது பர்ணசாலையை விட்டு ஓடிப் போய்விடுவீர். உயிர்பிழைத்து ஓடக்கடவீர். நீர் என்னுடன் வம்புவார்த்தைகளைப் பேசிக்கொண்டு என் எதிரில் ஒரு விநாடியும் நிற்கக்கூடாது. அப்படி நீர் பரமேசனல்லாது வேறு புருஷனாக இருந்து வெளியே போகாதபக்ஷத்தில் எனது பதிவிரதா மகிமையால் உம்மை எரித்துவிடுவேன். நான் கணவனையே தெய்வமாக நினைத்து வந்தது உண்மையாயின் எனது கற்பினால் உம்மை நான் சபித்துவிடுவேன். பரமேசனையே நான் கணவனாக நினைத்து அவரது விருப்பம்போல் முன் ஜன்மங்களில் நடந்துகொண்டது உண்மையாயின், குருக்களுக்கும், ஆச்சிரமவாசிகளுக்கும், தொண்டருக்கும், வேலைக்காரர்களுக்கும், லிங்கதாரிகளுக்கும், அதிதிகளுக்கும், பந்துக்களுக்கும் அந்தந்தக் காலங்களில் செய்யவேண்டிய உபசாரங்களை நான் பக்தியுடன் செய்தது உண்மையாயின், என் மனம் பரமேசனையே தியானிப்பது உண்மையாயின் நான் சாபத்தினால் அழிக்க வல்லவள்'' என்று கூறவே, யுவ புருஷராக விளங்கும் தியாகராஜர் அவ்வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே ஆசனத்தில் அமர்ந்தார். சாபம் நேரிடுமோ என்று சிறிதும் பயப்படாத அந்தப் புருஷரை நோக்கி, "நீர் எனது தவத்தை அழிக்கவந்த ஒரு மாயாவிபோல் தோன்றுகிறீர். இவ்விதம் நான் வணக்கத்துடன் சொல்லியும் நீர் என் ஆச்சிரமத்தைவிட்டு அகலவில்லை. இப்போதாவது செல்வீர்'' என்று கமலநாயகி உரைத்தபோது, தியாகேசர் புன்சிரிப்புடன் அவ்வாசனத்திலேயே வீற்றிருந்தார்.

அதைக்கண்ட கமலநாயகி கடுஞ் சினம்கொண்டு "எனது ஆச்சிரமத்தை அடைந்து என் தவத்துக்குப் பங்கத்தையுண்டுபண்ணும் உமது தலை இரண்டு பிளவாக வெடிக்கக்கடவது'' என்று சபித்தாள். பரமேசன்மீது அச்சாபம் சிறிதும் பலிக்கவில்லை. அதனால் வியப்படைந்த கமலநாயகி பயந்து 'நாம் அளித்த சாபம் இப்புருஷன்மீது ஏன் பலிக்கவில்லை?'

என்று ஆச்சரியமடைந்தாள். "நமது சாபம் பலிக்காதபடி இவர் ஏதேனும் மாயை செய்தாரோ! அல்லது இவர் பரமேசனுகவே இருப்பாரோ! பரமேசனல்லாத மற்றவரிடம் நமது சாபம் பலியாமற் போகுமா! ஆகையால் இவர் நமது தவத்தைக்கண்டு மகிழ்ந்த கைலாசபதியாகவே இருக்கலாம்" என்று சஞ்சலமுற்று வாடி நின்றனள்.

கமலநாயகியின் மனுேபாவத்தை இவ்வாறு பரிசோதித்த தியாகேசன் அப்போது க்ஷணநேரம் தமது நிஜ வடிவத்தைக் காட்டினர். அதைக்கண்ட தேவியும் ஈசனை வணங்கிக் கை கூப்பி "எனது அபசாரத்தை மன்னித்தருள வேண்டும்" என்று வேண்டினுள். பரமேசன் அதற்கு இசைந்து "உன் மனத்தைச் சோதித்தேன். அதைத் தவிர வேறில்லை. உனக்கு என்ன வரம் வேண்டும்" என்று கேட்டார். கமலநாயகி, "நாதா! மறுபடியும் நீர் என்னை நாயகியாகக் கொள்ளவேண்டும். ஸப்தரிஷிகளின் முன் நமது விவாகம் நடைபெற வேண்டும். அதற்கு உரிய ஆபரணங்களையும் எனக்கு அளிக்கவேண்டும்" என்று கேட்டவுடனே, தியாகராஜனும் மகிழ்ந்து முன் ஜன்மங்களில் ஸதிதேவியாக விளங்கியபோது தரித்திருந்த ஆபரணங்களையும், பார்வதி தேவியாக இருந்து அணிந்த ஆபரணங்களையும் வரமாக அளித்துவிட்டு "அப்படியே நமது விவாஹம் இன்னும் மூன்று நாட்களில் நிறைவேறும்" என்று வரமளித்துவிட்டு அவ்விடத்திலேயே திடீரென்று மறைந்தார். தேவியும் அந்தத் தினத்திலேயே தவத்தை முடித்தாள்.



# ஸ்ரீ கமலாம்பாள் கீர்த்தனம்.

ஸஹானு—மிஸ்ர சாபு

## பல்லவி

· · ரி ரீ ரீ ‖ ரி ரீ க ம ரீ ‖ · · தபா · ம ‖
· · எப்போதும் தவ · ஸி · யாய் · · ஈசா · னி

ம த ப ம க ஸா . ம கா
க கா ம ரி க ரி ‖ ஸ ரி ரி ஸா . ஸ ‖
யழ . க . மா(ய்) க இ ரு க்கும் . . வ

ஸ எ த நி ஸ தா ‖ · · ஸ ரீ · · ‖ ரி ஸ நி ஸா · · ‖
கை · · என் · ன · · · சொல்லும் மா · · · · ·

## அநுபல்லவி

. . த பா மா ‖ த நீ ஸ்ா ஸ்ா ‖ · ரீ ஸ்ா ஸ்ா
· · தப் பா மல் தர · ணி · யில். · தா னு · மே

நி ஸ் த நிஸ் நித பா ‖
பார்த்து வந் · · · தேன்

. . ஸ் ரீ ரி ப் ‖ க் க் ம் ரி ரி ஸ்ா ‖
. . தப்பி . ஓ . நுவ . ரை . யும் .

. ஸ் ரி ஸ் நி நி த த ‖ ப ம ம க க ரி ரி ‖ ஸா
. த வம் . செய் வா . ரை . கா ணேன் . .
(எப்போதும்

## சரணம்

. தா பா பா ‖ ரி க ம பா பா ‖ . . த பா மா ‖
. கால் மேல் கால் போட்டுக் கொண் டு கை யில் . நீ

க கா ம ரி ரீ ||
லப் பூக் கோண் . டு .

. பா ம க மா || ரிரீ ம ரி ஸா || . . ரி ரீ . க ||
. ஜா ல . மாய் ஒரு கை . யை ' ' எக் கில் . . பி

ம பா பா பா ||
டித்துக் கோண் டு .

(அநுபல்லவிபோல்)

ஆயிர தளமத்தி
அஷ்டாங்க யோக சக்தி
அநுதினம் சிந்திப்போர்க்கு
அநுகூல பல சித்தி (எப்)

சரணம் 2

மூன்றுகண்ணைப் படைத்தீர்
முப்புராதிகள் எரித்தீர்
மூவர்க்கு முதல் மூர்த்தி
மூவைந் தெழுத்தீர்
காண வேணும் லக்ஷம் கண்கள்
கமலைப் பரா சக்தியை
கயிலங்கிரி வாஸர்க்கு
கருணாகடாக்ஷ ஸித்தி (எப்)

(முதல் சரணம்போல் இரண்டாவதும் பாடவேணும்)

ஸாஹித்யம் பழமையானது. ஆசிரியர் தெரியவில்லை.
ஸ்வரப்படுத்தியவர்கள்: மருங்காபுரி ஸ்ரீ கோபாலகிருஷ்ணய்யர்
ஸ்ரீரங்கம் ஸ்ரீ V. S. கிருஷ்ணமூர்த்தி ராவ்.

———



திருவாரூர் அன்னதானக் கட்டளை
மணியம் சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் ஞாபகம்

## 7. திருமணம் நடத்திக்கொண்ட லீலை.

இமயராஜன் தனது பெண் கமலநாயகி செய்த அருந்தவத்தைக் கண்டு மகிழ்ந்த தியாகேசன் அவள் முன்னே தோன்றித் திவ்விய ஆபரணங்களை யளித்து மூன்று தினங்களில் அவளை விவாகம் செய்து கொள்வதாக வாக்களித்து மறைந்து போனாரென்னும் செய்தியை நாரதர் மூலம் கேள்வியுற்றான். உடனே தன் தேவிமாருடனும், பரிவாரங்களுடனும் புறப்பட்டு அதிவிரைவில் திருவாரூர் நகருக்கு வந்து சேர்ந்தான். அப்போது நாரதர் கட்டளைப்படி ஸப்தரிஷிகளும், அஷ்ட வசுக்களும், புரந்தரன் முதலான தேவர்களும் வந்து கூடினர். பூலோகத்து மன்னவரும், முனிகணங்களும், சாதுஜனங்களும் எட்டுத் திசைகளிலிருந்தும் புண்ணியபுரிக்கு வந்து சேர்ந்தனர்.

கமலநாயகியாருக்கும் தியாகேசருக்கும் விவாக மகோற்சவம் நிறைவேறப் போவதைக் கேள்வியுற்ற கோடிக்கணக்கான ஜனங்கள் வந்து கூடினர்.

வசிஷ்ட மாமுனிவர் உத்தரவு செய்தபடி புண்ணியபுரியையும், தேவாலயத்தையும் அலங்காரப் பொருள்களினால் மிக்க அழகாக அலங்கரித்தார்கள். ஜகன்மாதாவின் விவாக மகோத்ஸவ சமயத்தில் யார் யார் எந்த எந்தப் பொருள்களை விரும்பக்கூடுமோ அவற்றையெல்லாம் அளிக்கவேண்டுமென்று குபேரன் தனது நவநிதிகளுடனே புண்ணிய விரத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தான். மற்றத் திக்குப் பாலகர்களும் ரத்தினமயமான சத்திரம், சாமரம், ஹாரம், கிரீடம், கரண்டம் முதலிய திவ்விய ஆபரணங்களை எடுத்துக்கொண்டு வந்து தியாகராஜாவின் கலியாண காலத்தில் காணிக்கையாக அளிப்பதற்குச் சமயத்தை எதிர்பார்த்து இருந்தனர்.

இந்திரன் முதலிய தேவர்களும், புரோசனன் முதலிய அசுரர்களும், வானவருக்கும், மானவருக்கும் தகுந்தபடி உப

சரணை நடத்துமாறு சிலருக்கு உத்தரவு செய்தார்கள். சிலர் விவாகத்துக்கு வேண்டிய பொருள்களை ஸ்வர்க்கலோகத்தி லிருந்து கொணர்ந்தனர். கைலமலை போலும், விந்தியமலை போலும் சமைக்கப்பட்ட அன்னராசிகள் மானிட வர்க்கத்தாருக்குத் திருப்தியை அளித்தன.

பணவம், மத்தளம், பேரிகை, ஜில்லிகை, டிண்டிமம், காகளம், முரவம், மட்டுகம் முதலிய வாத்தியங்களின் கோஷங்கள் எண்டிசைகளிலும் நிறைந்தன.

பக்ஷயம், போஜ்யம், லேஹ்யம், சோஷ்யம், காத்யம் முதலிய உணவுகளைப் புசித்து விட்டுப் பிராமணர்களும், தேவர்களும் வேத கானம் செய்தனர். வசிஷ்டர், பர்வதர், விசுவாமித்திரர், புலஸ்தியர், பிருகு, குத்ஸர், காசியபர், தௌம்மியர், காத்தியாயனர் முதலான மகரிஷிகள் விவாகத்துக்குரிய பூர்வ காரியங்களை நிறைவேற்றினார்கள்.

சுவாதி நக்ஷத்திரத்துடன் கூடிய பால்குன சுத்த பௌர்ணமி தினத்தைத் தியாகராஜாவின் விவாஹ நாளாகக் காசியப மஹரிஷி குறிப்பிட்டார். அந்தச் சுபதினத்தில் சுபமுகூர்த்தத்தில் கந்தர்வனுக்குச் சமமான அழகிய திருவுருவத்துடன் விவாஹ மண்டபத்தின் நடுவே தியாகராஜர் தோன்றினர்.

அத்தருணத்தில் கமலாலயத்தின் கரையில் விளங்கும் பர்ணசாலையில் தனியே ஈசனை மனத்தில் தியானித்துக்கொண்டிருக்கும் கமலநாயகியின் அருகே இந்திராணி முதலிய தேவ மாதர்கள் சென்று அவளை வணங்கி, பரமேசுவரனுடைய விவாக கோலாகலத்தை அறிவித்து, கங்காஜலத்தினால் அவளுக்கு மங்கள ஸ்நானம் செய்வித்தார்கள். பிறகு பரமேசனால் வரமாக அளிக்கப்பெற்ற திவ்விய ஆபரணங்களினால் அவளை அலங்கரித்தார்கள். உலகமாதாவாகிய கமலநாயகியாரை ரத்தினப் பல்லக்கில் எழுந்தருளச்செய்து மங்கள வாத்தியங்களுடன் தேவமாதர் தேவாலயத்துக்கு அழைத்துச் சென்றனர். அப்போது லக்ஷ்மி தேவி குடைபிடித்தாள், ஸரஸ்

வதி தேவி சாமரம் அசைத்தாள். இந்திராணி முதலான திக்குப்பாலகர்களின் தேவிகள் மயில்தோகை விசிறியால் விசிறினார்கள். கந்தர்வ மாதர்கள் பாடினர். அரம்பையர் ஆடினர். இவ்விதமான கோலாகலத்துடன் கமலநாயகியார் தேவாலயத்தில் உள்ள விவாக மண்டபத்தில் தியாகராஜாவின் பக்கத்தில் வெட்கி நின்று விளங்கினர்.

கந்தம், பொரி, பூர்ண பாத்திரம், பாலிகை, அங்குரம், தீர்த்த கும்பம் முதலியவற்றால் நிறைவேற்ற வேண்டிய மந்திர காரியங்களை யெல்லாம் வசிஷ்டர் குறைவற நடப்பித்தார். விவாக அக்கினியில் பரமேசுவரன் திருக்கரங்களைக் கொண்டு சாஸ்திர முறைப்படி ஹோமமும் செய்வித்தார்.

அப்போது இமயராஜன் தன் புத்திரியின் விவாகத்துக்காக ஆயிரக்கணக்கான பசுக்களையும், வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் அங்கு வந்திருந்த சுரோத்திரியர்களான பிராமணர்களுக்கு மங்கள காரியசித்திக்காகத் தானஞ்செய்தான். பிறகு "பரமேசுவரனாகிய இந்தத் தியாகராஜ மூர்த்திக்கும் என் பெண் கமலநாயகி தேவிக்கும் விவாக முகூர்த்தம் தடையில்லாமல் சுபமாக நிறைவேற வேண்டும்" என்று இமயராஜன் சங்கற்பம் செய்துகொண்டு விநாயகரையும் தேவர்களையும் முறைப்படி பூஜைசெய்து நியமத்துடன் இருந்து சுப லக்கினம் தோன்றியவுடன் வசிஷ்டருடைய கட்டளைப்படி லோகதம்பதிகளுக்குப் புதிய தம்பதிகளைப் போல் விவாகத்தை நிறைவேற்றிவைத்தான். அத்தருணம் தேவதுந்துபிகள் முழங்கின. தேவர்கள் புஷ்பமாரி சொரிந்தனர். தியாகராஜனையும், கமலநாயகியையும் விவாக மாலையுடன் விவாக மண்டபத்தில் தரிசித்த வானவரும், முனிவரும் பரமானந்த மடைந்து போற்றினார்கள். தியாகராஜன் "எனக்கு எதிரே நிலைபெற்றிருந்த சகல பக்தர்களுடைய மனோரதங்களும் இக்காலத்திலேயே நிறைவேறவேண்டும்" என்று சங்கற்பம் செய்தார். அதனால் ஒவ்வொருவரும் "நமக்கே நல்ல தெய்வம் நமக்கே நல்ல தெய்வம்" என்று தியாகேசனைத் துதித்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனர்.

சாஸ்திர முறைப்படி திவ்ய தம்பதிகளுக்கு விவாகம் முடிந்தவுடன் இமயராஜன் தன் பெண்ணாகிய கமலாம்பிகைக்குத் தங்கச் சலங்கைகள் கட்டித் தொங்கும் நானூறு ரதங்களையும் நானூறு யானைகளையும், சிறந்த ஆபரணங்களையும், பட்டு வஸ்திரங்களையும், ஆயிரம் பசுக்களையும், ஆயிரம் குதிரைகளையும், ஸமானமான வஸ்திர வேஷங்களையுடைய ஆயிரம் தேவப் பெண்களையும், கம்பளக் கூட்டங்களையும், சித்திர வஸ்திரங்களையும், நவரத்தினங்களையும், பக்ஷண பாத்திரங்களையும், பல்லக்கு முதலிய யானங்களையும், பூர்ணசந்திரன் போன்ற பட்டுக் குடைகளையும், நுரைக்கட்டி போன்ற சாமரங்களையும், அளவற்ற தனத்தையும் ஸ்திரீதனமாகக் கொடுத்தான். அவற்றின் அழகைக் கண்டவர்கள் சுவர்க்க லோகத்தையும், அளகாபுரியையும் மனத்தினாலும் சிறந்தனவென்று நினையார்.

இவ்வித ஸ்திரீதனங்களுடன் தேவியோடு விளங்கிய தியாகராஜ மூர்த்தி தம் குளிர்ந்த கண்களால் அனைவரையும் கடாக்ஷித்து விடை கொடுக்கவே அவரவர்கள் ஆதியந்தமற்ற பரம்பொருளாகிய புண்ணியபுரநாதனை வணங்கி ஜன்மபலனை யடைந்து தத்தம் இருப்பிடம் சென்றார்கள். விண்ணுலகில் தேவர்கள் சுகமாக வாழத் தொடங்கினர். ரிஷிகளும் தமது தவத்துக்கு யாதோர் இடையூறும் இன்றித் தியானம் செய்ய ஆரம்பித்தனர். மன்னவர் முதலான மற்ற ஜனங்களும் ஒருவித துன்பமுமின்றி ஆனந்தத்துடன் வாழ்ந்தார்கள். சோழ மண்டலத்தில் தியாகராஜனுக்குத் திருமணம் நடந்தது முதல் உலகில் எல்லா ஜீவராசிகளும் துன்பமின்றி வாழ்ந்தன.

இந்த விவாக மேன்மையைக் கேட்பவர்களுக்கும் சொல்லுபவர்களுக்கும் மன்னர்பதம் கிடைக்கும். துக்கமற்ற சுகத்துடன் நெடுநாள் நீடுலகையாண்டு வாழ்வார்கள்.



## 8. ஆதி சோழ மன்னனுக்கு அரசளித்த லீலை.

தியாகராஜ மூர்த்தி இவ்வாறு புண்ணியபுரியில் தோன்றி விளங்குகையில் திருவாரூரில் உள்ளவர்களும், சோழநாட்டில் வசிப்பவர்களும் நாள்தோறும் தியாகேசனை வணங்கிப் பரமேசனது பெருங்கருணையைப்பெற்றதால் அவர்கள் செய்யும் காரியங்கள் யாவும் தக்க காலத்தில் சிறந்த பலனையளித்தன.

அந்நாட்டில் கல்வியில்லாதவனும், புண்ணிய காரியம் புரியாதவனும், தனதான்யச் செல்வமற்றவனும், இழிதொழில் செய்பவனும், பௌருஷமற்றவனும், க்ஷயரோகமுடையவனும், வாயுரோகமுடையவனும், குஷ்டரோகமுடையவனும், காக்கை வலி நோயுள்ளவனும் இருந்ததில்லை. அப்படியே பாபிகளும், நாஸ்திகர்களும், விநயமற்றவனும், கோபியும் இல்லை. இவ்வளவு பெருமையுள்ள சோழநாட்டுக்கு ஒரு சிறந்த ராஜஸார்வபௌமனை அமைக்க வேண்டுமென்று ஒரு நாள் தியாகராஜர் தம் மனத்தில் எண்ணியிருக்கையில் தேவேந்திரன் ஐராவதத்தின் மீது ஏறிக்கொண்டு திருவாரூருக்கு வந்தான். வெகு தூரத்திலேயே புரந்தரன் யானையினின்றும் இறங்கி 'புண்யபத்ரம்' என்னும் தேவாலயத்தின் நடுவே விளங்கும் தியாகராஜனுடைய பாதகமலங்களைத் தாமரை மலர்களால் அர்ச்சனை செய்து நின்றான். அப்பொழுது அவனுடன் வந்த ஐராவதத்தின் துதிக்கையில் தியாகராஜர் ஒரு புஷ்பமாலையை அளித்து "ஓ! கஜேந்திரனே, இந்தப் பூமாலையை நீ யார் கழுத்தில் சூட்டுகிறாயோ அவனே இந்தச் சோழ மண்டலத்துக்கு ஸார்வபௌமனாக விளங்கக்கடவன். உன் அதிபதியாகிய இந்தத் தேவேந்திரனையே அவனுக்கு மகுடாபிஷேகம் செய்விக்கும்படி நாம் நினைத்துவிட்டோம்" என்று சொன்னவுடன் ஐராவதம் ஈசனைப் பணிந்து, பிரதக்ஷிணம் செய்து ஆலயத்தினின்றும் வெளியேவந்து கொஞ்சதூரம் கிழக்குமுகமாக

ராஜ வீதியில் ஓடிற்று. ஐராவதம் அவ்விதம் ஓடிவருவதைக் கண்ட ஜனங்கள் பயந்தோடினர். துதிக்கையில் புஷ்பமாலையுடன் வரும் தேவயானையை நோக்கிய சிலர் வியப்புற்று "இந்த யானையினால் ஏதோ ஒரு நன்மை உண்டாகுமேயன்றி வீதியில் நடக்கும் ஜனங்களுக்கு ஒரு துன்பமும் நேரிடாது" என்ற நம்பிக்கையுடன் கவனித்து நின்றார்கள். வேகமாக ஓடிய ஐராவதம் கிழக்கிலிருந்து வடக்கே திரும்பி நகரத்தைத் தாண்டி நகரத்தின் அருகேயுள்ள காட்டில் ஒரு மாமரத்தின் அடியே கூப்பிய கையுடன் பலகாலமாக யோகம் செய்துவரும் ஒரு புருஷன் கழுத்தில் அந்த மலர்மாலையைச் சூட்டி அவனைத் தன் மத்தகத்தின் மீது இருத்தி வெகுவேகமாகத் திரும்பி திருவாரூர் ராஜவீதி வழியாக ஓடியது. அதைக்கண்ட ஜனங்கள் ஆச்சரியமுற்றார்கள்.

"காட்டில் இதுவரையில் யோகம் செய்துவந்த ஒரு யோகி நமது சோழ ராஜ்யத்துக்குச் சக்கரவர்த்தியாக விளங்கப் போகிறான்" என்று சிலர் அறிந்தனர்.

ஐராவதத்தின் மீது விளங்கும் புண்ணிய புருஷனைக் கண்ட ஜனங்கள் இவ்விதம் பலவாறு புகழ்ந்து பேசி நிற்கையில் ஐராவதம் அவனைத் தேவாலயத்தின் கோபுர வாசலில் இறக்கிவிட்டது. அப்போது தேவேந்திரன் அவனை எதிர்கொண்டழைத்துச் சென்று தியாகராஜனை வணங்கும்படி செய்தான். அதுவரையில் யோகத்தில் ஞானக்கண்ணால் ஈசனைத் தரிசித்துவந்த அந்தப் புருஷன் அப்பொழுது புறக்கண்ணால் தியாகராஜனைக் கண்டு களித்துத் துதிசெய்து பரமானந்தமுற்றான். அத்தருணத்தில் வசிஷ்ட முனிவர் அங்கே வந்தார். நகரவாசிகளும் அங்குவந்து கூடினர். எல்லோரும் தேவாலயத்தின் அபிஷேக மண்டபத்துக்கெதிரே கூட்டமாக நிற்க வசிஷ்ட மகரிஷி தியாகேசனை வணங்கிக் கண்களை மூடிக்கொண்டு க்ஷணநேரம் தியானம் செய்தார். தியானம் முடிந்தவுடனே அவர் நகரவாசிகளை நோக்கி, "புண்ய வ்ரத நகரவாசி

களே, நான் சொல்வதைக் கேளுங்கள். என்து ஞான திருஷ்டியால் இப்போது இவ்வதிசயத்தை நான் கண்டேன். முன் ஜன்மத்தில் சூரிய வம்சத்தில் ஜனித்த வீரகேது சக்கரவர்த்தி ஒருநாள் பரமேசனிடம் அபசாரப்பட்டதினால், சித்திரசேனனென்னும் கந்தர்வனாகப் பிறந்தான். கந்தர்வலோகத்திலுள்ள போகங்களை விரும்பாமல் பூர்வஜன்ம ஒழுக்க விசேஷத்தால் பரமேசனுடைய பாத கமலங்களையே தியானம் செய்துகொண்டு புண்ணிய ஸ்தலங்கள்தோறும் சஞ்சாரம் செய்து வந்தான். முப்பது வருஷங்களுக்குமுன் இந்தப் புண்ணிய வ்ரத க்ஷேத்திரத்தின் அருகேயுள்ள காட்டில் ஒரு மாமரத்தினடியே கைலாசபதியின் சரணகமலங்களைத் தியானம் செய்துகொண்டேயிருந்தான். இந்த க்ஷேத்திரத்துக்குக் கைலாசபதியாகிய பரமேசன் தியாகராஜ மூர்த்தியாக எழுந்தருளி விளங்கியபொழுது இந்தக் கந்தர்வ புருஷனுடைய யோகமும் சித்தியடைந்தது. தியாகராஜரும் இவன்மீது கருணைபுரிந்தார். ஆதலால் ஐராவதம் இவன் கழுத்தில் மலர்மாலையைச் சூட்டிற்று. இதுமுதல் இவனே சோழமண்டலத்துக்குச் சக்கரவர்த்தியாக விளங்கக்கடவன். இவன் சூரிய வம்சத்து அரசனேயாவான். இவன் யோகியல்லன்; வேடனல்லன்; முனியுமல்லன். இவனைப்பற்றி எவ்விதமான சந்தேகமும் வேண்டாம். ஈசுவர கடாக்ஷத்தை அடைந்த இந்தத் திவ்ய புருஷனே அரசர் கூட்டத்திற் சிறந்தவன்" என்று அவனைப் புகழ்ந்து கூறினர்.

முனிவருடைய வார்த்தைகளைக் கேட்ட புண்ணியபுர வாசிகளெல்லோரும் மகிழ்ந்தார்கள். பிறகு வசிஷ்டர் நல்ல சுபவேளையில் அந்தப் புண்ணிய சீலனுக்கு மங்களஸ்நானம் செய்வித்துச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கச் செய்தார். தேவேந்திரன் இரத்தின கிரீடத்தைக் கொணர்ந்து வசிஷ்டர் கையில் அளிக்கவே வசிஷ்டர் அதைத் தியாகராஜனுடைய பாத பீடத்தில் சமர்ப்பித்துப் பிறகு அந்தப் புருஷனுடைய தலையில் அணிவித்து மகாமந்திரங்களினால் ஜபிக்கப்பட்ட கலசத்தைக்

கையில் வைத்துக்கொண்டு அதில் உள்ள புண்ணிய தீர்த்தத்தால் அவனுக்கு அபிஷேகம் செய்து ஸ்வஸ்தி வசனம் கூறி அவனுக்கு ஆதிசோழ மஹாராசனென்னும் பட்டத்தையும் அளித்தார்.

வேதத்தில் வல்ல வேதியரும் மகரிஷிகளும் ஆசி கூறினர். ஆதிசோழ சக்கரவர்த்தி தியாகராஜனுடைய கடாக்ஷத்தையும் இந்திரன், வசிஷ்டர், முனிவர், பிராமணர் இவர்களுடைய ஆசியையும் பெற்று மகிழ்ந்து இவர்களை நமஸ்கரித்து ஏற்றபடி உபசரித்து அனுப்பினான்.

அவன் வெண்குடைக் கீழ் உலகை ஆளும்போது ஜனங்களுக்கு ஒருவிதமான குறைவும் உண்டாகவில்லை. பிராமணன் க்ஷத்ரியன் வைசியன் சூத்திரன் என்ற நான்கு வருணத்தாரும் தங்கள் ஜாதி தர்மங்களை நன்றாக இயற்றி வந்தார்கள். யாசகர்கள் அம்மஹாராஜனைப் பேசும் கற்பக விருக்ஷமென்று நினைத்தார்கள். பகை மன்னர் தம்மையழிக்கவந்த காலனென்று பயந்தோடினர். நிகரற்ற நற்குணங்கள் பொருந்தியவனாக ஆதிசோழமன்னன் பூமியைப் பரிபாலனம் செய்துவருகையில் ஜனங்கள் யாவரும் தர்ம சிந்தையுடையவர்களாகவும், நோயற்றவர்களாகவும், செல்வவான்களாகவும், மனுநீதி தவறாதவர்களாகவும் தேவர்களிடத்திலும் குருவினிடத்திலும் வேதியரிடத்திலும் பக்தியுடையவர்களாகவும் சிறப்புற்று வாழ்ந்தார்கள். அம்மஹாராஜன் வெகுகாலம் உலகையாண்டு பிறகு தன் குமாரனான சுமதியைச் சிம்மாசனத்தில் அமர்த்திவிட்டு வானப்பிரஸ்த தருமத்தைத் தழுவி அரண்யத்திற்குச் சென்று தியாகேசர் தியானத்தில் எஞ்சிய காலத்தைப் போக்கி வந்தான்.

சுமதி மகா மன்னனும் தன் தந்தை உபதேசித்த ராஜ தர்மங்களை விடாமல் நீதியுடன் அரசுபுரிந்து தியாகேச பக்தியினால் சிறப்புற்று விளங்கினான்.



## 9. பாணத்தை அளித்து அரக்கரை மாய்த்த லீலை.

ஆதிசோழச் சக்கரவர்த்திக்குப் பிறகு அவனது புத்திரனாகிய சுமதி சோழ மன்னன் அரசாட்சி செய்து வருகையில் அவனைக்கண்டு சந்தோஷமடையாத ஜனங்கள் இல்லை. மன்மதனைப்போல் அவன் அழகிற் சிறந்தவன். நிகரற்ற பராக்கிரமம் உடையவன். திக்குப் பாலகருக்கு ஒப்பானவன். எல்லா ஜனங்களையும் சந்தோஷப்படுத்தக்கூடிய பல நற்குணங்கள் வாய்ந்தவன். புத்தியில் பிருஹஸ்பதிக்கு நேரானவன். குபேரன்போல் சிறந்த செல்வமுடையவன். கோபத்தை வென்றவன். படைத் தலைவன் முறைகளை நன்றாகப் பயின்றவன். அரச நீதிப்படி நடக்கும் குணமுடையவன். தேவர்களிடத்திலும், முனிவர்களிடத்திலும், பெரியோர்களிடத்திலும் விசேஷமான பக்தி கொண்டவன். தியாகராஜனுடைய பாதகமலங்களை நாள்தோறும் பூஜிப்பவன். குற்றஞ் செய்பவரிடத்தில் மிக்க கருணையுடையவன். எல்லாக் கலைகளையும் நன்றாகக் கற்றறிந்தவன். ராஜ காரியங்களைச் சரியான காலங்களில் செய்து முடிப்பவன். தர்மத்தையும், நியாயத்தையும் இரண்டு கண்களாகக்கொண்டவன். யுத்தத்திற்கு அஞ்சாதவன். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களையும் நன்கு கற்றறிந்தவன். அதேபோல் நடந்து கொள்பவன். கர்வமற்றவன். விநயம் நிறைந்தவன். சதுரங்க சேனைகளை நடத்தும் முறையை நன்கு அறிந்தவன். தனுர்வேதத்தின் கரைகண்டவன்.

இவ்வளவு நற்குணங்களும் நிரம்பிய சுமதி சோழச் சக்கரவர்த்தி வெண்குடை நிழலில் அரசாட்சி புரிந்து வருகையில் திருவாரூரின்கண் விளங்கும் ஹம்ஸதீர்த்தத்தின் கரையில் மரீசியென்னும் மஹரிஷி ஒரு சமயம் பல முனிவர்களை உதவியாகக்கொண்டு பெரியதொரு யாகம் செய்ய ஆரம்பித்தார்.

அதற்காக சுமதி சக்கரவர்த்தி அளவற்ற திரவியத்தை அளித்ததோடு மந்திரிகளையும் சில வீரர்களையும் அழைத்துக்கொண்டு தானும் அந்தத் தீர்த்தக் கரையை அடைந்து அக்கினிசாலையின் அருகே சென்று கையில் வில்லை ஏந்தி யாகத்துக்கு யாதோர் இடையூறும் நேராவண்ணம் பாதுகாத்து வந்தான். மரீசி மஹரிஷி யாகத்தை மிக்க உத்ஸாகத்துடன் நடத்தலானார். அப்போது கடலொலிபோல் வேதியரின் வேத கோஷம் வானில் எழுந்தது. பிறகு மந்திரங்களை உச்சரித்து மகரிஷியினால் அக்கினி ஜ்வாலையில் ஆகுதி செய்யப்பட்ட நெய் முதலிய ஹவிசுகளின் பரிமளமும் ஆகாயத்திற் பரவியது. அப்போது ஆகாயமார்க்கம் சஞ்சரித்துச் சென்ற சில அரக்கர்கள் கீழே பூமியை உற்று நோக்கினர். உயர்ந்த கோபுரங்களும், விசாலமான மண்டபங்களும் நிறைந்த தேவாலயத்தைக் கண்டு அவர்கள் கடுஞ் சினங் கொண்டனர். நீண்டு அழகிய வீதிகளில் விளங்கும் மாளிகைகளையும், இந்திரன்மாளிகை போன்று விளங்கும் சக்கரவர்த்தியின் அரண்மனையையும் நோக்கிப் பெருமூச்சு விட்டனர். "சில வருஷங்களுக்கு முன் மூங்கிற் காடுகள் நிறைந்தும், பாழடைந்தும் இருந்த இவ்விடத்தில் ஒரு சிறந்த நகரம் விளங்குகிறது. என்ன காரணத்தாலோ! பல குளங்களும், சோலைகளும், லீலாக்ருஹங்களும் நிறைந்த இந்நகரின் அழகையும் அமைப்பையும் பார்க்கும்போது இது விசுவகர்மாவினால் சிருஷ்டிக்கப்பட்டது போலவே தோன்றுகிறது. இப்படிப்பட்ட நன்மைகள் மானிடருக்கு எப்படி உண்டாயின? நமது பெயரைக் கேட்கும்போதே பயந்து ஓடி ஒளிந்து கொள்ளும் ரிஷிகள் இப்போது பயமில்லாமல் கூட்டங் கூட்டமாய் இங்கே நிறைந்து யாகம் செய்கிறார்களே! என்ன அதிசயம் இது! ராக்ஷஸர்களாகிய நாம் ஜீவித்திருக்கையில் ரிஷிகளின் யாகம் நிறைவேறலாமா? எவ்விதமாவது நாம் இந்த யாகத்தை அழித்து ரிஷிகளுக்கு மானபங்கத்தை உண்டாக்கவேண்டும்" என்று அரக்கர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள். அவர்களுள் மாயையில் நிபுணர்களான ஐவர் சற்றுநேரம் யோசனை செய்து மாயா சக்தியினால்

தமது ராக்ஷஸ வடிவத்தை மறைத்துக்கொண்டு ருத்திராக்ஷ மாலையையும் திருநீற்றையும் அணிந்து சிறந்த பிராமணர்கள் போல் வேஷம் பூண்டு யாகத்துக்காக அங்கே வந்திருக்கும் பிராமணக் கூட்டத்திற் கலந்துகொண்டு யாகத்தை நர்சஞ் செய்ய ஏற்ற சமயத்தை நாடியிருந்தார்கள். அவர்கள் அவ்வாறு மாறுவேஷத்துடன் வந்திருப்பதை முதலில் ஒருவரும் கவனிக்கவில்லை.

அவர்கள் இப்படியிருக்க, யாகத்தில் ஸ்வாஹாகார வேளையிலும் உத்யாபக வஷட்கார சமயத்திலும் சில ரிஷிகள் "அரக்கர்களையும் அசுரர்களையும் அழித்து எங்கள் யாகத்தைக் காத்துவரமளிக்கும் தேவனே! உமது திருப்திக்காக இந்த ஆஜ்யாஹுதியைச் செய்கிறோம்" என்னும் மந்திரங்களை உச்சரித்தார்கள். அப்போது அந்த மாயாப் பிராமணராகிய அரக்கர்களுடைய கண்கள் திடீரென்று சிவந்தன. அவர்கள் மனக்கொதிப்புற்று "அற்ப ரிஷிகளே! உங்கள் கர்வத்தை அழித்துவிடுகிறோம்; பாருங்கள்" என்று மனத்தில் நினைத்தார்கள். சற்றுநேரம் வரையில் அவர்கள் பூலோக அந்தணர்களுடன் பேதமின்றி உட்கார்ந்திருந்தனர். ஐவரில் ஒருவன் அகாரணமாகக் கண்களை உருட்டிப் பார்த்தான். நெடுநேரம் வரையில் தமது தமோகுணத்தை அடக்க முடியாமல் அவர்கள் பரிதபித்து மனம் வாடினர். ஒருவர் முகத்தை மற்றொருவர் அடிக்கடி பார்ப்பதையும் அவர்கள் சிற்சில ஜாடைகள் செய்து கொள்வதையும் வேத ஒலி கேட்கும்போது பொறாமைகொள்வதையும் அருகே கவனித்துவந்த வேதியர்கள் அந்த ஐந்து பேர்கள் மீதும் சந்தேகங்கொண்டு அவர்களுடைய நடவடிக்கைகளைப் பற்றி வசிஷ்டர் முதலிய மகரிஷிகளிடம் தெரிவித்தார்கள். உடனே முனிவர்கள் அந்தப் பாபிகளின் மாயா சேஷ்டைகளையெல்லாம் சுமதி மகாராஜனிடம் தெரிவித்தார்கள். அவர்களை எவ்வாறு தண்டிக்கலாமென்று அரசன் யோசித்திருக்கையில் தியாகேசர் ஒரு வயோதிகப் பிராமண வடிவங்கொண்டு மன்னனுக்கு முன்னே தோன்றி "ஓ சார்வபௌம, நீர் விரைவில்

இம்மாலையைப் பெற்றுக்கொள்வீர். அப்பாபிகளின் கழுத்தில் இந்தமாலையைக் கட்டுவீர். அதனாலே அவர்கள் யமபுரத்தை அடைவார்கள். அவர்கள் உயிர் நீங்காவிடில் இந்தப் பாணத்தால் அரக்கரெல்லோரையும் மாய்த்துவிடுவீர்" என்று சொல்லி அவற்றை அரசனிடம் கொடுத்துவிட்டு மறைந்தார். அவற்றை அரசன் பெற்றுக்கொண்டு அவ்வாறு அந்தண வடிவுடன் தோன்றியவர் தியாகராஜரே யென்று நினைத்து அவரையே தியானம் செய்துகொண்டு அந்த மாயா வேதியருக்குப் பரிசளிக்கப் போவதுபோல் பேசி அவர்களை அருகே அழைத்தான். அவர்கள் இசைந்து நெருங்கி வரவே, அரசன் கழுத்தில் போட்ட மாலையை நான்கு ராக்ஷஸர்கள் பெற்றுக்கொண்டவுடனே அம்மாலை ஒரு நிமிஷ நேரத்தில் வாளாகி அவர்களின் கழுத்தை அறுத்துவிட்டது. அவர்கள் பயங்கரமான ராக்ஷஸ சரீரத்துடன் கூக்குரலிட்டு அலறிக்கொண்டு உயிரை இழந்தனர். ஐந்தாவது ராக்ஷஸன் மட்டும் மாலையை அணிந்துகொள்ளாமல் ஆகாயத்தில் கிளம்பி ராக்ஷஸ சரீரத்தை யெடுத்துக்கொண்டு மேகம்போல் கர்ஜனை செய்து ஆயிரக்கணக்கான ராக்ஷஸர்களைத் தனக்கு உதவியாக அழைத்து அவ்வரசன்மீது இரும்புக் கதைகளையும், உலக்கைகளையும், கற்பாறைகளையும், கூர்மையான பாணங்களையும் வர்ஷிக்கத் தொடங்கினான். ஈசன் அளித்த பாணத்தை சுமதி மகாராஜன் வில்லில் தொடுத்து அரக்கர்மீது எய்தான். திரிபுரஸம்ஹார காலத்திலே பரமசிவனால் பிரயோகிக்கப்பட்ட பாணங்களே இப்போது அரசன் வில்லிலிருந்து வேகமாய் வெளிக்கிளம்பி அவர்கள்மீது பாய்ந்து சிலருடைய கால்களையும், சிலருடைய கைகளையும், சிலருடைய மார்பையும், சிலருடைய தலைகளையும், சிலருடைய இடைகளையும் துளைத்துவிட்டன. அரசனால் பிரயோகிக்கப்பட்ட ஆயிரக்கணக்கான பாணங்கள் அரக்கர் கூட்டத்தைச் சின்னபின்னமாய்ப் பிளந்து

விடவே சில அரக்கர் பயந்தோடினர். சிலர் நெடுநேரம் எதிர்த்து மாண்டனர். இவ்வாறு அரக்கர்கள் அழிக்கப் பட்ட பிறகு மரீசி மஹரிஷி எவ்வித இடையூறுமின்றி யாகத்தை நிறைவேற்றிச் சோழ மன்னனுக்குப் பலவிதமான ஆசீர்வாதங்களைக் கூறினர். யாகத்தைக் கெடுக்கவந்த ராக்ஷஸர்களெல்லோரும் அழியும்படி கருணை செய்த தியாகராஜனை முனிவர்களெல்லோரும் அவப்ருதஸ்நானம் செய்த பிறகு பணிந்து துதித்தார்கள். அம்மஹாராஜனுடைய பராக்கிரமத்தைப் புகழ்ந்து நிறைவேறிய மனோரதமுடையவர்களாகிச் சிலகாலம் சுகமாக அங்கே வசித்து வந்தார்கள்.



## 10. ரக்தாசுரனை அழித்த லீலை.

இமயமலைச் சாரலில் ரக்தாசுரன் என்னும் ஓர் அசுர நாதன் இருந்தான். திருவாரூரில் நடந்த யாகசமயத்தில் தியாகேசனுடைய உதவியால் சிறப்பையடைந்த ஒரு மானிட மன்னன் ஆயிரக்கணக்கான அரக்கரை மாய்த்துவிட்டானென்ற செய்தியை இமயமலைக் குகைகளில் கந்தர்வ மாதர்கள் பாடிய கீதத்தால் அவன் அறிந்து கடுஞ்சினத்துடன் ஆகாயத்திற் கிளம்பிக் கண்களில் தீப்பொறி பறக்கவும் உதடுகள் துடிக்கவும் பெரிய கர்ச்சனை செய்து, "நாளைக்காலையில் சூரியோதயம் ஆவதற்குள் அந்தச் சோழநாட்டு மன்னனை மாய்த்து விடுவதோடு அவனுக்கு உதவியாக உள்ள பரமசிவனையும்முறியடித்து துரத்திவிடுகிறேன். ஒரே காலத்தில் மும்மூர்த்திகளும் சேர்ந்து வந்தாலும் யுத்தத்தில் என் எதிரே நிற்கமாட்டார்கள். பரமசிவனுக்கு இருப்பிடமாகிய கைலாசமலையை என் தோள் வலியால் தூளாக்கிக் கடலிலே கரைத்துவிடுவேன். சக்கராயுதத்தைக் கையில் தரித்துள்ள திருமால் என்னுடன் போர் புரிந்து பலமுறை பயந்து ஓடிச்சென்று கடலலைக்குள் ஒளிந்திருக்கிறார். பலமுறை இந்திரனை நான் சிறையில் அடைத்திருக்கிறேன். அக்கினி முதலிய திக்குப்பாலகர்கள் என்னிடம் பயந்து தம் நகரை அகன்று திக்குத்திக்காய் ஓடி ஒளித்திருக்கின்றனர். இப்படியிருக்க எக்கு ஒப்பான அம்மானிட அரசனை இப்போதே பிண்டமாக்கி ரிஷிகளையும் வேதியர்களையும் வேருடன் பிடுங்கிவிடுகிறேன். எனது பராக்கிரமத்தால் சூரியன் முதலிய நவக்கிரகங்களை அசைவற்று ஒரேயிடத்தில் தங்கியிருக்கும்படியும் செய்வேன். என் மாயாசக்தியால் மேடு பள்ளமாகவும் பள்ளம் மேடாகவும் தரை கடலாகவும் கடல் தரையாகவும் தோற்றும்படி செய்வேன். ஒரே வேகத்தில் ஆயிரம் மலைகளைப் பிடுங்கிவிடுவேன். யானை முதலிய கொடிய மிருகங்கள் எனக்கு ஊர்க்குருவிகள்போல் தோன்றும். மாயையாலும் தோள்வலியாலும் என்னை ஜயிப்பவர் இவ்வுலகில் ஒருவரும் இல்லை. நானே அதிரபதியாக விளங்குகிறேன். எனது

முழுவன்மையால் பூமியை இரு பிளவாய்ப் பிளந்துவிடுவேன்'' என்று கடுஞ்சினத்தோடு சொல்லிக்கொண்டு ஆகாயத்தில் பறந்து சென்றான்.

வாயுவேகமாக அவன் ஆகாயத்தில் செல்லுகையில் அவனது பயங்கரமான வடிவைக்கண்டு தேவர்களும் முனிவர்களும் அஞ்சினார்கள். விமானத்தினால் சஞ்சரிக்கும் தேவர்களும் சித்தர்களும் கந்தர்வர்களும் பயந்து ஓடியொளிந்துக்கொண்டார்கள். அவன் சிங்கநாதம் செய்துகொண்டு அதிவேகமாக திருவாரூரை அடைந்து கோபுரத்தின்மீது திடீரென்று குதித்தான். அவன் குதித்த வேகத்தால் கோபுரம் பொடிபொடியாயிற்று. அதைக் கண்ட ஜனங்கள் எல்லோரும், ''நாதா! தியாகராஜா! நீரே சரணம். உம்மை அடைக்கலமாகக் கொண்டிருக்கும் எங்களைக் காப்பதோடு உமது தேவாலயத்தையும் நீரே ரக்ஷித்துக்கொள்ளவேண்டும். மலைபோன்ற சரீரத்துடன் அட்டகாசம் செய்துகொண்டு இந்தக் கொடிய அசுரன் இந்நகரையும் எங்களையும் அழிக்க வந்திருக்கிறான் போலும். ஆதலால் திரிபுர ஸம்ஹாரம் செய்த நீரே இவ்வசுரனை மாய்க்கவேண்டும்,'' என்று முறையிட்டார்கள். அப்போது தேவதேவனாகிய தியாகேசன் மல்யுத்தம் செய்து அவனை மாய்க்க எண்ணி ஒரு வீர புருஷ வடிவத்துடன் அவன் முன் தோன்றி, ''யாரடா நீ? இந்தக் கோபுரத்தின் மீது வந்து இதைப் பாழ்படுத்துகிறாய். உன் தலையை இப்போது உடைத்து விடுகிறேன். என் வீரத்தைப் பார். உன் ஆயுள் இன்றோடு முடிந்துவிட்டதாக எண்ணிக் கொள்'' என்று சொல்லுகையில் அந்த ரக்தாசுரன் வீரபுருஷன்மேல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவன் முதுகின்மேல் ஒரு கற்பாறையைப் போட்டான். அப்புருஷன் அதை எளிதில் தள்ளிவிட்டு அசுரன் மார்பில் ஓங்கிக் குத்தினார். அப்போது அசுரன் மிக்க கோபத்தோடு தன் கைகளால் அவ்வீர புருஷனை இறுகக் கட்டி பூமியில் வீழ்த்தினான். பூமியினின்றும் வீரபுருஷன் வேகமாய் எழுந்து மற்றொரு கற்பாறையினால் அவ்வசுரன் தலையை உடைத்தார். பாறை வேகமாக

அசுரன் தலைமீது வீழ்ந்தவுடனே அவன் கண்கள் கலங்கின. மூக்கு நசுங்கிற்று. உதடு அறுந்து இரத்தத்தைக் கக்கியது. நாக்கு நசுங்கிற்று. அசுரன் வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் உதிரவெள்ளம் ஓடிற்று. அதனால் வெருண்ட அசுரன் தியாகேசனாகிய வீரபுருஷனை எடுத்துக்கொண்டு சற்றுநேரம் வானத்திற் பறந்தான். அங்கிருந்து சுழற்றி வீரபுருஷனைப் பூமியில் அடித்தான். பரமேசனாகிய வீரபுருஷன் தன் முழு வன்மையையும் காட்டாமல் சிறிது நேரம் வரையில் வேடிக்கையாக யுத்தம் செய்ய ஆரம்பித்தார். பூமியில் சுழற்றி எறியப் பட்ட வீரபுருஷன் நடு வழியிலேயே ஆகாயத்தில் கிளம்பி அசுரனைக் கட்டிமுறுக்கி அடித்துப் பூமியில் மோதினர். ஒருவரையொருவர் காலினால் உதைத்துக்கொண்டனர். கூர்மையான பற்களினால் கடித்தனர். கற்களினாலும் மரங்களினாலும் ஒருவரையொருவர் அடித்தனர். ஒருவரையொருவர் தூக்கிச் சென்றனர். சற்றுநேரம் மேகத்தில் மறைந்து யுத்தம் செய்தனர். சற்றுநேரம் பூமியில் இறங்கி மல்யுத்தம் செய்தனர். சிங்கநாதத்துடன் ஒருவரையொருவர் இகழ்ந்தனர். ஒருவர் சக்தியைக் கண்டு மற்றவர் வியப்புற்றனர். ஒருவர் வன்மையை மற்றவர் இகழ்ந்தனர். மத்தகஜங்கள்போல் ரக்தாசுரனுக்கும் தியாகராஜனாகிய வீரபுருஷனுக்கும் பயங்கரமாக இவ்வித மல் யுத்தம் நடக்கையில் தேவர்களும் திடுக்கிட்டனர். முனிவர்களின் மனம் பிளந்துவிட்டது. புண்ணியபுரத்து ஜனங்கள் யாவரும் அக்கொடிய யுத்தத்தைக் காணப்பெறுமல் பயந்து ஓடி ஒளிந்துகொண்டனர். பூமி நடுங்கிற்று. கடல் நீர் கலங்கிற்று. உலகுக்கே முடிவுகாலம் வந்ததுபோல் தோன்றிற்று. ஜீவராசிகளெல்லாம் நடுங்கின. தேவர்களும் தொண்டர்களும் "தியாகப்பிரபோ! அஸுராந்தக! காலகால! உலகத்தைக் காப்பாற்றவேணும். அளவற்ற உமது சக்தியினால் இவ்வசுரனை ஒழிக்கலாகாதா?" என்று முறையிட்டனர்.

பக்தர்கள் இவ்வாறு கதறுவதை யறிந்த தியாகராஜர் தம் அற்புத சக்தியை வெளியிட்டார். அவ்வசுரனை ஓங்கிக் குத்தி

னர். ரக்தாசுரனுடைய மார்பு இரண்டு பிளவாகப் பிளந்து விட்டது. அதனல் வெளிக்கிளம்பிய அசுரனுடைய உயிரை யமபடர்கள் கொள்ளைகொண்டனர். அப்போது தேவர்களும் கந்தர்வர்களும் தியாகராஜாவின்மேல் கல்பக விருக்ஷ மலர்களைச் சொரிந்தனர். துந்துபி வாத்தியங்களை முழக்கினர். எல்லா உலகங்களுக்கும் பகைவனுகிய அவ்வசுரன் மாண்டதால் நற் காரியங்கள் எல்லாம் குறைவின்றி நடந்தன. இவ்வாறு அபாயம் நேரிடும் சமயங்களில் தியாகேசர் பகைவரை மாய்த் துத் தொண்டருக்கு அருள்புரியும் அற்புதத்தை அறிந்த ஞானிகள் எல்லோரும் ஈசனை வணங்கித்தம் விருப்பங்களைப் பெற்று உய்ந்தார்கள்.



## 11. பிருஹஸ்பதியின் பிணியையொழித்த லீலை.

முக்காலத்திலும் பக்தரக்ஷணத்துக்காகவே கண்விழித்திருக்கும் தியாகராஜர் தமது அற்புத சக்தியினால் அரக்கர்களையும் அசுரரையும் மாய்த்துவிட்டபடியால் உலகில் முனிவர்களும், சாதுக்களும் அங்கங்கே யாகஞ்செய்து வந்தார்கள். பயமற்றுப் புண்ணிய க்ஷேத்திர யாத்திரை செய்தார்கள். மன்னர் முதலிய மானிடர்கள் அரக்கர் பயமில்லாமல் தியாகராஜரின் திருமேனியைக் கண்டுபணிந்து பாபங்களைப் போக்கி மகிழ்ச்சியுடன் வாழ்ந்தார்கள். மண்ணுலகம் முழுவதும் மகிழ்வுடன் விளங்கியது. புண்ணிய விரதம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்கள் மிக்க சிறப்புடன் விளங்கின. மண்ணுலகம் இவ்வாறு மேன்மையுற்று விளங்குகையில் விண்ணுலகில் சுதர்மையென்னும் இந்திர சபையில் வீற்றிருக்கும் பிருஹஸ்பதியானவர் ஒருநாள் விடியற்காலையில் தேவகங்கைக்கு நீராடச் சென்றார். பரமேசுவரனை மனத்தில் தியானஞ் செய்துகொண்டு ஸ்நானாதிகளை நிறைவேற்றித் தேவலோகத்துக்குத் திரும்பினார்.

தேவர்களிடம் நெடுநாளாகப் பகைகொண்டிருந்த காலகேயனென்னும் ஓர் அசுரன் தன் மாயையினால் பிருஹஸ்பதி திரும்பி வரும்வழியில் நாலைந்து கோடுகளைக் கீறி அவற்றை மீறி நடப்பவர் மெய் மறந்து மதியிழந்து அலைந்து திரியும் வண்ணம் தக்க மந்திரங்களை ஜபித்து வைத்திருந்தான்.

அந்த வஞ்சனையை அறியாத தேவகுரு ஈசுவரத் தியானத்துடனே சென்றபோது அக்கோடுகளைக் காலினால் தாண்டினார். அப்போது தேவகுருவின் சரீரம் விதிர்விதிர்த்து நடுக்கமுற்றது. கண்கள் சுழன்றன. அவரது சூக்ஷ்மமான புத்தியும் மயங்கிவிட்டது. பேயினால் கவரப்பட்ட மனுஷ்யர்போல் தேவகுருவுக்கு ஞாபகம் தவறிவிட்டது. பூமியில் மரம்போல்

வீழ்ந்தார். புரந்தரன் முதலிய தேவர்கள் போல் அமிர்தத்தை யுண்டிருந்தும் அவ்வசுரனுடைய மாயா மந்திர பலத்தினால் இவ்விதமான துன்பங்கள் நேரிட்டன.

தேவகுரு இவ்வாறு மதியிழந்து பூமியில் வீழ்ந்தவுடனே காலகேயன் முதலான அசுரர்கள் கைகொட்டி நகைத்தார்கள். "பிருஹஸ்பதியின் யுக்தி விசேஷங்களும் இந்திரனுடைய ஒப்பற்ற வாழ்வும் இன்றோடு அழிந்தன" என்று நகைத்தார்கள். சில அசுரர்கள் "நமது பகைவனாகிய புரந்தரனுடைய குரு அழிந்துவிட்டார். இனி வாசவனும் நம்மிடம் பயந்து ஓடிவரன்" என்று களிப்புடன் பெருங் கர்ஜனை செய்தார்கள். அது தெரிந்த் தேவர்கள் மனங்கலங்கி அசுரர்கள் இவ்விதம் திடீரென்று களிப்புறுவதற்குக் காரணம் என்ன?" என்று ஆராய்ந்து தேடிப் பார்த்தார்கள். தேவகுரு பூமியில் மதியிழந்து வீழ்ந்திருப்பதைக் கண்டு கூக்குரலிட்டு அழுதனர். பலவிதமான சீதளோபசாரங்களைச் செய்து கூப்பிட்டழைத்தார்கள். ஒன்றுக்கும் தேவகுரு வாய்திறக்கவில்லை. சில தேவர்கள் வாயுவேகமாக ஓடிச்சென்று பிருஹஸ்பதிக்கு நேரிட்ட அபாயத்தை வாசவனுக்கு அறிவித்தார்கள். தேவேந்திரனும் அவன் சபையில் உள்ளோரும் இச்செய்தியறிந்து பிளப்புண்ட மனமுடையவர்களாகி அசுவினி தேவர்களை யழைத்துக் கொண்டு தேவகுருவினிடம் வந்தார்கள். அந்த இரட்டைத் தேவர்களின் மருந்தும் மந்திரமும் உபசாரமும் குருவினிடம் சிறிதும் பலிக்கவில்லை. அதனால் தேவர்களெல்லோரும் முகவாட்டத்தையடைய பிருஹஸ்பதியும் மாண்டுபோனார்.

"தெய்வலோக வாழ்வு அழிந்துவிட்டதே. இனி மூன்று உலகங்களிலும் யாகாதி நற்காரியங்கள் நடைபெறா. அசுரர்களின் சூழ்ச்சியே வளர்ந்தோங்கும். குருவை இழந்த நாம் இனி உயிரை வைத்திருப்போமானால் நமக்கு அபகீர்த்தியும் துன்பமும் மனக் கலக்கமுமே ஏற்படும். ஆதலால் நாமும் உயிரை விடுவதே நலம்" என்று இந்திரன், இந்திராணி,

அரம்பையர் முதலிய தேவர்களெல்லோரும் புலம்பினர். ஆகாய சஞ்சாரியாகிய நாரதர் இதனையறிந்து வியந்தார். அவரைக் கண்ட தேவர்கள் உபசரித்துத் தமது குருவுக்கு நேரிட்ட அபாயத்தை முறையிட்டார்கள். திரிலோகத்துள்ள ஒவ்வொரு பொருளின் உண்மையுருவத்தையும் தம் தவப்பயனாகிய மெய்ஞ் ஞானத்தினால் அறியவல்லவராகிய நாரதர் சற்றுநேரம் யோசித்துப் பார்த்து, "தேவர்களே! பயப்பட வேண்டாம். இந்தக் குருவின்மீது சில துஷ்ட அசுரர்கள் பயங்கரமான ஒரு மாயையை ஏவியிருக்கிறார்கள். அதனால் பிருஹஸ்பதி மதியிழந்து இவ்வித கஷ்டத்தை அனுபவிக்கிறார். இதற்கு எவ்வித மருந்தும் மந்திரமும் உபசாரமும் பலிக்கமாட்டா. பூலோகத்தில் பாரத வருஷத்தின் தென்கண்டத்தில் உள்ள தியாகராஜனாகிய திவ்ய மருந்தே இக்கொடிய மாயையை நீக்க வல்லது. இப்பொழுதே பிருஹஸ்பதியை எடுத்துக்கொண்டு பாரத வருஷத்துக்குப் போவோம், வாருங்கள்" என்று நாரத முனிவர் அழைக்கவே புருகூதன் முதலான தேவர்கள் தேவ குருவை ஒரு விமானத்தில் வைத்துக்கொண்டு பூவுலகுக்கு வந்தார்கள். நாரதர் கையிலுள்ள வீணையை மீட்டிக் கொண்டே விமானத்துக்கு முன் வழிகாட்டுபவர்போல வேக மாகப்பறந்து வந்தார். எல்லோரும் திருவாரூரையடைந்து தியாக பதியைப்பணிந்து துதித்து அந்தச் சுரகுருவைத் தியாகேசருக்கெதிரில் நமஸ்கரிப்பதுபோல் பூமியில் வைத்தார்கள். ஈசனுடைய கண்ணோக்கினால் பிருஹஸ்பதியின் மாயை நீங்கி அவர் நித்திரையிலிருந்து எழுபவர்போல் எழுந்து கும்பிட்டு திவ்விய வாக்கினால் ஈசனைத் துதிசெய்தனர். அப்போது தேவர்கள் எல்லோரும் அக்குருவைக்கொண்டு தியாக ராஜனுக்குச் சிறந்ததோர் அபிஷேகத்தைச் செய்வித்து உத்ஸவத்தையும் நடப்பித்து மேன்மையுடன் வானுலகில் போய், வாழ்ந்தார்கள்.

## 12. கோலாசுரனை அழித்த லீலை.

எல்லா உலகங்களுக்கும் பாக்கியத்தை அளிக்கும் தியாக ராஜனாகிய பரமேசுவரன் திரிபுர ஸம்ஹார காலமுதல் ஆங்காங்கு அசுரர்களைப் போரில் கூட்டங் கூட்டமாய் அழித்து வந்தபடியால் உலகம் முழுவதிலும் கிருதயுக தர்மங்கள் மறுபடியும் ஓங்கி வளர்ந்து வந்தன. மண்ணவரும், விண்ணவரும் அசுர அரக்கர் பயமின்றி மகிழ்வுடன் வாழ்ந்து வந்தார்கள். இவ்வித நன்மைகளுக்குக் காரணமான தியாகராஜனை வணங்கிப் புகழாதார் உலகில் இல்லை.

இப்படியிருக்கையில் பரமேசுவரனுடன் கொடிய யுத்தம் செய்து எதிர்த்துநிற்க முடியாமல் பயந்தோடிச் சென்ற சில அசுரர்கள் அநேக வருஷ காலம்வரையில் வெளியே வாராமல் மலையின் குகைகளிலும் பாதாளத்திலும் ஒளிந்திருந்தார்கள். மற்றும் சிலர் அசுரர் குழாம் அழிந்து விட்டதேயென்று மனக் குறையால் உயிர் துறந்தார்கள். அவர்களில் ஒருவனாகிய புலாகனென்னும் அசுரன் திரிமூர்த்திகளின் மீதும் தேவர்களின் மீதும் ரிஷிகளின்மீதும் வேதபடனம் யாகம் முதலான நற்காரியங்கள் மீதும் வைத்திருந்த பெரும் பகையினால் மறுஜன்மத்திலும் சாதுக்களுக்குத் துன்பம் விளைவிக்க வேண்டுமென்னும் கருத்துடனே விந்திய மலையின் அருகில் உள்ள ஆரவாட தேசத்து அரசனுக்குப் புத்திரனாகப் பிறந்தான். அசுராம்சமாய் உதித்த அக் குழந்தையின் வடிவத்தை அறிந்துகொள்ளாத ஆரவாட தேசத்து மன்னன் மிக்க சந்தோஷத்துடன் அக்குழந்தைக்குப் பரிகேது என்று பெயரிட்டுச் சிறப்பாக வளர்த்துவந்தான்.

அசுராம்சமாகிய பரிகேதுவும் இளமையிலேயே தாய் தந்தையரையும், புரோகிதர்களையும், குருக்களையும் இகழ்ந்து பேசினான். தோழரான மந்திரி குமாரர்களையும் அகாரண

மாக அடித்துத் துரத்தினன். யுவராஜனன பிறகு அதிகக் கொழுப்பையும், கர்வத்தையும் அடைந்து தனக்கு நற்புத்தி புகட்டுவாரைத் தண்டிக்கலானன். அரசநீதி முறைகளை ஒரு சிறிதும் அனுஷ்டிக்கவில்லை. ஒருவரையும் வணங்குவதில்லை. யௌவன மதத்தில் கொழுப்படைந்து அரச கன்னிகைகளையும், பிராமண மாதர்களையும், வேதியர் செல்வத்தையும் அபகரிக்கத் தொடங்கினன். இவ்வளவு கெட்ட காரியங்களைச் செய்துவந்த பரிகேதுவைக் கண்டவரெல்லாரும் அவனை அசுரனென்றே நினைத்து இகழ்ந்தார்கள். இவற்றையெல்லாம் அறிந்த அவன் தந்தையான மஹாராஜன் மனக்குறையுற்று ராஜ்யத்தையும், பரிகேதுவையும் துறந்து தனது மனைவியுடன் காட்டுக்குச் சென்று சிவத்தியானம் செய்துகொண்டு தேகவியோக சமயத்தை எதிர்பார்த்திருந்தான்.

தந்தை தன்மீது கோபங்கொண்டு ராஜ்யத்தைத் துறந்து கானகம் சென்றபோது அசுர மன்னனகிய பரிகேது சிம்மாசனமேறினன். குலமுறையாக வந்த அமைச்சர்களைத் துரத்திவிட்டான். கிராதகர்களையும், (வேடர்களையும்), புளிந்தர்களையும் (வேடர்களினும் குறைந்தவர்களையும்), துஷ்டர்களையும் சபையில் சேர்த்துக்கொண்டு தன் இஷ்டப்படி ஜனங்கள் மீது கொடிய நீதிமுறைகளைச் செலுத்தினன். விடர்களுடனும், காமுகர்களுடனும் சேர்ந்து மதுபானம் செய்தான். பசுக்களை வதைத்தான். பரதாரங்களை அபகரித்தும் பெரியோர்களை இகழ்ந்தும், அரச நீதியைத் துறந்தும், பூமியைப் பாழாக்கியும், வந்தபோது ஜனங்களெல்லோரும் பயந்து அவனது நாட்டை அகன்று வெளியே ஓடிவிட்டனர்.

நீதியுடன் அரசாட்சி புரிந்துவரும் மற்ற மன்னர்மீது காரணமில்லாமல் படையெடுத்துப் போர்புரிந்து அசுரத் தன்மையினல் அவர்களை ஜயித்து அவர்கள் செல்வத்தைக் கொள்ளையிட்டான். அங்கங்கே நதியின் கரையில் விளங்கும் லிங்க வடிவங்களையும் ஆட்டிப்பிடுங்கி வெளியே வீசியெறிந்தான். ஜனங்களெல்லோரும் அவனுடைய நாசகாலத்தைக்

குறித்து ஈசனைத் துதித்தனர். வெகுகாலம் வரையில் தேவ லோகம் முதலிய இடங்களில் கிலியாக இருந்து ஒருநாள் பூமியில் இறங்கிக் கோகர்ணேசுவரரைத் தரிசித்துவிட்டுத் திரும்பிய நாரதரை ஜனங்கள் கண்டு, அவரிடம் பரிகேதுவின் தீச் செயல்களை முறையிட்டார்கள். நாரதர் அவர்களுக்குத் தைரியம் கூறிப் புண்ணிய க்ஷேத்திரமாகிய திருவாரூர் நாதனைப் பணிந்து பரிகேதுவின் பூர்வ ஜன்ம வரலாறுகளையும், அவன் பூவுலகையழித்து வரும் கொடிய செயல்களையும் தியாகராஜனிடம் விஞ்ஞாபனம் செய்தார். அவருடைய பிரார்த்தனைக்கு இணங்கிய தியாகேசர் அவர் முன்னே தோன்றி "அவ்வசுர மன்னன் உலகை அழித்து வருவதை யான் அறிவேன். அவனை யுத்தத்தில் அழிக்க முடியாது. இவ்வித ராஜவடிவத்துடனிருக்கையில் அவனை அழிக்க இயலாது. சூது மார்க்கத்தினாலே அவனை ஒழிக்க வேண்டும். அதற்காக உமக்கு நான் ஒரு மந்திரம் உபதேசிக்கிறேன். அதை நீர் அவனது வலச் செவியில் ஓதுவீராகில் அம்மந்திரத்தின் மகிமையாலும், முன்பு கௌதம ரிஷி அவனுக்கு இட்ட சாபத்தினாலும் உடனே அவனது உருவம் கோலவடிவமாக மாறிவிடும்" என்று சொல்லி நாரதருக்கு ஒரு மந்திரத்தை உபதேசித்தார். உடனே நாரதர் வடதிசையை நோக்கிச் சென்று ஆராட தேசத்து ராஜசபையில் வீற்றிருக்கும் பரிகேதுவின் எதிரே தோன்றினார். அவரைக்கண்ட பரிகேது அவரிடம் மிக்க மரியாதை காட்டி விநயத்துடன் எழுந்து நின்றான். தன் செயல்களாலேயே அவனுக்கு நாசகாலம் நெருங்கியபடியால் நாரதரைப் பார்த்து அவன் "தேவரிஷியே, உலகிலுள்ள சகல பூபாலர்களையும் வென்று மறுபடியும் அசுரர்களைப் பூமண்டலத்தில் வாழ்விப்பதற்கு எனக்கு பராக்கிரமம் உண்டாகும்படி ஏதேனும் ஒரு மந்திரம் உபதேசம் செய்வீரா! அசுரர்களுக்கும் தேவர்களுக்கும் சமமாக விளங்கும் முனிவரே!" என்றான்.

அதனைக்கேட்ட நாரதர் அப்பொழுதே யமபடர்கள் அவ்வசுரனைக்கவர்ந்து விட்டார்களென்று நினைந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்து தலையை அசைத்துக்கொண்டு, "பூபால,

நீ விரும்பியபடி உனக்கு ஒரு திவ்விய மந்திரத்தை உபதேசிக்கிறேன். அதனால் உண்டாகும் பலனை என்னால் சொல்ல முடியாது'' என்று உரைக்கவே அவனும் அதற்கிசைந்தான். உடனே நாரதமகரிஷி அவன் வலக்காதில் தியாகேசர் கூறிய மந்திரத்தை உபதேசித்துவிட்டு திடீரென்று ஆகாயத்திற் கிளம்பி சின்றார். உபதேசம் பெற்ற பரிகேது தன் அருகிலிருக்கும் துஷ்ட மந்திரிகளுடன் தனக்கு வரப்போகும் மேன்மையைப் பற்றிப்பலவாறு யோசனை செய்யலானான். சாதுக்களின் சாபத்தை அடைந்த அவ்வமைச்சர்களும் கெடுமதியினால் அவன் கூறுவதைக் குறித்துப் புகழ்ந்தார்கள். இதற்குள் ஒரு முகூர்த்த காலம் சென்றது. பரமேசுவரனது மந்திர மகிமையினால் எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே பரிகேதுவுக்கு அவ்வுருவம் நீங்கிப் பன்றி வடிவம் உண்டாயிற்று. அப்பன்றியானது கடுஞ்சினத்துடன் சீறிக்கொண்டு அருகிலிருந்த மந்திரிகளின்மீது வேகமாய்ப் பாய்ந்து முதலில் அவர்களையே கொன்றுவிட்டது. 'முறு முறு' என்ற சத்தத்துடன் எழும்பியும் துள்ளியும் பாய்ந்து வரும் அப்பன்றியைக்கண்ட ஜனங்கள் யாவரும் பயந்து ஓடி ஒளிந்து கொண்டார்கள்.

அத்தருணம் தியாகேசன் ஒரு வேடனாகத் தோன்றிக் கையிற்பிடித்திருந்த ஒரு பாணத்தை எய்து அப்பன்றியைக் கொன்றார். பூர்வ ஜன்மத்தில் புலாகாசுரனாயிருந்தவனே இவ்வரசனாய்ப்பிறந்து மந்திரத்தினால் பன்றியாய் மாறி உயிரை விடும்பொழுது அவன் பர்வதம் போன்ற பெரிய உடலுடன் பூமியில் விழுந்து எல்லாப் பிராணிகளுக்கும் பயத்தை உண்டு பண்ணினான். தியாக மூர்த்தி பிறகு தமது இருப்பிடத்திற்கு எழுந்தருளினார். பரிகேதுபூபாலன் அழிந்ததைக்கேட்ட வட திசை அடியார்களும் தென்திசைக்குவந்து தியாகராஜனைத் தரிசித்து அவரது அருளால் நல்ல அரசனையடைந்து சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

## 13. குபேரனுக்குச் செல்வமளித்த லீலை.

பரமேசுவரனுடைய திவ்ய லீலைகளினால் எவ்விதமான இடையூறும் நேரிடாமல் சாதுக்கள் செய்யும் தவமும் யோகமும் நிறைவேறிவந்தன. சிவப்பிரியனென்னும் ஒரு யோகியானவர் தம் எதிரே குபேரன் தோன்றும் வரையில் யோகம் செய்வதாக உறுதி செய்துகொண்டு கங்கைக்கரையில் ஓர் ஆச்சிரமத்தில் நியமத்துடன் பன்னீராண்டு வரையில் ஓர் அற்புத யோகத்தைச் செய்து வந்தார்.

ஒரு நாளைக்கு ஒரு தடவை மட்டும் உண்ணுதல், கிருஷ்ண பக்ஷ அஷ்டமி, நவமி, ஏகாதசி, சதுர்த்தசி, அமாவாஸ்யை என்னும் இவ்வித நாட்களில் நாள் முழுவதும் உபவாஸம் இருத்தல், பிறகு பக்ஷத்தில் ஐந்து நாள் உபவாசமிருத்தல், பிறகு மாசத்துக்கு ஐந்து நாள் உபவாசமிருத்தல், பிறகு மாதத்துக்கு ஐந்து நாள் உண்ணுதல், பிறகு மாதத்துக்கு இரண்டு நாள் உண்ணுதல், பிறகு மாதத்துக்கு ஒரு நாள் உண்ணுதல், மூன்று மாதத்துக்கு ஒரு நாள் உண்ணுதல், ஆறு மாதத்துக்கு ஒரு நாள் உண்ணுதல், வருஷத்துக்கு ஒரு நாள் உண்ணுதல் என்னும் இவ்விதமான கடின நியமங்களை முதலில் அனுஷ்டித்துக்கொண்டு பஞ்சேந்திரியங்களையும் வென்று பரமேசனுடைய பாத கமலங்களைத் தியானித்துக் கொண்டு பிறகு மூச்சையடக்கல் முதலிய மகாகடினமான யோகத்தை அந்தச் சிவப்பிரிய யோகி செய்து வந்தார்.

அவர் யோகம் செய்வதன் மூலகாரணத்தை அறியாத சிலர் “செல்வத்தை ஒழித்து உலக இன்பத்தைத் துறந்த இந்த யோகி குபேரனைக் குறித்து ஏன் இவ்வாறு கடினமான யோகம் புரிகிறார்? இந்த யோகத்தையும் தியானத்தையும் ஈசன் விஷயமாய்ச் செலுத்துவாராயின் மேன்மையான பதவிகளையும் சிவ ஸாயுஜ்யத்தையும் இவர் அடையலாமே. இவ்வளவு பிராயம் முதிர்ந்தும் செல்வத்தில் இவருக்கு ஆவல் உண்டாகிவிட்டது போலும்” என்று கூறினர். மற்றும் சிலர்

"இவர் மனக்கருத்தை நாம் அறிய முடியாது" என்றனர். இவ்வாறு அருகிலுள்ள தபோதனர்களுக்கும் வியப்பை அளிக்கக்கூடிய அற்புத யோகத்தை அவர் நடத்திவருகையில் ஒருநாள் அவருடைய யோகத்தையும், தியானம் முதலிய வற்றையும் அறிந்து சந்தோஷமடைந்த குபேரன், வித்தியாதரர் கின்னரர் முதலானவர்கள் சூழ, ஒரு விமானத்தில் ஏறிக் கொண்டு சிவப்பிரியயோகியின் முன்னே தோன்றி, "ஓ யோகீசுவரரே, உமது பக்தியையும் யோகத்தின் சிறப்பையும் கண்டு மகிழ்ந்தேன். உமக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டான்.

புஷ்பக விமானத்தில் கந்தர்வர்களால் தொழப்பட்டுத்தமது கண்முன் தோன்றும் குபேரனைக்கண்டு மகிழ்ந்த அந்த யோகீசுவரர் அவரைப்பணிந்து துதித்துக் கூப்பிய கரத்துடன், "ஓ! வட திசைக்கு அதிபதியே, அளகேசா, நவநிதிக்கதிபதியே, ராஜராஜ, வைச்ரவண! என்மீது கருணைகொண்டு என் விண்ணப்பத்தைக் கேட்கவேண்டும். ஸர்வலோக நாயகனாகிய ஸர்வேசுவரன் மேருவை வில்லாக வளைத்துக்கொண்டு, தம் அற்புத சக்தியால் திரிபுரஸம்ஹாரம் செய்ய ஆரம்பித்தது முதல், இதுவரையில், அரக்கர்களையும் அசுரர்களையும் வதம் செய்த போதிலும், சில சமயங்களில் துஷ்ட அசுரர்களும் அரக்கரும் பூமியில் உள்ள அரசர்களின் செல்வத்தையும், தேவதைகளின் செல்வத்தையும், நான்கு வர்ணத்தார்களுடைய செல்வத்தையும் அழித்து நாசஞ்செய்திருக்கிறார்கள். அக்ரஹாரங்களிலும் புரங்களிலும் நகரங்களிலும் தேவாலயங்களிலும் இப்போது செல்வப்பெருக்கே இல்லை. ஜனங்களெல்லாரும் வறுமையால் துன்புறுகிறார்கள். சில வருஷங்களுக்கு முன்பு நான் பூப்பிரதக்ஷிணம் செய்து திரும்புகையில் செல்வமில்லாமல் ஜனங்களும் மன்னர்களும் கஷ்டப்படுவதை நேரில்கண்டு நொந்தேன். ஆகையால் நீர் என்மீது தயை செய்து பூவுலகம் எங்கும் உமது நவ நிதியின் நோக்கும் பரவலும் உண்டாகும்படி அருள்புரியவேண்டும்" என்று விநயமாகக் கேட்டார்.

இவ்வித வார்த்தைக்கேட்ட யோகியின் லோகோபகார குணத்தைப்பற்றி மகிழ்வடைந்த குபேரன், "நீர் விரும்பியவாறே உலகத்தவர்களுக்குச் சிறந்த செல்வம் அளித்தோம்" என்று சொல்லிவிட்டுத் தனது இருப்பிடமடைந்தான். சிவப்பிரியரும் தமது ஜன்மத்துக்குப் பயனுண்டாயிற்றென்று எண்ணி மகிழ்ந்து திவ்ய தேச யாத்திரை செய்யலானார்.

அளகாபுரியை அடைந்த குபேரன் பிரதோஷ சமயத்தில் கைலாசபதியாகிய பார்வதிபாகனைப் பணிந்து பூமியெங்கும் செல்வ வெள்ளம் பெருகும்படி நவநிதிகளை ஏவினான். அவைகளின் அதிபதியான தேவதைகளும் உலகெங்கும் அவ்வாறே செல்வத்தை வருஷித்தார்கள். மறுநாள் விழித்தெழுந்த ஜனங்கள் யாவரும் திடீரென்று தம் இருப்பிடங்களில் நிரம்பியிருக்கும் செம்பட்டு, வெண்பட்டு, சித்திரப்பட்டு முதலான வஸ்திராதிகளையும், ஹாரம், கேயூரம் முதலிய ஆபரணங்களையும், சிறந்த ஒளியுள்ள இரத்தினக் குவியல்களையும், நானாவித தான்யங்களையும், பொற்குவியல்களையும், சுகத்தை யளிக்கும் ஆசனங்களையும், அலங்கார வஸ்துக்களையும் மற்றுமுள்ள உபயோகமான வஸ்துக்களையும் கண்டு ஆச்சரியமடைந்தார்கள். "அஷ்ட ஐசுவரியம் உடைய தியாகராஜனே இவ்விதமாய் நமக்குச் செல்வத்தை வருஷித்திருக்கிறார்" என்று துதித்தார்கள். அன்றுவரையில் யாசகம்செய்து ஜீவித்து வந்தவர்களும் தம்மிடம் யாசகர்கள் வரவில்லையே என்று அவர்களை எதிர்பார்த்தவர்களாக விளங்கினார்கள்.

மாளிகைகளில் நடைபெறும் மங்களச் சிறப்பும், தேவாலயங்களில் நடைபெறும் திருவிழாச் சிறப்பும், வானுலகெங்கும் பரவின. வீடுகளிலும், கிராமங்களிலும், நகரங்களிலும் அப்பொழுது செழித்து விளங்கும் செல்வத்தின் மேன்மையைக் கண்டு பொறாமைகொண்ட குடிலன் என்னும் அசுரன் பூலோகத்தில் இவ்வித மேன்மைக்குக் காரணமான குபேரனுடைய நவநிதிகளையும் அழித்துவிடுவதாகச் சபதம்செய்து கொண்டு அளகாபுரியை அடைந்து குபேரன் வசத்திலிருக்கும் அந்நவ

நிதிகளின்மீது பதினுயிர வருஷகாலம் இருக்கக்கூடிய ஒருவித மாயையை ஏவினன். அதனுல் அந்நிதிகளின் உண்மை வடிவம் மாறிக் கொடிய சர்ப்பங்கள் நிறைந்த புற்றுக்களாகவே குபேரன் கண்களுக்குத் தோன்றின. இப்படிப்பட்ட தோற்றத்தினுல் தனபதியாகிய குபேரன் துக்கப்படுகையில், அங்கே நாரதர் தோன்றிக் கட்டளையிடவே, குபேரன் திருவாரூரையடைந்து தியாகேசனைப் போற்றி நின்ருன். அப்போது பரமசிவன் அளித்த ஒரு கயிற்றைக் கொண்டுவந்து குபேரன் அந்நிதிகளின் அருகே வீசினுன். அப்போது மாயா நாகங்கள் கொடிய விஷத்தைக் கக்கிக்கொண்டு உயிரையிழந்தன. அம்மாயையை ஏவிய குடிலாசுரன் அக்கயிற்றைக் கையாலெடுக்கையில் அது காலபாசம்போல் அவனது கழுத்தையே சுற்றிக்கொண்டது. அசுரனும் தன் ஜீவனை இழந்தான். உத்தர திக்பாலகனுகிய தனபதியும் மிக்க களிப்பையடைந்து ஈசன் கருணையினுல் கிடைத்த தன் நவநிதிகளையும் பெற்று முன்போல் உலகைப் பரிபாலித்து வந்தான்.



## 14. ப்ரதர்க்காசுரனை வதைத்த லீலை

ஒரு சமயம் ப்ரதர்க்காசுரனென்னும் அசுரனொருவன் ஆகாயமார்க்கமாய்ச் செல்லுகையில் திருவாரூரில் விளங்கும் தியாகராஜ பிரபுவின் பிரதோஷ காலத்தில் முழங்கும் மங்கள வாத்தியத்தின் ஒலியைக் கேட்டான். உடனே கடுஞ்சினம் அடைந்து பூமியிலிறங்கித் தேவாலயத்துக்குட் சென்றான். அவனது அசுர சரீரத்தைக் கண்டவரெல்லோரும் பயந்தோடினர். "இக்கொடியவன் ஆலயத்துள் நுழைந்துவிட்டானே! இன்று மாலை பூஜையும் இரவு பூஜையும் நமது சூலபாணிக்குத் தடைப் பட்டனவே! திருட்டு, அகாலவாதம், அகாலச் சண்டை முதலியவற்றைச் செய்யும் இவ்வசுரன் எதற்காக இங்கே வந்து புகுந்தானோ! இப்போது நமது குலதெய்வமாகிய தியாகராஜனுக்கோ ஆலயத்துக்கோ அல்லது நமது நகரத்துக்கோ எல்லா உலகுக்குமோ பெரிய துன்பம் நேரும்போல் தோன்றுகிறதே! பலவிதமான அபசகுனங்கள் திசைகளில் காணப்படுகின்றனவே! எதற்காக இந்தப் பாபி இங்கே வந்து நுழைகிறான்?" என்று இவ்வாறு சொல்லிக்கொண்டு ஈசுவர தரிசனத்தை இழந்து பயந்தோடினார்கள். ப்ரதர்க்காசுரன் வெகு வேகமாக ஆலயத்துக்குள் செல்லுகையில் சில ஜனங்களைக் கையினால் தூக்கி எறிந்தான். சில ஜனங்களைக் காலினால் உதைத்துத் தேய்த்துக்கொண்டே சென்றான். அடியெடுத்து வைக்கும்பொழுது பூமி நடுங்கிற்று. அவனது புஜக்காற்றினால் பறவைகள் மூர்ச்சையடைந்து பூமியில் சுழன்று விழுந்தன. இவ்வாறு எல்லா ஜீவராசிகளையும் நடுங்கச்செய்து ஆலயத்துக்குள்ளே பிரவேசித்த அவ்வசுரன் தியாகராஜாவின் அருகே செல்ல முடியாமல் பரஞ்சோதியின் ஒளியினால் க்ஷணகாலம் தடுக்கப்பட்டு நின்றான்.

கோபத்தினால் கண்களிலும், முகத்திலும், மார்பிலும் சிவந்த நிறத்தை அடைந்த அசுரன் பெருத்த குரலுடன் "ஓ! தெய்வமே, மகாதேவனே, பலத்தினாலும் சௌரியத்தினாலும்

மூவுலகிலுள்ள எல்லா வீரர்களையும் நான் வென்றிருக்கிறேன். என்னைக் கண்டவுடன் எனக்குக் கைகூப்பி வணங்காதவர் வானிலும் மண்ணிலும் இல்லை. ஆகையால் அதுபோலவே நீரும் எனக்குப் பணியவேண்டும். இல்லாவிடில் உம்மை நான் பிளந்து பொடியாக்கி நாசம்செய்து விடுவேன். என் மாயையினால் உம்மை நான் ஒரு நிமிஷத்தில் எரிக்கவல்லேன். உமது பலமும் எனது பராக்கிரமமும் இப்போதே வெளியாக வேண்டும்" என்று பரமேசுவரனை வலுவில் சண்டைக்கிழுத்தான்.

உடனே தியாகராஜன் ஒரு வீரனுருவத்தோடு அவன் எதிரே தோன்றிக் கையில் வைத்திருந்த சங்கிலியினால் அவன் கைகளையும் கால்களையும் கட்டி ஆகாயத்தே தூக்கி எறிந்தார். அதுவரையில் எந்த யுத்த களத்திலும் பகைவரால் கட்டுப்படாத அவ்வசுரன் தன்னை ஒரு நிமிஷ நேரத்தில் அவ் வீரன் எவ்வாறு கட்டினானென்று வியப்படைந்தான். பிறகு தன் மாயா சக்தியினால் அவன் சங்கிலியின் கட்டை முறித்துக் கொண்டு, சிம்மநாதம் செய்து, திரும்பிவந்து தியாகராஜனாகிய வீரபுருஷனை வெகு லாகவமாகக் கையில் தூக்கி ஆகாயத்தில் சுழற்றினான்.

மேருவை வில்லாக வளைத்தவரும், கடலில் உண்டான கொடிய விஷத்தை உண்டு ஜீரணித்தவரும், யமனை உதைத்து வென்றவரும், கொடிய அசுரர்களை மாய்த்தவருமான தியாகேசன் தமது அற்புத சக்தியைச் சிறிது நேரம் வரையில் அடக்கிவைத்திருந்து மானிட வீரன் போல் அவனுடன் சண்டை செய்து சிறிது நேரம் தோற்று ஓடுவதுபோலும் சிறிது நேரம் ஜயித்து முன்வருவதுபோலும் லீலா விநோதம் செய்துகொண்டு விளங்கினார். அசுரனும் ஈசனுடன் பலவாறு கடும்போர் விளைத்து அவர் கையில் விளங்கும் சூலத்தைப் பிடுங்கி அவரையே அழிக்கவேண்டுமென்று கடைசியாக முயலவே தியாகராஜன், "இக்கொடிய அசுரனை இனி மாய்ப்பதே நலம்" என்றெண்ணித்தம் கையிலுள்ள சூலத்தால் அவனைக் குத்தி வீழ்த்தினார்.

அசுரர் குலத்தை அழிக்கவல்ல சூலத்தினல் அடியுண்ட ப்ரதார்க்கன் நாடு முழுவதும் நடுங்கத்தக்க ஒரு பேரிரைச்சலுடன், மலைபோன்ற சரீரத்தோடு பூமியில் விழுந்து உயிர் துறந்தான். தியாகராஜன் முன்போலவே பீடத்தில் அமர்ந்து விளங்கினர்.

பிறகு புண்ணிய க்ஷேத்திரத்து ஜனங்கள் யாவரும் அவ்வதிசயத்தை அரசனுக்கு அறிவித்து, வீரர்கள் மூலம் அசுரனின் மரம்போன்ற தோள்களையும் மலைபோன்ற சரீரத்தையும் கோடரி முதலிய ஆயுதங்களால் வெட்டித் துண்டாக்கித் துண்டுகளை யெல்லாம் வண்டிகளிலேற்றிக் கொண்டுபோய் அருகேயுள்ள வனத்தின் பள்ளங்களிற் புதைத்தார்கள்.

தியாகராஜன் அக்கொடிய அசுரனை வதைத்ததனல், தேவர்களும் முனிவர்களும் பக்த ரக்ஷகனை அவரைப் புகழ்ந்தார்கள். அதே தருணத்தில் தௌம்மிய மகரிஷியும், காத்தியாயன மகரிஷியும் திருவாரூர் வந்து வாதுலாகமத்தில் சொல்லப்பட்ட பிராயச்சித்த விதான முறைப்படி, தியாகராஜாவின் தேவாலயத்துக்கும் அங்நகரத்துக்கும் சுத்தஜல ப்ரோக்ஷணம் மந்திரஜல ப்ரோக்ஷணம் வருண ஜல ப்ரோக்ஷணம் அபிஷேகஜல ப்ரோக்ஷணம் முதலியவைகளைச் செய்தும், பலவித சாந்திகளையும் சாந்திவிதானப்படி நிறைவேற்றியும் தியாகராஜாவின் திருமேனிக்குச் சிரமம் நீங்கும்படி வஸந்தோத்ஸவ உபசாரம் முதலியவற்ருல் பிரபுவை அர்ச்சித்தார்கள். உலகரக்ஷகன் தியாகேசனென்றே புகழ்ந்தார்கள். மங்களநாயகன் ஆரூர் நாதனென்றே மகிழ்ந்தார்கள்.

## 15. சாமவேதத்தினல் நகருக்குச் சிறப்பளித்த லீலை.

முன்பு பத்மகற்பத்தில் பிரளயபாதனென்னும் மாயா ராக்ஷஸன் ஒருவன் இருந்தான். அவன் பந்தனம் (கட்டிவிடல் சிறையிடல்), ஸ்தம்பனம் (அசையவொட்டாமற்செய்தல்), ரோதனம் (தகைதல்), கத்தனம் (அலறும்படி செய்தல்) முதலிய மாயா மந்திரங்களின் உதவியால் தன் பலத்தைக்கொண்டு ஏழு உலகங்களிலும் உள்ள பிராணிகளைப் பலவாறு துன்புறுத்திவந்தான். ஒருநாள் அவன் மதங்க மகரிஷியின் ஆச்சிரமத்திலுள்ள ஆண்மான்களையும், பெண்மான்களையும் தன் மாயா மந்திரத்தினல் அசையவொட்டாமற் செய்தான். அதனைக்கண்ட மதங்கர் சினங்கொண்டு பதினயிரம் வருஷம் வரையில் அஸ்தகிரியின் குகையில் மலைப்பாம்பாக இருக்கும்படி அவனுக்குச் சாபமளித்துவிட்டுத் தன் தவமகிமையினல் அந்த மான்களை முன்போல் சுகமாக வாழும்படிச்செய்து தன் ஆச்சிரமத்தில் யோகம் செய்யலானர். பதினயிர வருஷங்களையும் மலைப்பாம்பாக இருந்து கழித்தபிறகு, பிரளயபாதனுக்கு முன்போல் மறுபடியும் ராக்ஷஸ சரீரம் கிடைத்துவிட்டது. முன்னமே இருந்த மந்திரசக்தியும், கொழுப்பும், கர்வமும் இரண்டு பங்கு அதிகமாக வளர்ந்துவிட்டன.

மதத்தினுலும், இயற்கையான குணத்தினுலும் அக்கொடிய அரக்கன் பிராணிகளுக்கு மறுபடியும் பலவாறு துன்பம் விளைவிக்க ஆரம்பித்தான். ஒருநாள் ஒரு மலையிலிருந்து வேறொரு மலைக்குத் தாண்டிக்கொண்டே தென்திசையை நோக்கி வருகையில், அந்த அரக்கன் மேடு பள்ளங்களும், காடுசெடிகளுமில்லாமல் பூமிதேவியின் முககமலம்போல விளங்கும் சோழநாட்டைக் கண்டு வியப்புற்றன். அதன் திலகமாய் விளங்கும் திருவாரூர் நகரின் சிறப்பையும், தேவாலயத்தின் அழகையும் கண்டு, பொருமைகொண்டு, தன் ரோதன சக்தியினல் ஆலயத்துக்குள் இருக்கும் ஜனங்கள் வெளியே

வரமுடியாமலும், வெளியே உள்ள ஜனங்கள் உள்ளே புக முடியாமலும், திருவாரூர் நகரத்துள்ளே இருக்கும் ஜனங்கள் வெளியே போகவொண்ணமலும், வெளியே உள்ள ஜனங்கள் திருவாரூர் நகருக்குள் செல்லவொண்ணமலும் தகைத்துவிட்டான். அப்பொழுது ஆங்காங்கு நிலைபெற்ற ஜனங்களின் கண்களை இருள் மூடிக் காதடைப்பும் உண்டாயிற்று. ஒருவர் பேச்சை மற்றொருவர் அறிந்துகொள்ள முடியாமல் ஜனங்களெல்லோரும் செவிடராயினர். ஒருவர் கண்ணுக்கு மற்றொருவர் புலப்படாமல் குருடர்போலாயினர். வெளியில் இருப்பவர் உள்ளே செல்லக் கால்கள் எழவில்லை. உள்ளே இருப்பவர் வெளியே செல்ல வழியை அறிந்துகொள்ள முடியவில்லை.

அக்கொடிய மாயையினால் ஜனங்களெல்லோரும் அழுது கதறினர்கள். பிரளயகாலம் வந்துவிட்டதாகவே எண்ணினர்கள். ஜீவராசிகள் பசி தாகத்தால் வாட்டத்தை அடைந்தன. "தியாகப்பிரபோ! பரமேசா! காத்தருள வேண்டும்" என்று புலம்பினர்கள்.

ராஜமாளிகைகளிலும், ஒவ்வொரு வீட்டிலும், நந்தவனங்களிலும், தடாகங்களிலும், தேவாலய மண்டபங்களிலும் நிலைபெற்ற ஜனங்கள் எல்லோரும் அவ்வாறு துன்பப்படும்போது புண்ணியபுரத்துக்கு அதிபதியாகிய விநயசோழ மகாராஜனும் அதேவிதமான துன்பத்தை அடைந்தான். அப்போது அந்நகரிலுள்ள சிறுவர் முதல் கிழவர்வரை எல்லா மனிதர்களும், மற்ற ஜீவராசிகளும் அவ்வசுரனுடைய மகாமாயையினால் இரண்டு முகூர்த்த காலம் அவ்வாறு பீடிக்கப்பட்டு, நாவில் ஜலம் சுரக்காமலும், கண்களில் இருள் மூடியும், பிறர் உரைப்பது காதில் கேளாமலும், நரகாவஸ்தையை வெகுவாக அனுபவிக்கையில் விநயசோழ சக்கரவர்த்தியானவன் "என்ன காரணத்தினால் நமது நகருக்கு இந்த ஆபத்து நேரிட்டதோ தெரியவில்லையே! இது அசுரமாயையோ! ராக்ஷஸ மாயையோ!

அல்லது யுகப்பிரளய காலமோ! ஜனங்களின் பாபமோ! கலியின் கொடுமையோ! ஒன்றும் தெரியவில்லையே! ஒரு காரியமும் செய்ய முடியவில்லையே! இரண்டு முகூர்த்தகால மாகியும் இம்மாயை நீங்கவில்லையே! தியாகராஜனும் மாயை யிலிருந்து தொண்டர்களை விடுவிக்கவில்லையே! இனி யார் நம்மைக் காப்பாற்றப் போகிறார்கள். திரிலோக சஞ்சாரியாகிய நாரதராவது இங்கு தோன்றுவாராயின், அவரது மெய்ஞ் ஞானத்தினால் இவ்விபத்தின் மூலகாரணத்தை அறிந்துகொள் ளலாம். அவர் எங்கே சென்றிருக்கிறாரோ" என்று இவ்வாறு மனம் நொந்து வாடினான்.

அத்தருணத்தில், ஈசனுடைய அருளினால் பக்தரின் இடரை நீக்குவதற்காகச் சஞ்சாரம் செய்யும் நாரத முனிவர் அங்கே தோன்றினர். திருவாரூர் நகருக்கு ஏற்பட்டிருக்கும் பிரளயகால மாயையைக் கண்டு ஆச்சரியமுற்றார். "இது பிரளய பாதாசுரனுடைய மாயையே தவிர வேறில்லை". என்று தியானத்தினால் அறிந்து, அந்நகரத்துக்குள்ளே நுழை யாமல், நாரதர் ஆகாயத்தில் நின்றுகொண்டே தம் கையில் விளங்கும் வீணையினால் ஸாமகானம் செய்ய ஆரம்பித்தார். ப்ருஹத்தந்திரம், ஊகம் முதலான வரஸாமங்களால் தியா கேசனைப் பாடித் துதிக்கையில் அவ்வேதகானத்தின் மகிமை யால் முதலில் அம்மன்னவன் மட்டும் அசுர மாயையினின்றும் நீங்கினான். அதனை அறிந்துகொண்ட தேவரிஷி மேன்மேலும் அந்த வசனங்களைக்கொண்டே கானம் செய்தார். அவ்வித ஸாமகானத்தினால் மனம் மகிழ்ந்த தியாகேசன் அந்நகரைக் கண்குளிரக் கடாக்ஷித்தார். பரமேசுவரனுடைய கண்ணோக் காலும், நாரதர் செய்த ஸாமகானத்தாலும் அம்மாயைக்குள் மூழ்கியவர்கள் ஒவ்வொருவராக மயக்கம் தீர்ந்து நித்திரையி லிருந்து எழுந்து வருபவர்கள்போல விளங்கினார்கள். மூன்று முகூர்த்தம் முடியும் வரையில் நாரதர் அவ்வாறு வேதகானம் செய்து ஜன ஸமூகத்தை அசுரமாயையிலிருந்து நீக்கி யருளினா ரென்று கேள்வியுற்ற ஜனங்கள் எல்லோரும் நாரதரைத்

துதித்து அவரைப் பூமியில் இறங்கச்செய்து அர்க்கியம், பாத்தியம், மதுபர்க்கம் முதலிய திவ்வியோபசாரங்களினால் அவரைப்பூஜித்துப் பிரதக்ஷிணம் செய்து, அவரால் தியாகேசனுடைய சக்தியையும், சிவதத்துவங்களையும் அறிந்து கொண்டு, தியாகேசனுக்குக் காவேரி தீர்த்தத்தால் சிறந்ததோர் அபிஷேகத்தை நடத்தி வைத்தார்கள்.

ஸாமகான மகிமையாலும், ஈசனுடைய கருணையாலும் அந்த ரோதன மாயை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது. மாயையைப் பிரயோகம் செய்த பிரளயபாதாசுரனுக்குக் கண்கள் அழிந்து, வயிறு வீங்கிப் பெருமூச்சு உண்டாகி 'வீல் வீல்' என்று அழுதுகொண்டு முடிவில் திருவாரூரில் கமலாலயத்தின் தென்கரையில் உயிர்துறந்தான். அவ்வசுரனுடனே அம்மகா மாயையும் அழிந்துவிட்டதென்று தேவர்களும் புஷ்பமாரி சொரிந்தனர். ரிஷிகள் நாரதரைப் புகழ்ந்தார்கள்.



## 16. நாரதருக்கு நன்மையளித்த லீலை.

தேவரிஷிகளுள் சிறந்தவராகிய நாரதர் வராககல்பத்தின் பாதபாகத்தின் த்ருதீயாக்கிரத்தில் உதித்தவர். வால்மீகி வியாசர் முதலிய முனிசிரேஷ்டர்களுக்கும் தத்துவ ஞான மளித்தவர். ஸரஸ்வதி நதிக்கரையிலும், மஹாகாள க்ஷேத்திரத்திலும், சக்திபுரத்திலும், அவிநாசியிலும், சிதம்பரத்திலும், கமலாலயத்தின் கரையிலும் ஆச்சிரமங்களை அமைத்துக் கொண்டு நெடுநாள் பரமேசுவர தியானம் செய்து தத்துவ ஞானம் பெற்றவர். சூரிய புத்திரனாகிய தர்மராஜனுக்கும் பாபங்களின் தன்மையையும், தண்டனையின் முறையையும், தர்மங்களையும் உரைத்தவர். பிரமன்முதல் பூச்சிவரையில் உள்ள ஜீவராசிகளுக்குப் பின்னால் நேரிடக்கூடிய சுபாசுபங்களை ஞானக்கண்ணால் அறிந்து உபாயமுரைப்பவர். அதர்ம வழிகளை யுக்தியால் வெல்லும் திறமைபெற்றவர். ஸாமவேதத்தை ஸாங்கமாய்க் கற்றவர். சங்கீத சாஸ்திரத்தின் ஸ்வர ஆலாபாதி லக்ஷணங்களை முதலில் ஸ்தாபித்தவர். தேவ கன்னிகைகளையும், அசுர கன்னிகைகளையும் நாட்டியத்தினால் வெட்கச் செய்தவர். நினைத்த மாத்திரத்திலேயே தடையின்றி எங்கும் செல்லவல்லவர். நியாய மார்க்கத்திலிருந்தும், தர்ம மார்க்கத்திலிருந்தும் வழுவாதவர். லோகாந்தர விசாரங்களையும், பரதத்துவத்தையும் பக்தர்களுக்கு உரைப்பவர். தேவஸேனைக்கும் தானவஸேனைக்கும் போர் நேரும்பொழுது அதைக்கண்டு களிப்பதில் மிக்க பிரியமுள்ளவர். போரை விளைவித்துத் தர்மத்தை நிலைநாட்டி வைப்பவர். திரிலோக சஞ்சாரியாக இருந்து தர்மங்களின் வழியை ஸ்தாபிப்பவர். நித்திய பிரம்மசாரியாகவும் ஜிதேந்திரியராகவும் விளங்குபவர்.

இவ்வித மகிமைவாய்ந்த நாரத ரிஷியினாலேயே அசுரரின் மாயை அழிந்துவிடுகிறது. அரக்கர்களின் குலம் அழிந்துவிடுகிறது என்று கேள்வியுற்ற ப்ரதாமனென்னும் அசுரன்

நாரதரை எவ்விதத்திலேனும் வதம் செய்ய வேண்டுமென்று தனது கூட்டாளிகளாகிய ப்ரமாதி, ப்ரசண்டன், ப்ரமநாரன், ப்ரதாரணன் என்னும் நான்கு மாயாவிகளுடன் நெடுநாளாய் நாரதர் வரும்வழியை எதிர்பார்த்திருந்தான். "காலையில் பாதாள லோகத்தில் இருந்தவர் முகூர்த்தகாலத்துக்குள் சுவர்க்க லோகம் சென்றுவிடுகிறார். அங்கிருந்து அரை நொடிப்பொழுதில் மனுஷ்ய லோகம் செல்லுகிறார். மற்றொரு நிமிஷத்துக்குள் கடலின் நடுவிலுள்ள தீவுகளில் நுழைந்துவிடுகிறார். சில சமயங்களில் ஆகாயத்திலேயே சஞ்சரித்து வாயுவேகமாக ஓடுகிறார். சில சமயங்களில் தேவ சபையிலும், சில சமயங்களில் அசுர ராஜனுகிய புரோசனனுடைய சபையிலும் தோன்றுகிறார். அவரைப் பிடிக்கத் தக்க சமயம் நேரவில்லையே! என் செய்வோம்" என்று நான்கு மாயாவிகளும் யோசித்துவருகையில், ப்ரதாமனென்னும் அசுரராஜன் காக்கை வடிவங்கொண்டு நார்தரைத் தேடிவந்தான். அப்போது யமுனை நதிக்கரையில் நாரதர் ஜபத்தை முடித்துவிட்டு ரத்நேசுவர க்ஷேத்திரத்தை நோக்கிப் புறப்பட்டார். ரிஷியின் அருகிலே காக்கை வடிவுடன் நெருங்கிய ப்ரதாமன் தாமதமில்லாமல் தனது அசுர வடிவத்தை எடுத்துக்கொண்டு, தன் மாயா சக்தியினுல் நான்கு பக்கங்களிலும் பெரும் புகையை உண்டுபண்ணினுன். அப்போதே அவன் தோழர்களாகிய நான்கு மாயாவிகளும் இருண்ட மேகத்தை மாயையினுல் காட்டினுர்கள். தன்னைச் சுற்றி நான்கு திசைகளிலும் கொடிய புகை கிளம்பவே அதைக்கண்டு பயந்த நாரதர் ஆகாயத்திற் கிளம்பிச் செல்ல முயன்றார்.

பயங்கரமான இடியும் மின்னலும் கூடிய மேகங்கள் ஆகாயத்தில் தோன்றவே, நாரதரால் மேலே எழும்ப முடியவில்லை. புகையின் வேகத்தினுல் அவர் கண்கள் கலங்கின. மூச்சுவிட முடியாமல் தவித்தார். "திடீரென்று இந்த யமுனைக் கரையில் இவ்வித அபாயம் நமக்கு நேரக்காரணம் துஷ்டரின் மாயையாகவே இருக்க வேண்டும். சிலவருஷங்களுக்கு முன்

புண்ணிய க்ஷேத்திரத்தில் பதிந்திருந்த மாயைக்கு உட்படாமல், ஆகாயத்தில் நின்றே பரமேசன் அருளால் அம்மாயாவியை அழித்தோம். இப்போது அவ்வித மாயாவிகளாகிய அரக்கர் செய்திருக்கும் மாயைக்கு உட்பட்டு விட்டோமே. அந்தத் தியாகேசன் ஒருவரே இப்போது நம்மைக் காத்தளிக்க வேண்டும். இல்லையாயின் இன்றோடு நமது யோகத்தை முடித்துவிட்டுப் பரமேசன் பாதத்தில் ஆன்மாவை அளித்து விடுவோம்" என்று நாரதர் யோசனை செய்தார். அத்தருணத்தில் ப்ரதாமன் என்பவன் அப்புகைக்குள் நுழைந்து வந்து, நாரதரைக் கட்டிப் பிடித்து ஒரு மரத்தடியில் வீழ்த்திப் பூமியில் பிணம்போல் சாய்த்துவிட்டான். பிறகு அவனது ஏவலினால் அந்நான்கு மாயாவிகளும் உலர்ந்த மரங்களைப் பிடுங்கிக் கொணர்ந்து, அக்கினியை மூட்டி, ஜ்வலிக்கச் செய்து, அந்த ஜ்வாலையின் நடுவில் நாரத மகரிஷியைத் தள்ளி, அவரை சாம்பலாக்கிவிடுவதற்காக அவரருகே வந்தார்கள்.

அப்போது பக்தரக்ஷகனை தியாகேசன், தன்னை நாரதர் க்ஷணகாலம் ஸ்மரித்த அளவிலேயே அவருக்கு நேரிட்ட ஆபத்தை நீக்கவேண்டுமென்று கருதியபொழுது நாரதருடைய கட்டுக்களெல்லாம் அழிந்துவிட்டன. கண்ணைத் திறந்தெழுந்த தேவரிஷி விரைவில் அவ்விடத்தை விட்டு அகன்று, மறுபடியும் யமுனையில் ஸ்நானம் செய்து, காயத்திரியை 108 தடவை ஜபித்து, வீணையினால் தியாகராஜனுடைய வைபவங்களையும் நாமஸங்கீர்த்தன மகிமைகளையும் கானம்செய்து கொண்டே ஆகாயமார்க்கமாகப் புண்ணியவ்ரத க்ஷேத்திரத்துக்குத் திரும்பிவிட்டார்.

அந்நான்கு மாயாவிகளும் கட்டைகளை அடுக்கித் தீமூட்டி ஜ்வலிக்கச்செய்து விட்டு, நாரதரை எடுத்துக் கொண்டுபோக வருகையில் அவர்களில் ஒருவனே மற்றவர்களின் கண்களுக்கும் ப்ரதாமாசுரனுடைய கண்களுக்கும் நாரதர்போல் ஈசுவர மாயையினால் தோன்றினன். ப்ரதாமாசுரனுடைய ஏவலால்,

நாரதர் போல் தோன்றிய அவ்வசுரனைக் கட்டிப் பிடித்து ஜ்வாலையில் வீழ்த்தி எரித்துவிட்டார்கள். மற்றோர் அசுரன் அப்போது நாரதர்போல் தோன்றவே அவனையும் முன் போலவே மற்றவர்கள் தகித்துவிட்டார்கள். இவ்வாறு தியாகேசனுடைய மாயையினால் அவ்வசுரர்கள் நால்வரும் ஒருவரை மற்றொருவர் கொழுந்துவிட்டெரியும் ஜ்வாலையில் தள்ளி அழித்துக்கொண்ட விஷயத்தை யறிந்த ப்ரதூமாசுரன் மனவெடிப்புண்டவனாகிச் சிலகாலம் வரையில் துக்கத்தோடு ஒரே குகையில் இருந்து காலத்தைக் கடத்திவந்தான்.



## 17. திருமாலுக்கு அருள்செய்த லீலை.

முன்பு ஒருசமயம் திருமால் பாற்கடலில் அரவணையின் மேல் பள்ளிகொண்டிருக்கையில் ஜலந்தரனென்னும் அசுரனொருவன் "திரிமூர்த்திகளையும் வென்று நானே அவர்களுக்கும் நியாமகனாகின்றேன்" என்று அசுரர்களின் கோஷ்டியில் சபதம் செய்துவிட்டு திரிமூர்த்திகள் இருக்குமிடத்தைத் தேடிக்கொண்டிருந்தான். உலோகாதிபதிகளாகிய அம்மூவரும் அவ்வசுரனுக்கு அஞ்ஞானத்தை உண்டுபண்ணித் தாம் அருகில் இருந்தபோதிலும் அவன் கண்களுக்குப் புலப்படாதவாறு செய்துவிட்டார்கள்.

ஒருநாள் மகாவிஷ்ணுவின் சக்கரத்துக்குப் பராக்கிரமம் குறைந்துவிட்டது. இவ்விதம் காரணமில்லாமல் திடீரென்று தம் சக்கராயுதத்துக்கு ஜ்வாலையும் வீரியமும் அசுரரை வெல்லும் சக்தியும் குறைந்துபோனதைக் கண்ட ரமாபதிக்கு மிக்க துக்கம் உண்டாயிற்று. "கொடிய தானவர்களை எவ்வாறு ஜயிப்போம்" என்று பயங்கொண்டார். "இதுவரை எல்லா அரக்கர்களையும் அழித்துக்கொண்டும் சதபத மந்திரங்களினால் ஜயிக்கப்பெற்றதாயும், பகைவர்களின் வ்யூகங்களைப் பலவாறு பிளந்துகொண்டு செல்வதாயும் மின்னல்போன்ற ஜ்வாலைகளையுடையதாயும், சகல ஆயுதங்களுக்கும் அரசனாயும், பிராணிகளின் பயத்தை நீக்குவதாயும், அநேகம் யந்திரங்கள் நிறைந்ததாயும், பக்தர்களின் துன்பத்தைத் துடைத்துக்கொண்டும் விளங்கிய இந்த ஸுதர்சன சக்கரமானது இப்போது சக்தியற்றுவிட்டதே, என்செய்வோம்" என்று வருத்தமடைந்தார்.

"முன்பு ஒரு சமயம் தியாகராஜப் பிரபுவானவர் நமக்கு உபதேசித்தபடி ஜம்புத்வீபத்திலுள்ள 23 ஸாரக்ஷேத்திரங்

களுக்கும் ஸார க்ஷேத்திரமாய் விளங்கும் புண்ணியபுரியை அடைந்து அந்தத் தியாகராஜனிடமிருந்தே இதன் காரணத்தை அறிந்துகொள்வோம்" என்று ஸங்கற்பம் செய்துகொண்டு திருவாரூர் நகருக்கு வந்து தியாகேசனைப் பணிந்து துதித்து அவரது முன்னிலையில் தம் சக்கராயுதத்தை வைத்து நின்றார்.

அப்போது தியாகேசர் தமது சூலாயுதத்தில் விளங்கும் சக்திபோலவே திருமாலுடைய சக்கராயுதத்திலும் சௌரிய பராக்கிரமங்கள் உண்டாகக்கடவன வென்று அருள்புரிந்தார்.

அந்த க்ஷணத்திலேயே சுதர்சனத்தின் அரங்களில் சுடர் வீசியது. முன்பு இருந்த ஒளியைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிகமான பராக்கிரமம் உண்டாயிற்று. அதனால் சந்தோஷமடைந்த மஹா விஷ்ணுவானவர் கமலகாயகி காதனுடைய அற்புத சக்தியைப் பற்றி ஸ்தோத்திரம் செய்தார். அத்தருணத்தில் ஓர் ஆகாயவாணி உண்டாகி "ஓ! புண்டரீகாக்ஷா! முன் ஒரு சமயம் நீர் கைலாசம் சென்று ஈசனைப் பணிந்து திரும்புகையில் ஒரு சிவயோகியின் சிறப்பைச் சிறிது இகழ்ந்து பேசிக்கொண்டே கருடன்மீது ஏறிவந்தீர். அச்சிவயோகியினிடம் செய்த அபசாரத்தினால் சுதர்சனமென்னும் உமது ஆயுதம் இவ்வாறு சக்தியை இழந்தது. இப்போது தியாகேசன் அருளால் அது விசேஷ மேன்மையை அடைந்துவிட்டது. சிவபக்தரிடம் புரிந்த அபசாரத்தின் பலனை எல்லோரும் இனி எளிதில் அறிந்துகொள்வார்கள்" என்று உரைத்ததைக் கேட்ட மகாவிஷ்ணு ஈசனை மறுபடியும் துதித்துவிட்டு மிக்க மகிழ்ச்சியுடன் தன் இருப்பிடம் அடைந்தார்.

இந்த லீலையைக் கேட்பதனால் சகல மந்திர சித்திகளும் செல்வமும் ஜயமும் உண்டாகும்.

---

## 18. இந்திரனைக் காத்தருளிய லீலை.

ஒருசமயம் சுதர்மையிலிருந்துகொண்டு, ஸ்வர்க்கலோகத்தையாளும் இந்திரன் தனது தந்தையாகிய கச்யபபிரஜாபதியின் முகத்திலிருந்து ப்ரம்மகைவர்த்த புராணத்தையும் ப்ரம்மவைவர்த்த புராணத்தையும், ஸ்காந்த புராணத்தையும், சிவரஹஸ்ய புராணத்தையும் மாசிமாஸ கிருஷ்ணபக்ஷ பஞ்சமி ஷஷ்டி சப்தமி அஷ்டமி என்னும் இந்த நான்கு தினங்களில் தேவ ஸபையில் சொல்லக் கேட்டுப் பரமானந்தமடைந்து மறுநாள் கைலாஸகிரியில் விளங்கும் மஹாதேவனைப் பணிய வேண்டுமென்னும் கருத்துடன் இந்திராணியை அழைத்துக் கொண்டு விமானமேறிக் கைலாசத்துக்கு வந்தான். அங்கே விளங்கும் பசுபதிப் பிரானுக்குத் தேவகங்கா ஜலத்தினால் அபிஷேகம் செய்து இந்திராணியின் கைகளினால் கற்பவிருக்ஷ மலர்களைப்பாதங்களில் அர்ச்சிக்கச்செய்து ப்ரதக்ஷிண நமஸ்காரங்களையும்செய்து தமது ஆத்மாவுக்குச் சிறப்பை உண்டுபண்ணிக்கொண்டு திரும்பினான். அப்போது ஓர் அசரீரிவாணியினால் ஏவப்பட்டு "இந்தக் கைலாஸபதியாகிய சங்கரனே புண்ணிய க்ஷேத்திரத்தில் தியாகராஜ மூர்த்தியாக விளங்குகிறார். அவரைத் தரிசித்துவிட்டு அப்பால் வானுலகை அடைவோம்" என்று நிச்சயித்து இந்திரன் இந்திராணியுடன் விமானமேறித் தென் திசையை நோக்கித் திரும்பினான்.

அப்போது அவர்களது விமானத்தைக்கண்ட பல்லரோமனென்னும் அரக்கன் மலைபோல் பறந்துவந்து அவ்விமானத்தின்மீது வீழ்ந்து அவர்களையும் தகைக்கத் துணிந்தான். காமசாரியாய்ச் செல்லவல்ல அவ்விமானமானது அவ்வரக்கன் பளுவைத் தாங்கமுடியாமல் தலைகீழாகத் திரும்பி கங்கா யமுனா ஸங்கமத்தின் பிரவாஹத்தில் வீழ்ந்தது. அவ்வரக்கனுடைய

கையை அடையாமல் இந்திராணியும் இந்திரனும் கங்கை வெள்ளத்தில் திடீரென்று விழுந்தார்கள். காமசாரியாகிய விமானம் முறிந்து தலைகீழாகிவிடவே தாங்கள் விழும்போது மிகவும் பயந்த இந்திராணியானவள் "நாதா! கைலாசபதியே! என் கணவன் உயிர் பிழைத்திருக்குமாறு அருள்புரிய வேண்டும். எங்களுக்கு நேரிட்ட இக்கொடிய துன்பத்தையும் நீக்கிக் காத்தருளவேண்டும்" என்று பரமேசனை மனத்தினால் துதித்துக்கொண்டு இந்திரனுடன் வெள்ளத்தில் வீழ்ந்து மூழ்கினாள். இந்திராணியின் பிரார்த்தனையைக்கேட்ட பக்தரக்ஷகனை தியாகபதி கங்காதேவியை ஏவினார். அப்போது கங்காதேவி சிறந்ததொரு விமானத்தைக் கையிலேந்திக்கொண்டு அவர்கள் முன்வந்து நின்று "புலோமன் புத்திரியே! புரந்தரனே! நான் கங்கா தேவி. பரஞ்சோதியினால் ஏவப்பட்டு நான் இவ் விமானத்துடன் உங்கள் முன் தோன்றினேன். எனது வெள்ளத்தில் விழுந்தபிறகு நீங்கள் பயத்தை அடையவேண்டாம். இவ்விமானத்தில் ஏறிக்கொள்ளுங்கள். இன்னும் அரை முகூர்த்தம் செல்லுவதற்குள் உங்களை நான் புண்ணிய க்ஷேத்திரத்திற் கொண்டுபோய் விடுகிறேன். நீங்கள் அவ்விடத்தில் தியாகப் பிரபுவைப் பணிவதற்குள் உங்கள் விமானமும் அங்கு வந்து சேரும். இதில் சீக்கிரமாக ஏறிக்கொள்ளுங்கள்" என்று கங்காதேவி வேண்டினாள்.

அப்போது தேவ தம்பதிகள் பக்தரக்ஷகனாகிய பரமேசுவரனுடைய கருணையைப்பற்றி மிக்க ஆச்சர்யமடைந்து ஆபத்திலிருந்து நீங்கியவர்களாகிக் கங்காதேவியையும் பலவாறு புகழ்ந்து அவ்விமானத்தில் ஏறிக்கொண்டார்கள். தெய்வத்தன்மைவாய்ந்த இந்திரனும் இந்திராணியும் அந்த நிமிஷநேரம் வரையில் ஆகாயசஞ்சாரி விமானத்தில் ஏறியிருந்தார்களேயல்லாமல் ஜலத்தில் சஞ்சரிக்கும் விமானத்தைக் காணாததால் மிக்க ஆச்சர்யத்துடன் அதைப் பார்த்து ஆனந்தமுற்று அதில் ஏறிக்கொண்டார்கள்.

கங்காதேவியினுல் செலுத்தப்பட்ட அந்த ஜலவிமான மானது கங்கா ஜலத்துக்குள் செல்லுகையில் அவர்கள் சில இடங்களில் சிவந்த பவழக் கொடிகளேயும், சில இடங் களில் அழகிய முத்துக்களையும், சில இடங்களில் ஹம்ஸம் சக்கரவாகம் முதலிய ஜலபக்ஷிகளின் வாஸஸ்தானங்களேயும் கண்டு களித்தார்கள்.

தேவ தம்பதிகள் மனத்திற் கருதியதுபோல் அவ்விமான மானது சில இடங்களில் ஜலத்தின்மேல் நீந்திக்கொண்டு சென்றது. அவ்வாறு செல்லுகையில் சாரதிபோல் முன் பாகத்தில் வீற்றிருக்கும் கங்கா தேவி அங்கங்கே புண்ணிய நதிகளின் ஸங்கம ஸ்தானங்களில் விளங்கும் லிங்க வடிவமாகப் பிரகாசிக்கும் சங்கரனுடைய மூர்த்திகளின் மகிமையை அவர் களுக்கு எடுத்துரைத்தாள். இவ்வாறு அத்தேவ தம்பதிகள் புண்ணிய நதிகளின் சேர்க்கையையும் அலைகளின் அழகையும் வேகத்தையும் பலவகை மத்ஸ்யங்களின் கூட்டத்தையும் பார்த் துக்கொண்டே சென்றார்கள். அரை முகூர்த்த காலம் கழிவதற் குள் கங்கா தேவியானவள் அநேகம் நதிகள் வழியாகவும் சமுத்திரம் வழியாகவும் நுழைந்து கிளம்பிப் பூமியின் கீழ் விளங்கும் அதல லோகத்திலுள்ள அதிசயங்களையும் இந்தி ராணிக்கும் இந்திரனுக்கும் காட்டிக்கொண்டு வெகுதூரம் தக்ஷிணத்திற் சென்று ஊற்று முகத்துவாரங்களையும் கடந்து காவிரியாற்றின் அடிப்பாகத்தையும் தாண்டி புண்ணியவ்ரத க்ஷேத்திரமென்னும் கமலாலயத்தின் ஜலத்துக்குள் பிரவே சித்து அங்கிருந்து அவ்விமானத்துடன் வெளியேகிளம்பினுள்.

கமலாலய தீர்த்தத்திலிருந்து திடீரென்று வெளியேகிளம் பித்தோன்றிய விமானத்தையும் அதில் முன்னுல் ஒரு ஸ்திரீ யும் உள்ளே இந்திரனும் இந்திராணியும் வீற்றிருப்பதையும் பார்த்த மஹரிஷிகளும் மற்றவர்களும் வியப்புடன் நோக்கு கையில் அந்த ஜல விமானத்துடனே கங்கா தேவியானவள்

மறைந்துவிட்டாள். காமசாரியாகிய இந்திர விமானமும் அரக்கனை உதறித்தள்ளிவிட்டு இந்திரனருகே வந்துசேர்ந்தது.

பிறகு புரந்திரன் இந்திராணியுடன் அந்தக் கமலாலயம் முதலிய 18 புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து தேவாலயத்துக்குள் சென்று தியாகராஜப் பெருமானை விதிப்படி வணங்கித் துதித்து அபிஷேகம் செய்வித்துச் சிறந்ததோர் உத்ஸவத்தையும் நடத்திவைத்தான். ஈசுவர தம்பதிகளைத் தேவ தம்பதிகள் கண்டு போற்றிக் களித்தபிறகு தாங்கள் கைலாஸத்துக்குச் சென்று திரும்புகையில் ஒரு கொடிய அரக்கனால் தங்கள் விமானம் கங்கையில் வீழ்த்தப்பட்ட செய்தியையும் இந்திராணி செய்துகொண்ட பிரார்த்தனையின்படி பரமேசன் கங்கையை ஏவி கங்காதேவியின் மூலம் ஜல விமானத்தின் வழியே தாங்கள் திருவாரூர் க்ஷேத்திரத்தை அடைந்த விஷயத்தையும் இந்திரனால் சொல்லக்கேட்ட அனைவரும் ஈசுவரனுடைய காருண்ய மேன்மையைப் பலவாறு புகழ்ந்து பேசித் துதித்தார்கள்.



## 19. நவக்ரகங்களின் நிலைமையைக் காத்த லீலை.

முன்பொரு காலத்தில் சதகுப்பனென்னும் அரக்கனொருவன் இருந்தான். தன் சிற்றப்பன் கட்டளைப்படி அவன் ஆயிரம் வருஷகாலம் வரையில் மிக்க கடின நியமமுள்ள தவம் புரிந்தான். அதனால் மகிழ்ச்சியுற்ற பிரமதேவன் அவன்முன் தோன்றவே அவன் " திரிமூர்த்திகளாலும், பிரஜாபதிகளாலும், தேவரிஷிகளாலும், மகரிஷிகளாலும், தேவர்களாலும், தானவர்களாலும், மனிதர்களாலும், யக்ஷர்களாலும், கந்தர்வர்களாலும், கிம்புருஷர்களாலும், கின்னரர்களாலும், வித்தியாதரர்களாலும், நாகர்களாலும், அரக்கர்களாலும், மற்ற எந்தத் தேவர்களாலும் எனக்கு மரணம் நேரிடாமல் இருக்க வேண்டும்" என்ற ஒரு வரத்தை அவரிடம் பெற்றுக்கொண்டான். அதனால் அவன் மிகவும் கொழுத்திருந்தான். நவக்கிரகங்களால் தனக்கு மரணம் நேரிடக்கூடாதென்று மட்டும் அவன் கேட்டுக்கொள்ளவில்லை. அழிக்கும் சக்தி நவக்கிரகங்களுக்கு உண்டு என்று அவன் எண்ணவேயில்லை.

தன் ஜாதியியற்கையினால் உலகத்திலுள்ள ஜீவராசிகளுக்கெல்லாம் சதகுப்பன் பலவாறு துன்பத்தை விளைவித்து வந்தான். அப்போது அவனது பராக்கிரமத்தைக் கண்டு இந்திரனிடம் பயத்தால் ஒளிந்திருந்த அரக்கர்களெல்லோரும் பயமற்று அந்த அரக்கனைத் தங்களுக்கு அரசனாக்கி உலகுக்குத் தீமையைச் செய்யலானார்கள்.

சதகுப்பனுடன் இந்திரன் போர்புரிந்து பல தடவைகளில் முறியடிக்கப்பட்ட சேனைகளையுடையவனாகி அபஜயத்தை அடைந்து பயந்தோடினான். தேவர்களும், முனிவர்களும் யோகிகளும் யாகம் முதலிய நற்காரியங்களை இயற்ற இயலாமல் மனம் வாடினார்கள்.

சதகுப்பனும் அவனது பரிஜனங்களாகிய அரக்கர்களும் இவ்வாறு மூன்று உலகங்களையும் அழித்துவருகையில் நாரதருடைய ஏவலால் ஞானசக்ஷுஸ் என்ற மஹரிஷியொருவர் சதகுப்பனுடைய சபையை அடைந்து அவனால் உபசரிக்கப் பெற்றுத் தம் வழிநடைக் களைப்பை ஆற்றிக்கொண்டு அங்கே சற்றுநேரம் வீற்றிருந்தார். அப்போது தம் ஜோதிஷ ஞானத்தினால் கண்ட விஷயங்களையெல்லாம் அவர் சதகுப்பனிடம் சொல்லிவிட்டுச் சென்றார்.

தனக்கும் தன் பந்துக்களுக்கும் அதிசீக்கிரத்தில் சில கிரஹங்களின் நோக்கினால் பெரிய துன்பம் நேரிடலாமென்று ஞானக் கண்ணால் முனிவர் சொல்லிப்போனது முதல் சதகுப்பன் பயமும், பெருமூச்சும், அதைரியமும் கொண்டு வாட்டத்தை அடைந்தான். அப்போது அவனுடைய மந்திரிகள் அவனுக்குப் பல்வாறு தைரியங்கூறி, "அந்நவக்கிரகங்களையே வேருடன் பிடுங்கி எறிந்துவிட்டால் உமக்குப் பயமேது?" என்று கூறவே அதுவே நல்ல யோசனையென்று சதகுப்பன் கருதினான். மந்திரிகளுக்கு நல்ல வெகுமதியளித்து அந்த அரக்கர்கோன் தனக்கு நிகரான பத்து அரக்கர்களை உதவியாக அழைத்துக்கொண்டு வானுலகிலுள்ள நவக்கிரகங்களையெல்லாம் நாசம்செய்து விடுவதாக ஆகாயத்திற் கிளம்பிப் பாய்ந்தான். வரத்தின் பலத்தால் கர்வம்கொண்ட அவன் ஆகாயத்தில் சஞ்சரித்த தேவர்களையும், கந்தர்வர்கள் முதலியோரையும் பூமியில் வீழ்த்தித் திரிமூர்த்திகளும் தனக்கு நிகரென்று நினையாமல் அட்டகாச கர்ஜனைகளைச் செய்துகொண்டு மிகவும் வேகமாக நவக்கிரகங்களின் இருப்பிடங்களை நோக்கிச் சென்றான். இவ்வாறு கொடிய காரியத்தைச் செய்யத்துணிந்த சதகுப்பனை எவ்வாறு அழிப்போம் என்று யோசனை செய்த தேவர்கள் எல்லோரும் பிரமனிடம் சரண்புகுந்து அவருடனும், அந்நவக்கிரகங்களின் அதிபதி தேவதைகளுடனும்

சென்று திருவாரூர் நாதனை அடைந்தார்கள். படைப்புக் காலம் முதல் அதுவரையில் நவக்கிரகங்களுக்கு அவ்வித துன்பம் நேரிட்டதேயில்லை.

அந்த அரக்கனுடைய நிச்செயலுக்கு அஞ்சித் தம்மைச் சரணடைந்த நவக்கிரகங்களையும், ரிஷிகளையும், தேவர்களையும் பார்த்த தியாகேசர் "பிரஹ்மா முதலான தேவர்களே, இந்த ராக்ஷஸன் அருந்தவம் புரிந்து நவக்கிரகங்கள் தவிர மற்ற எவராலும் தனக்கு நாசம் நேரிடலாகாதென்று முன்னமே பிரமனிடம் வரம்பெற்று உலகை அழித்துவருகிறான். ஆகை யால் இந்த நவக்கிரகங்களைக் கொண்டே அவனை மாய்க்க வேண்டும். நீங்கள் யாவரும் இருப்பிடம் செல்லுங்கள். நவக் கிரகங்களின் அதிஷ்டான தேவர்கள் மட்டும் என் அருகில் இருக்கட்டும். அவ்வரக்கனை மாய்த்தபிறகு அவர்களும் தம் இருப்பிடம் சென்று முன்போல் விளங்கக்கடவர். அரக்கன் அழியும் வரையில் இங்கே என் முன் நிலைபெற்றிருக்கும் இந்தக் கிரகங்களின் பார்வையால் பதினான்கு உலகிலுமுள்ள ஸகல ஜீவராசிகளின் நன்மை தீமைகளும் நிலை மாறாமல் கிரம மாக நடைபெறும். ஜோதிஷ சாஸ்திரத்தின் மகிமையும் இனி உலகில் வெளியாகும்" என்று சொல்லி அவர்களை யனுப்பி விட்டுத் தம் எதிரில் இருந்த நவக்கிரஹங்களுக்கு அவர்கள் நிலையை அளித்து "நீங்கள் பயப்படவேண்டாம். உங்களுக்கு அபயம் அளித்துவிட்டேன். உங்களில் யார் யார் குரூர கிரகங்களோ, எந்த எந்த ஸ்தானங்களில் நிலைபெற்றால் உங்கள் வீக்ஷண்யத்தால் அவ்வரக்கனுக்கு அழிவு நேரிடுமோ அந்த விதமாக நீங்கள் இப்போதே அவ்வரக்கனை நோக்குவீர்கள்" என்று கட்டளையிட்டார்.

ஜகத்பதியான தியாகபதியின் கட்டளையால் அந்நவக்கிர ஹங்கள் ஸமஸ்தானத்தை நீங்கி விஷமஸ்தானத்தை அடைந்து அவ்வரக்கர் குலத்தை அழிக்கக்கூடிய கொடிய பார்வையைச்

செலுத்தினார்கள். அவர்கள் விஷமஸ்தானத்திலிருந்து பகைக் கிரகத்தின் பார்வையுடன் அவ்வரக்கனை நோக்குகையில் ஆகாயத்தில் பறந்துசென்ற அந்த அரக்கன் திடீரென்று தன் மாயையை இழந்து சக்தியற்றுப் பூமியில் வீழ்ந்தான். ராக்ஷஸ ஸ்வபாவத்தால் அக்குள்ள பூலோக மன்னனுடன் வலுவில் சண்டைசெய்து பலக்குறைவையடைந்தான். நவக்கிரஹங் களின் விஷமப்பார்வையினால் சரீரம் இளைத்து மாயையும் பலமும் குறைந்து ஒரு மாதத்துக்குள் உயிரையும் துறந்தான். அப்போது தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்.

தியாகராஜப் பிரபுவினால் விடைகொடுக்கப்பெற்ற நவக் கிரஹங்கள் தம் இருப்பிடம் சென்று அழியா நிலையையடைந்து வாழ்ந்தார்கள். அதுமுதல் தியாகராஜனுடைய திவ்ய சக்தி உலகில் பரவியதோடு நவக்கிரஹங்களின் சுபாசுபப்பார்வை களினால் எல்லா ஜீவராசிகளுக்கும் உண்டாகும் செல்வம், பலம், ஆரோக்கியம், ஆயுள்விருத்தி முதலிய மேன்மைகளை எல்லா ஜனங்களும் அறிந்து திருவாரூரில் நவக்கிரஹ பூஜை யும் நடத்தி வந்தார்கள்.



## 20. ருத்ரசாவகரிஷிக்குப்பூர்வஞானமளித்தலீலை.

சிவபக்தியிற் சிறந்தவரான ருத்ரசாவகரிஷி யென்று ஒருவர் இருந்தார். அவர் கமலாலயத்தின் கரையில் நூறு வருஷகாலம் வரையில் தியாகேசனைக்குறித்துத் திவ்யதாரணை செய்து அவரிடமிருந்து தாம் பெற்ற தத்வஞானத்தையும் தமது பூர்வ கர்மங்களின் பயனையும் ஜன்மப்ராப்தியையும் தமது சிஷ்யர்களான ச்யவனர் முதலியவர்களுக்கு விரிவாக உரைத்தார். அதன் சுருக்கம் வருமாறு:—

பரமேசுவர பக்தியானது எப்பொருளையும் அளிக்கும். மாயையின் சூழ்ச்சியைநீக்கித் திவ்ய ஞானத்தையும் அளிக்கும். ஈசுவரபக்தியே ஆத்மாவுக்கு உற்றதுணையாகவிளங்கும். பீபங்களை ஒழித்து நற்பதத்தையளிக்கும். அத்தகைய தியாகேச பக்தியினுல் நான் பெற்ற நன்மைகளைச் சொல்லுகிறேன். ஆதியில் நான் ப்ரஹ்லாதருவென்னும் ஒரு மஹாராஜனுடைய காட்டில் ஒரு கிளியாய்ப்பிறந்தேன். குடும்பக்கடலில் அநாதியாக உழன்றுகொண்டிருக்கும் ஜீவர்களுக்கு உண்டாகும் பூர்வ பாபமே ஜன்மங்களுக்குக் காரணம். அவ்விதமான பூர்வ பாபங்களினுல் எனக்கு ஒரு கிளி ஜன்மம் கிடைத்தது. எல்லா ஜீவராசிகளுக்கும் பரமேசன் அளித்திருக்கும் ஆயுளை வீணில் கழிக்காமல் நல்வழியில் செலுத்துகின்றவர்களுக்கு நன்மை உண்டாகுமென்று பெரியோர்கள் சொல்வர். அந்த வசனத்தை நான் பூர்வ ஜன்மங்களில் அறிந்திருந்தபடியால் விடியற்காலத்தில் நான் எனது எதிரில் உதிக்கும் சூரியனுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு இரை தேடும்பொருட்டு வெளியே செல்வேன். இவ்வாறு சில நாள் வரையில் சூரிய நமஸ்காரம் செய்த பலத்தினுல் எனக்கு அரண்மனையில் வாசம்கிடைத்தது. அங்கே வந்துகூடும் சாதுக்களையும் மகரிஷிகளையும் நான்

கூட்டிலிருந்தபடியே பணிவேன். அவர்கள் சொல்லும் நல்ல கதைகளை நான் கேட்டுவந்தபடியால் மறு ஜன்மத்தில் எனக்கு மயிலின் சரீரம் கிடைத்தது. கிளி ஜன்மத்தில் சாதுக்கள் உரைத்த ஈசுவரபக்தியை நான் கேட்டிருந்தபடியால் மயில் ஜன்மத்தில் அங்கங்கே புண்ணியநதி தீரங்களிலும் புண்ணிய க்ஷேத்திரங்களிலும் விளங்கும் லிங்கமூர்த்திகளுக்கு என் அழகிய தோகையினால் விசிறிப்பணிவிடை செய்து வந்தேன். கிரீஷ்மகாலங்களில் (ஆனி ஆடி மாதங்களில்) உக்கிரமான வெயில் வீசும்போது வழியில் சஞ்சரிக்கும் முனிவர்களின்மீது என் தோகைகளால் நிழலை அளித்து வந்தேன்; கார்த்திகேயனுடைய கண்கள் களிக்கும்படி பலவாறு நடனம் புரிந்துவந்தேன். இவ்வித நற்செய்கைகளினால் எனக்கு இந்த மனுஷ்யஜன்மம் அதிலும் பிராமணஜன்மம் கிடைத்தது. நான் எனது தந்தையாகிய அஷ்டா[illegible] மகரிஷியினால் எட்டுவயதில் உபநயனம் செய்விக்கப்[illegible] குருவின் ஆச்சிரமத்தை அடைந்தேன். என் குருவின் கருணையினால் சாஸ்திரஅபீபியாசம் செய்தேன். அப்போது அவருடைய ஆச்சிரமத்துக்கு அநேக மகரிஷிகளும், தேவரிஷிகளும், பிரம்மரிஷிகளும், யோகிகளும், சுரோத்திரியர்களும் அதிதிகளாக வருவார்கள். அவர்களிடம் நான் அளவற்ற பக்திகொண்டு அவர்கள் விரும்பியபடி பணிவிடை செய்வேன். அவர்கள் செய்யும் ஸ்நான ஜபாதிகளுக்கு நான் மிக்க உதவியாக இருப்பேன். அதனால் மகிழ்ச்சியடைந்து அம்முனிவர்கள் எனக்கு ஆசிகூறிச் செல்வார்கள். அவர்களுடைய ஆசீர்வாதமகிமையாலும், என்குருவின் அருளாலும் நான் வித்யாப்யாஸத்தில் முதன்மையாக நின்றேன். பிறகு குருவினிடம் விடைபெற்று நான் வீட்டுக்குத்திரும்பி இல்லறத்தில் அமர்ந்தேன். ஆயினும் ஈசுவரபக்தியும் சத்திய தர்மத்தில் விருப்பமும் உண்டாயின. என் தந்தையின் கட்டளைப்படி புண்ணியக்ஷேத்திரங்களில் சஞ்சாரம்செய்தேன். அப்போது சில மகரிஷிகளைச் சந்தித்து அவர்களுக்குப் பணி

விடைசெய்து ஈசுவரதத்துவத்தை அறிந்தேன். பிறகு நான் பல புண்ணிய ஸ்தலங்களில் அஷ்டாங்க யோகங்களைச்செய்து பிரம்மஞானத்தை யடைந்த படியால் பரிபூர்ணமனோரதத்து டன் வீட்டுக்குத்திரும்பினேன். அப்போது ஜரையினால் பீடிக் கப்பட்ட என்தாய் முன்னும் என் தந்தை பின்னும் சிவஸாயுஜ் யத்தை அடைந்தார்கள். அவர்களுடைய கிரியைகளை நடத்தி விட்டு நான் வைராக்கியத்தை யடைந்து கங்கை, காவேரி முத லான புண்ணிய தீர்த்தங்களில் பிதுர்தர்ப்பணம் செய்தேன். பிரம்மா, விஷ்ணு, சிவன், சூரியன், பசு, பித்ருக்கள், தேவர்கள், அக்கினி, இவர்களிடம் பக்தி செய்து அவர்களின் நாம கீர்த்தனங்களையும் தியானங்களையும் செய்து வந்தேன். அதனால் என் யோகநிலைக்கு ஒருவித விரோதமும் நேரவில்லை. அது முதல் பிரம்மவிசாரத்திலேயே எனக்கு அதிக விருப்பம் உண்டாயிற்று. காசி, கேதாரம், கோகர்ணம் முதலிய புண் யஸ்தலங்களில் பிரம்மத்தியானம் செய்தபிறகு, புண்ணியவ்ரத க்ஷேத்திரமாகிய இந்தத்திருவாரூரில் விளங்கும் தியாகேசனை உபாஸித்தேன். கமலாலயத்தின் கரையில் நெடுநாள் தவம் செய்தேன். தியாகராஜனுடைய உண்மை ஸத்யவடிவின் தரிச னத்தை எதிர்பார்த்திருந்தேன். ஒருநாள் இரவு இரண்டாம் யாமம் ஆரம்பத்தில் கோடி சூரியப்பிரகாசம் பொருந்திய தியாகமூர்த்தி என்னெதிரே விளங்கினார். அப்பரப்பிரம்மத்தை நான் கண்டு பரமானந்தமடைந்து ஆனந்தக்கண்ணீர்சொரியவும், குரல் தழுதழுக்கவும் நான் அஞ்சலிசெய்து பலவாறு துதி செய்து பணிந்து பரமேசனுடன் ஐக்யசெல்வத்தை விரும்பி னேன். அப்போது அப்பரஞ்சோதி அந்தர்த்தானத்தை அடைந்தவுடனே ஓர் அசரீரிவாக்கு உண்டாயிற்று. "ஓ யோக நாதா! உனது பக்தியைக்கண்டு களித்தேன். பிரம்ம லிபியின் மரியாதையை மீறாமல் நீர் இன்னும் சிலகாலம் உலக வாசம்செய்து பிறகு நமது பதவியை அடையலாம். உமது பாபங்களெல்லாம் தீயிலிட்ட பஞ்சுபோலாயின. உமது பூர்வ

ஜன்மத்தை அறியவல்ல ஞானத்தை உமக்களித்தேன். நல்ல சிஷ்யர்களுக்குப் பரதத்துவ உபதேசம் செய்து கொண்டேயிருந்து முடிவில் நம்முடன் கலப்பீர்'' என்ற அசரீரி வாக்கைக் கேட்டபிறகு நான் உங்களுக்குத் தியாகராஜனின் மகிமையை உரைக்கலானேன்.

இவ்வாறு ருத்ர சாவக மகரிஷி உரைக்கக் கேட்ட ச்யவனர் முதலிய யோகிகளும் முனிவர்களும் தியாகேசனுடைய அற்புத கருணையைப் புகழ்ந்ததுடன் நல்ல காரியங்களை விடாமல் செய்து வந்ததால் உண்டான பலனின் பெருமையையும் கேட்டு மகிழ்ந்தார்கள்.

## 21. துர்வாச முனிவருக்கு கங்கையையளித்த லீலே.

சிவபக்தர்களிற் சிறந்தவராகிய துர்வாச மகரிஷியானவர் நெடுநாள் வரையில் கங்கா நதியின் கரையில் வீற்றிருந்து பரமேசுவர லிங்கத்தைத் தொழுது காலங்கழித்து வந்தார். ஒருசமயம் அவர் திருச்சிற்றம்பலப் பொருளேத் தரிசிக்க வேண்டுமென்று தக்ஷிணதேச யாத்திரையாகச் சென்றூர். அப்போது மணிகர்ணிகையில் நீராடித் திருக்காளத்தியப்பரைத் தொழுது அங்கிருந்து புறப்பட்டு அருணகிரிநாதரைப் பணிந்து அங்கிருந்து பிரயாணமாகிச் சிதம்பரத்தை அடைந்து அங்கே சிலகாலம் தியானம்செய்திருந்து ரஹஸ்ய தத்துவத்தை அறிந்துகொண்டு பிறகு புண்ணியபுர க்ஷேத்திரத்திற்கு வந்தார்.

புண்ணியபுர க்ஷேத்திரத்தில் விளங்கும் தியாகமூர்த்தியை வணங்கித் துதித்துச் சிலநாள்வரை அங்கே வாசம் செய்தார். அங்கே கமலாலயத்தின் கரையில் ஒரு பர்ணசாலேயை அமைத்துக்கொண்டு மகரிஷி தமது சிஷ்யர்களுக்கு சைவ தந்திரங்களேயும் சைவா[illegible]களேயும் உபதேசம் செய்து வந்தார். அப்போது முனிவருக்குத் தாபமென்னும் ஒரு நோய் உண்டாயிற்று. அதனல் அவருடைய உடல் கன்றிவிட்டது. அதனல் அவர் மறுபடி கங்கா தீரத்திற்குச் செல்லச் சக்தியற்றிருந்தார். தாபம் அடங்கும்வரையில் துர்வாச முனிவர் கமலாலயக் கரையிலேயே வசிப்பதாக உறுதி செய்துகொண்டார். தியாகேசருடைய கருணையின்ல் அங்கே வசிக்கும் தபோநிதியாகிய துர்வாசரை ஆஸ்திகரெல்லோரும் அடைந்து தத்துவப் பொருளேயும் வேதங்களின் கருத்தையும் வேதாந்தத்தின் கருத்தையும் அவரிடம் உணர்ந்துகொண்டார்கள்.

துர்வாஸ முனிவரது ஞானத்தையும் ஈசுவர பக்தியையும் கண்ட புலவர்கள் யாவரும் அவருக்குத்தொண்டு செய்து நற்பலனை அடைந்தார்கள். இவ்வாறு முனிவர் திருவாரூரில் வசிக்கையில் சூரிய கிரஹண புண்ணியகாலம் நேர்ந்தது. அப்போது ஸ்நானம், தர்ப்பணம், ஜபம், இவைகளைச்செய்யத் துர்வாசமுனிவர் மெல்ல எழுந்து ஸ்நான கட்டத்தை அடைந்து கமலாலயத்தின் சுத்த ஜலத்தை ஆசமனீயம் செய்து பக்தியுடன் சங்கற்பம் பண்ணுகையில், "இப்புண்ணிய காலத்தில் கங்காஸ்நானம் செய்வது வெகு விசேஷபலனை அளிக்குமே! இந்த க்ஷேத்திரத்துக்கு அவ்வித சிவ கங்கையொன்று தான் குறை", என்று மனத்தில் நினைக்கவே தியாகேசர் கங்காதேவியை ஸ்மரித்து "நீ இந்தக்ஷணமே இங்கே விளங்கும் கமலாலய புண்ணிய தீர்த்தத்துடன் வந்து கலந்து வாழக்கடவாய்" என்று ஆஞ்ஞை செய்துவிட்டார். உடனே இமயமலையில் உற்பத்தியாகி கயிலையை வலம் வந்து மனுஷ்யலோக பாக்கியமாய்ப் பூவுலகில் இறங்கிவரும் கங்காதேவியானவள் தியாகேசர் கட்டளையை மாலைபோல் சிரஸில் தரித்துக்கொண்டு கமலாலயத்துக்கு நேராக ஆகாயத்தில் தோன்றி வெள்ளைத் தாரையாய் கமலாலயத்தில் வீழ்ந்து அந்தத்தூய ஜலத்துடன் கலந்து விளங்கினள். திடீரென்று கங்காதேவி எதிர்பாராமல் கமலாலயத்தில் வீழ்வதைக்கண்ட ஜனங்களும் மகரிஷிகளும் வியப்புற்று "நமது புண்ணிய க்ஷேத்திரத்தில் தியாகராஜாவின் ஸாந்நித்யத்தால் எல்லா மேன்மைகளும் உண்டாகிவிட்டன. கமலாலயத்துக்குக் கங்கா சம்பந்தம் ஒன்றுதான் குறையாக இருந்தது. இப்போது அதுவும் நீங்கிவிட்டது. கமலாலயத்துக்கு இவ்வாறு கங்கையின் சேர்க்கை உண்டானதற்குக் காரணம் தியாகேசன் அருளோ! துர்வாச மகரிஷியின் தவமோ! நமது நகரத்தின் பாக்கியமோ!" என்று பலவாறு எண்ணி மகாமுனிவரை அணுகிப்பணிந்து, "மஹரிஷியே! திரிகால ஞானியே! அருநிதியே! இப்புண்ணிய தீர்த்தக்

கரையில் தாங்கள் வசித்த மகிமையினுலே கங்காதேவியின் ஸம்பந்தம் இந்த ஸரஸுக்கு நேரிட்டது. ஆனுலும் கங்கா தேவியின் மகிமையை நாங்கள் சற்றும் அறியவில்லை. பாபத் தினுற் பிடிக்கப்பட்டுப் பிறவிக்கடலுள் உழலும் எங்கள் ஜன்மம் ஈடேறும் வண்ணம் கங்கையின் சிறப்பை எங்களுக்கு விளக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்தனர்.

அப்போது துர்வாஸர் "மிகவும் பரிசுத்தமான சிவபெரு மானுடைய ஜடாபாரத்திலிருந்து வெளிவந்து பூவுலகில் விளங் கும் இந்த கங்கா நதியில் நீராடுபவர்கள் பாப கர்மங்கள் ஒழிந்து ஆயிரம் வருஷகாலம்வரை சுவர்க்கபோகத்தை யடைந்து பிறகு பசுபதியின் பதவியைப் பெறுவார்கள். தபஸ்வி களாலும், யோகிகளாலும், தேவர்களாலும், தேவரிஷிகளா லும் கொண்டாடப்பட்ட கங்கையின் ஜலத்தை ஆசமனம் செய்பவர்களும், கங்கையை மனத்தில் நினைப்பவர்களும் எவ்வித மான கொடிய பாபங்களும் நீங்கிச் சிறந்த நிலன்களை யடை வார்கள். பகீரத மஹாராஜனுல் சகர புத்திரர்களுக்கு நற் கதியை அளிக்கச் செய்த இந்தக் கங்காநதியில் தர்ப்பணஞ் செய்பவர்கள் தானம் செய்பவர்கள் இவர்களுடைய பித்ருக் களும், பிதாமஹர்களும் பிரபிதாமஹர்களும் அவர்களுடைய தாதைகளும் ஸ்வர்க்கலோகத்திலும் பிதுர்லோகத்திலும் சிறந்த சுகத்தை அடைவார்கள். கங்கையில் சரீரத்தை விடு கிறவர்கள் ஸப்தரிஷி லோகத்தில் விளங்குவார்கள். கங்கை கங்கையென்று கங்கையின் நாமத்தை ஸ்மரிப்பவர்கள் மூன்று ஜன்மங்களில் தேடிய பாபங்களை ஒழிப்பார்கள். மைத்திரே யர் முதலிய மகரிஷிகள் கங்கையின் மகிமையைப் பலவாறு பாராட்டியிருக்கிருர்கள். தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் மேன்மை உண்டாகியிருப்பதற்கு முதற்காரணம் கங்கையே" என்று சொன்னுர். இதைக்கேட்ட ஜனங்கள் யாவரும் அந்த ஸூர்ய கிரகண புண்ணிய காலத்தில் அம்முனிவரிடமிருந்து

ஸாங்க ஸங்கற்பத்தையடைந்து கமலாலயத்தில் நீராடிப் பிராம ணர்களுக்கும் சுரோத்திரியர்களுக்கும் விசேஷமான தானங் களைச் செய்து மனத்தெளிவுடன் பரமானந்தமடைந்தார்கள்.

அதுமுதல் துர்வாஸரால் வருவிக்கப்பெற்ற கங்கையின் சம்பந்தத்தைப் பெற்ற கமலாலயத்துக்கு 'கங்காஹ்ரதம்' என்ற பெயர் உண்டாயிற்று. அக்கமலாலயத்தின் ஜலத்தை உட்கொண்ட ஸகல ஜீவராசிகளும் வானுலகில் மேன்மையுற்றுச் சிறப்புடன் வாழ்ந்தார்கள். கமலாலயத்தில் நீராடியதால் அம் முனிவரின் தேக தாபமும் நீங்கிவிட்டது. ஆரோக்கியமும் அதிகமாக உண்டாகவே துர்வாஸ முனிவரால் கமலாலயத் துக்கு "தாபஹாரணி" என்ற மற்றொரு பெயரும் அளிக்கப் பட்டது.

இந்த லீலையைக் கேட்பவர்கள் எல்லாப் பாபங்களும் ஒழிந்து சிறப்புடன் வானுலகை அடைவார்கள். கங்கையின் மகிமையும் நன்றாய் விளங்கும். காயத்திரி ஜப பலனும் உண் டாகும்.



---

குறிப்பு:—1. தியாகேசர் தேர்முட்டியின் தென்மேற்கில் உள்ள துலா நாயனார் கோயிலெனப்படும் ஸந்நிதியில் விநாயகர் பக்கத் தில் துர்வாசரது பிம்பம் வியாக்கிரத்தின் மேல் இருப் பதைக் காணலாம்.

2. கமலாலய தீர்த்தத்தின் தென்கரையில் துர்வாச மகரிஷி மடமும் உண்டு.

3. கமலாலய நாயகியை துர்வாசர் மந்த்ர பூர்வமாக அர்ச்சித்த விருத்தாந்தமும் நவாவரண கீர்த்தனையினால் தெரிகிறது.

## 22. காசியபருக்குத் தத்துவம் உரைத்த லீலை.

ஒரு சமயம் வடதிசையிலிருந்து தக்ஷிண யாத்திரையாக வந்த காசியப முனிவர் திருவாரூரில் விளக்கும் கமலாலயத்தின் கரையில் நியமத்துடன் வெகுநாள் தவஞ்செய்தார். அவருடைய தவத்தின் சிறப்பையும் மனத் தூய்மையையும் பக்தியின் உறுதியையும் கண்டு மகிழ்ந்த தியாகராஜர் முனிவர் முன் தோன்றி "என்ன வரம் வேண்டும்? கேட்பீராக" என்று கேட்கவே, காசியப ரிஷி பரமானந்தமடைந்து பணிவுடன் பலவாறு துதித்து அஞ்சலிசெய்து, "வேதத்தின் ஒளியே! தியாகேச! உம் கிருபையினால் இதுவரையில் அடியேன் அஷ்டாங்க யோகங்களையும் அரிய தவங்களையும் இடையூறின்றி முடித்து அவற்றின் பலனையடைந்தேன். அடியேனது சரீரம் உள்ளவரையில் உம்மிடம் அடியேன் பக்தி விளங்கவேண்டும். இப்போது அடியேன் வேண்டுவது 'அபாம ஸோமம்.' என்னும் வேத பாகத்துக்குப் பொருள். அதனடியாகவுள்ள எல்லாத் தத்துவங்களையும் ரக்ஷகராகிய நீரே அடியேனுக்கும் அருகிலுள்ள சிஷ்யர்களுக்கும் உரைத்தருளவேண்டும்" என்னும் வரத்தைக் கேட்டார். அதுவரை அவ்வாறு ஒருவரும் வரம் கேளாமையால் தியாகேசர் மிக மகிழ்ந்து காசியபரை நோக்கி உரைக்கலானார் :—

"தத்துவ ஞானத்தில் விருப்பமுள்ள ரிஷி சிரேஷ்டர்களே! கேளுங்கள். யாக கல்ப முறைப்படி ஒரு வருஷம்வரை தீக்ஷிதனுப் பகலில் ஹோமம் செய்வதால் உண்டாகும் பயனைப் புண்ணிய தீர்த்தத்தில் பக்தியோடு நீராடுபவன் அடைவான். யாக தீக்ஷிதன் ஹோம மகிமையினால் பகற்கால பாபங்களையும் இராக்கால பாபங்களையும் ஒழித்து அபமிருத்தியு முதலிய இடையூறுகளையும் நீக்கி நல்ல தேஜஸ்ஸுடனும் நல்ல வார்த்

தைகளுடனும் சூர்ய கிரணங்களால் தரிக்கப்பட்டு விளங்கும் யஜமானபூத காரணபூத ஜகத் பீஜமாய் விளங்கும் பிரம்ம லோகத்தில் பிரகாசிக்கும் பரம்பொருளை அடைவான். அப்போதுதான் ஜீவன் புண்ணிய புருஷன் சுக்ருதமுடையவன், ஐக்கியபாசுரனெனப்படுவான். அநித்தியமான திரவியங்களின் சேர்க்கையை ஒழித்து அக்ஷயம் எனப்படுவான். சாதுர்மாஸ்ய யாஜியும் இவ்வித சுக்ருதத்தை யடைவான். சூரியன் உதிக்கும்போதும் அஸ்தமித்த பிறகும் சூரிய மூர்த்தியைத் தியானம் செய்பவன் பிராமணத் தன்மையில் முதல்வனாக விளங்கி எல்லா க்ஷேமங்களையும் அடைவான். ஆதித்தியன் பிரம்ம ஸ்வரூபி எனப்படுவான். சோம்பலை நீக்கித் தக்க சமயங்களில் துயிலாமல் கர்மானுஷ்டானங்கள் செய்து பரப்பிரம்மத்தை அடைவான். தேவர்களும் கண்விழிப்புடனிருந்து அப்பிரம்மத்தையே அடைவார்கள். ஸர்வ பூதங்களின் வடிவமாயுமுள்ள பிரம்மத்தைத் தானாகவே பாவித்து ஸ்மரணம் செய்யவேண்டும். பிரம்மஸ்வரூபமாய் அமிர்தத்தைப் பற்றுவான். வேதாத்ம ஸ்வரூபத்தைத் தன் மனத்திலும் காண்பான். கர்மத்தை ஒழித்தவன் அபாமச்லோக சிரவணத்தினால் தத்துவத்தை அடைவான். உத்தாலகர், ஆருணி, ச்வேதகேது இவர்களும் இத்தகையரே. ஞானத்தினால் பல சித்திகள் உண்டாகும். துக்கத்தைக் கொடுக்கும் கர்மங்களை விட்டுவிடவேண்டும். சிரத்தையினாலும் உபநிஷத ஞானத்தினாலும் அவித்யாமாயையை அழிக்கவேண்டும். ஆசாரிய குலத்திலிருந்து வேதங்களையும் கர்மானுஷ்டான முறைகளையும் கற்றறிய வேண்டும். தார்மிகனாக இருந்து ஸர்வேந்திரியங்களையும் ஜயித்துப் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம்செய்து பிரம்ம லோகத்தை அடைகிறான். மறுபடி திரும்புவதில்லை.

பூமியிலுள்ள கர்ம சரீரமுள்ளவரையில் அஞ்ஞானம், அஸத்தியம், ஜரை (கிழத்தனம்) முதலியவற்றை வென்று

மரணம் வரையில் அக்னிஹோத்ர கர்மானுஷ்டானம் செய்து அக்ஷரஸ்வரூபியாயும் ஞானஸ்வரூபியாயும், பிரம்மவித்ஸ்வரூபியாயும் நாதஸ்வரூபியாயும், நாதாந்த ஸ்வரூபியாயும், வியாபினீ சக்திஸ்வரூபியாயும், ஸமநாசக்தி ஸ்வரூபியாயும், உந்மநாசக்தி ஸ்வரூபியாயும், கதியாயும், குருவாயும், தேஜஸ்வரூபியாயும், ஈசானஸ்வரூபியாயும் உள்ள பரப்பிரம்மத்தை அடைவார்கள். கர்மத்தினாலும், ஞானத்தினாலும் இவ்வாறு வித்தையையும் அவித்தையையும், மாயையையும், மிருத்யுவையும் ஒழிக்க முயல்வார்கள். அவைகளும் அப்படியே சித்தித்துச் சாசுவத பிரம்மத்தை அடைவார்கள். இவை அறியாத மூடர்கள் அந்த தமஸ் என்னும் இருள் நரகில் ஆகல்பம் வீழ்ந்து வாடுவார்கள். தனமே மோகத்துக்குக் காரணம். சாந்தனாகி அந்தக்கரணங்களை அடக்கி இருளையொழித்து ஆத்மாவில் ஆத்மாவைக் கண்டு பாபமற்றவனாய் ரஜோகுணத்தையும் தமோ குணத்தையும் வெளியே தள்ளிவிட்டு பிரம்ம பூதனாகி பிரம்ம வாசக பிரம்ம வாச்ய, பிரம்மமேயாவான். பிரம்ம லோகமே சிறந்த செல்வம் நிறைந்த லோகம். ரதசக்கரம் போல விளங்கும் உலகிலுள்ள செல்வம் இரவையும் பகலையும் வீணில் கழிக்கச் செய்யும். வாயினாலும், மனத்தினாலும், உடலினாலும் மாதர் முதலிய சிற்றின்ப வழியில் நுழைந்து காமத்தினால் கடுகரகை அடைந்து மாறிமாறிப் பல ஜன்மங்களை அடையாமலிருக்கப் பஞ்சேந்திரியங்களின் ஜயமே முதற்காரணம். இமைப்பொழுது, நிமிஷம், கடிகை, முகூர்த்தம், பகல், இரவு, பக்ஷம், மாதம், அயனம், வருஷம், யுகம் முதலிய காலஸ்வரூபியாய் வாயுமண்டலம், சந்திர மண்டலம், தேஜோமண்டலம் முதலான மார்க்கத்தினால் நற்செய்கையைத் துணையாகக்கொண்டு செல்பவருக்கும் தமது பதத்தை யளிக்கவல்லவனுமாய், பராபரமாய் விசேஷ விசேஷியாய் பாவாபாவமாய்த் திரிமூர்த்தி ஸ்வரூபத்தையும் கடந்து பூர்ணபோகம் நிறைந்து வாழுபவனாய், யாகாதி காரியங்களினால் பூஜிக்கப்படுபவனாய், பிரகிருதி

களின் கர்மங்களுக்கு அனுகூலமான பயனைத் தருபவனும் விளங்கும் பரப்பிரம்ம ஸ்வரூபியை மகரிஷிகளே! நீங்கள் அறிந்துகொள்வீர்கள். இதுதான் ஸர்வவேத ஸாராம்சம். இதுவே பரதத்வ ரஹஸ்யம். இவ்வித வேத ரஹஸ்யார்த்தத்தை நற்பாத்திரத்தில் உபதேசம் செய்வீர்கள்" என்று இவ்வாறு உரைத்துவிட்டுத் தியாகேசர் மறைந்தார்.

தேவரிஷிகளாலும், மஹரிஷிகளாலும், யோகிகளாலும் காணுதற்கரிய பரப்பிரம்மத்தின் ஸ்வரூபத்தையும் வேதப் பொருளையும் தியாகராஜர் உரைத்ததைக் கேட்டு காசியபர் முதலிய ரிஷி சிரேஷ்டர்கள் பரமானந்த மடைந்து ஈசனைத் துதித்துத் தமது சிஷ்யர்களுக்கும் இவ்வித தத்துவத்தை அவ்வாறே உபதேசம் செய்துவந்தார்கள்.



## 23. பிரமேகாசுரனை அழித்த லீலை.

ஒருகாலத்தில் பிரமேகன் என்னும் அசுரனொருவன் தனது மாயாபலத்தினால் சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்களின் வேதயாகயஜ்ஞம் முதலிய காரியங்களை அழித்துவந்தான். அதனால் கினைத்த பலனை அடையாத தேவர்கள் தமக்கு அதிபதியாகிய இந்திரனிடம் போய் முறையிட்டனர். இந்திரன் முதலிய தேவர்கள் ப்ரமேகாசுரனுடைய மாயையை அழிக்க இயலாமல் யுத்தத்தில் பலமுறை தோல்வியடைந்து பிரமனைச் சரணடைந்தனர்.

கமலாஸனனாகிய பிரமன் அவர்களுடன் சேஷசாயியாகிய விஷ்ணுவினிடம் சென்று அசுரனுடைய தீச்செயல்களை அறிவித்தார்கள். அக்கொடிய அசுரன் சுவர்க்கலோகத்தை நாசம் செய்துவரும் முறையைக் கேட்ட திருமால் தேவர்களை ஆசிர்வதித்து "பிரமா, இந்திரன் முதலிய தேவர்களே! பாரத வர்ஷத்தில் விளங்கும் புண்ணியபுர க்ஷேத்திர நாதனாகிய தியாகராஜனை நீங்கள் வெகு விரைவில் சரணமடையுங்கள். அவ்வசுரனுடைய மாயையை அழிக்கவல்லவர் அவரே" என்று கூறி அவர்களை அனுப்பிவிட்டார். உடனே பிரமன் முதலிய தேவகணங்கள் அவ்வாறே திருவாரூர் நாயகமணியாகிய தியாகராஜனை அடைந்து பணிந்து வெகுநேரம் துதிசெய்தார்கள். "அளவற்ற மகிமையையுடையவராயும் வேதங்களாகிய வழிப் போக்கர்கள் தங்குமிடமாயும் விளங்கும் உமக்கு நமஸ்காரம். எங்களைக் காத்தருள வேண்டும். களங்கமற்ற முனிவர்களின் மனத்தில் விளங்கும் பரம்பொருளே! உமக்கு வந்தனம். எங்களைக் காப்பாற்ற வேண்டும். சில சமயங்களில் ஆதாரமற்றவராயும் சில சமயங்களில் ஆதாரத்துடன் கூடியவராயும், உபாதியற்றவராயும், ஞானவடிவாகவும் விளங்கும் உமக்கு

நமஸ்காரம். எங்களைக் காத்தருள வேண்டும்'' என்று பல வாறு துதிசெய்தனர். தஞ்சமென்றடைந்த தேவகணங்களைக் கண்ட தியாகராஜ மூர்த்தி அவர்களெதிரில் தோன்றி "உங்களுக்கு அபயமளித்தேன். அந்த ப்ரமேகாசுரனுடைய கெட்ட காரியங்களையெல்லாம் அறிவேன். சீக்கிரத்தில் அவனை அழித்துவிடுகிறேன்'' என்று சொல்லி அவர்களை அனுப்பி விட்டுத் தம் வாகனமாகிய ரிஷபத்தை அருகில் அழைத்து அதன் காதில் சில மாயா மந்திரங்களை ஓதி அவ்வசுரனை வதம் செய்யும்படி ஏவிவிட்டார்.

பரமேசுவரனுடைய கருணையினால் விருஷப ராஜர் அளவற்ற சீக்தியை படைந்து பக்ஷிராஜன் போல் வானத்திலே பறந்து செல்லலானார். காலன் போல் விளங்கும் விருஷபராஜர் ஆகாயத்தே ஒரு ஹுங்காரம் செய்தார். அதனாலேயே அசுரர்களின் காதுகள் பிளந்தனபோல் ஆயின. "மலைபோன்ற பெரிய சரீரத்துடன் அதிவேகமாகப் பறந்துவரும் இவ்வெண்மையான வஸ்து யார்? இவ்விதப் பெருந்தொனி யாருடையது? இத்தொனியை நாம் இதுவரையில் ஒருநாளும் கேட்டதில்லையே. இது இமய மலையா? மந்தர மலையா?'' என்று அசுரர்கள் யோசித்து நிற்கையில் சில அசுரர்கள்மீது வெகு வேகமாகப் பாய்ந்த ரிஷபராஜர் சிலரைக் கொம்பின் நுனியால் முட்டிக்கொன்றார். சிலரை வாலினால் சுழற்றிப் பூமியில் வீழ்த்தினார். சிலரைக் குளம்புகளினால் தேய்த்து மிதித்தார். அசுரக் கூட்டத்தின் நடுவில் இங்குமங்கும் வேகமாக ரிஷபராஜர் ஓடினதால் சிலர் கைகள் முறிந்தவராயினர். சிலர் கால்கள் முறிந்தவராயினர். சிலர் உயிரைத் துறந்தனர். சிலர் பயந்தோடினர். சிலர் யமனென்றே நினைத்தார்கள். சிலர் திரிபுரத்தை யழித்த சிவபிரானுடைய வாகனமென்றே கருதினார்கள். இவ்வாறு அசுரர் சேனைகள் பலவாறு முறிபட்டு ஓடுவதைக்கண்ட ப்ரமேகாசுரன் கடுஞ்சினங்கொண்டு சில மாயாவிகளை ஏவியதோடு தானும் ரிஷப ராஜரைப் பிடிப்ப

தற்காக அருகே வந்தான். அப்போது ரிஷப ராஜர் பிரமேகா ரன் மார்பிற் பாய்ந்தார். அசுரன் ரிஷப ராஜருடைய இரண்டு கொம்புகளைப் பிடித்து முறுக்கி ஒடித்துவிட்டான். அதனால் அடங்காச் சினங்கொண்ட நந்தீசன் அவ்வசுரனை முட்டி முட்டித் தள்ளிக்கொண்டுபோய் ஆழ்ந்த பள்ளமொன்றில் தள்ளிவிட்டு அவன்மீது தம் நான்கு கால்களையும் வைத்து ஏறி நின்றார். அப்போதும் அசுரன் பின்வாங்காமல் தனது பலத்தால் ரிஷபராஜரைப் பூமியில் தள்ளிவிட்டு எழுந்திருந்தான். இவ்வாறு அவர்கள் இருவரும் மூன்று முகூர்த்த காலம் வரையில் கொடிய யுத்தம் செய்கையில் நந்தீசர் தமக்குத் தியாகேசர் உபதேசித்தபடி தம் கூர்மையான கொம்பின் நுனியால் அசுரனுடைய தொடையைக் குத்தினார். அப்போது ரத்தம் பெருகும் தொடையுடனே அசுரன் சிறிது நேரம் யுத்தம் செய்தான். அசுரனுடைய உயிர் தங்கியிருக்கும் தொடையை நந்தீசர் குத்திவிடவே அவனது பிராண வாயுக்கள் வெளியே கிளம்பின. அவனும் சிறகுகள் இல்லாத மலைபோல் கீழே விழுந்தான். அக்கொடிய அசுரன் மாய்ந்தானென்பதை அறிந்த தேவர்கள் ரிஷப ராஜருக்குக் கங்கா ஜலத்தினால் அபிஷேகம் செய்து கற்பகமலர்களினால் மாலை சூட்டி வணங்கிப் போற்றி ஸ்வஸ்தி வசனம் படித்துக்கொண்டே வர, பிருஹஸ்பதி இந்திரன் முதலியோர் ரிஷப ராஜரை முன்னிட்டுக் கொண்டு திருவாரூரையடைந்து தியாகராஜாவைப் போற்றி அவரது பராக்கிரமத்தைப் பலவாறு புகழ்ந்து கூறி ரிஷபராஜருக்கும் மார்கழி மாதம் சுக்லபக்ஷ துவிதீயையில் சிறந்த தேரர் உத்ஸவம் செய்வித்தார்கள். அதுமுதல் மூன்று உலகங்களிலும் நற்காரியங்கள் நன்றாக நிறைவேறின.



## 24. பூபாரம் அழித்த லீலை.

படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் தேவ காரியங்களுக்குக் காரணமாய் விளங்கும் சதாசிவ பரஞ்சோதியானது தக்ஷிண தேசத்தில் காவிரியாற்றின் தென்கரையில் ஹம்ஸ தீர்த்தத்திற்கும் கமலாலயத்துக்கும் நடுவே புண்ணிய க்ஷேத்திரத்தில் விளங்குகிறது. அந்தப் பரஞ்சோதியைக் குறித்து நெடுநாள் யோகம் செய்து பரப்பிரம்மத்தை நேரிற் கண்ட பிறகு மறுபடியும் வடதிசையை நோக்கிச்சென்ற பார்க்கவ மகரிஷியானவர் தியாகராஜனுடைய மகிமையைப் புலஸ்திய மகரிஷியிடம் விசேஷமாக எடுத்துரைத்தார். அதனால் தாமும் அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்துக்கே சென்று யோகஞ் செய்ய வேண்டுமென்று புலஸ்தியர் விரும்பினர். அதனால் அவர் திருவாரூரை யடைந்து அங்கே யோகம் செய்தார். அநேக வருஷங்கள் நியமத்துடனிருந்து அந்த யோகத்தை முடித்துவிட்டுத் தியானம் செய்பலானர்.

பஞ்சேந்திரியங்களையும் வெளியே செல்லவொட்டாமல் தகைத்து ஏகாக்கிர சித்தத்துடன் புலஸ்தியர் தியானம் செய்கையில் அதைக்கண்டு மகிழ்ந்த தியாகராஜர் ஒருநாள் அஸ்தமன சமயத்தில் அவரெதிரே தோன்றி, "ஓ! புலஸ்திய மகரிஷியே! உமது தியான விசேஷத்தைக் கண்டு மகிழ்ந்து நேரில் வந்திருக்கிறோம். கண்களைத் திறந்து நமது வடிவத்தைப் பாரும். இதுவரையில் நீர் பலதடவை நம்மைக் குறித்து யோகம் செய்திருக்கிறீர். இமயம் முதலிய ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் திவ்விய தீர்த்தங்களிலும் பரிசுத்தமான தபோவனங்களிலும் யோகம் செய்தபோதும் தியானம் செய்கையிலும் உம் எதிரில் நாம் தோன்றியபோது நீர் உலக க்ஷேமத்தையே வரமாகக் கேட்டிருக்கிறீர். ஆத்ம

க்ஷேமத்தைக் கேளாமல் உம்மைப் போல் உலக நன்மையையே வரமாகக் கேட்பவர் மிகச்சிலரே. ஆத்ம ஞானியாகிய உமக்கு நமது திவ்யஸ்தானமே கிடைக்கும். இப்போது என்ன வரம் கேட்கப் போகிறீர்'' என்றார்.

தியாகேசர் இவ்வாறு கூறுகையில் புலஸ்தியர் கண்களைத் திறந்து கைகுவித்து, "பரம்பொருளே! எக்காலத்திலும் யாவருக்கும் உமது பக்தியும் நன்மையும் உண்டாகும்படி அருள்புரிய வேண்டும்'' என்று கேட்கவே பரமேசன் அப்படியே ஆகட்டுமென்று வரமளித்துப் புலஸ்தியருடைய வலக்காதில் ஒரு செய்தியை உரைத்துவிட்டு மறைந்துபோனார்.

புலஸ்தியரும் சிவபெருமான் தம் செவியில் உரைத்தபடி திருவாரூர் நகரத்தாருக்கு எந்த சமயத்தில் என்ன துன்பம் நேருமோ என்று வடதிசையை உற்றுநோக்கியிருந்தார். அப்பொழுது ஆகாய மார்க்கத்தில் ஒரு பேரொலி உண்டாயிற்று. சுற்கடல்களையும் ஒரே இரவில் ஒன்றாகச் சேர்த்து விடுவதற்காக ஏழு மேகங்களும் கர்ஜனை செய்ததுபோன்ற அவ்வொலியைக் கேட்டு ஜனங்களெல்லோரும் பயமடைந்தனர். தேவலோகத்திலும் அஸுரலோகத்திலும், யக்ஷலோகத்திலும், பாதாளலோகத்திலும், ஆகாயத்திலும், மலைகளிலும், காடுகளிலும் மறைந்து வசித்துவந்த எல்லா அசுரர்களும், எல்லா அரக்கர்களும் ஒன்றுசேர்ந்து பூமியில் இறங்கிவந்து எல்லா ஆயுதங்களினாலும் தியாகராஜனை எதிர்த்துத் திருவாரூர் நகரையும் பாழாக்கி அழித்துவிட எண்ணினர். அந்தக் கூட்டத்தைப் புலஸ்திய மகரிஷி கண்டார். மேகங்கள்போலும் மலைகள்போலும் பெரிய சரீரத்துடன் எல்லா அரக்கர்களும் எல்லா அசுரர்களும் நொடிப்பொழுதில் கூட்டங் கூட்டமாகப் பூமியில் இறங்கினார்கள். பலவிடங்களில் உள்ள அந்த மாயாவிகளெல்லோரும் ஒரே காலத்தில் பூமியில் இறங்கித் திருவாரூர் நகரைச் சுற்றிப் பத்துயோஜனை அகலம் வரையில் சூழ்ந்துகொண்ட

படியால் பூமிதேவி அவர்களுடைய பாரத்தைச் சுமக்கமாட்டாமல் நிலைகலங்கி அழுது தியாகேசனைத் துதித்தனள். அவர்களுடைய பாரத்தினால் தென்திசை பூமியே சாய்ந்து விட்டது. அது கண்ட ஜனங்கள் எல்லோரும் தமது தேசத்துக்கே பிரளய காலம் வந்துவிட்டதென்று எண்ணினார்கள்.

அப்போது அவ்வசுரக் கூட்டங்களின் தலைவனான பிரலேபனன் என்பவன் கமலாலயக் கரையில் நின்றிருந்த புலஸ்திய மகரிஷியைக் கண்டு, "தந்தையே! நீர் ஏன் இங்கு வந்து சேர்ந்தீர்! நாங்கள் இந்த க்ஷேத்திரத்தை அழிக்கப்போகிறோமே! அதற்குள் நீர் எங்கேயாவது செல்லும்" என்று உரைத்தான். அதுகேட்ட புலஸ்திய மகரிஷி "மைந்த! ப்ரலேபன! இங்கே புண்ணிய தீர்த்தத்தில் நான் ஸ்நானம் செய்ய வந்தேன். இப்போது என் கண்கள் மலினமடைந்துவிட்டன. நான் எங்கே செல்வேன்? நீயே வழிகாட்டி என்னை ஓரிடத்தில் கொண்டு விட்டுவிடு. பிறகு நீங்கள் இந்நகரையும் இவ் விசனையும் எப்படிச் செய்தாலும் எனக்குச் சந்தோஷமே" என்று உரைத்தார். ப்ரலேபனன் அப்படியே செய்வதாகச் சொல்லி அவரை அழைத்துக்கொண்டு தென்திசை சென்று தென் சமுத்திரக் கரையில் ஓர் இடத்தே வீற்றிருக்கச்செய்து திரும்பினான். அப்போது புலஸ்தியர் அவனைப் பார்த்து, "மைந்த! இதோ பார். இந்தக் கடலின் நடுவே ஜலத்தில் ஒரு புருஷன் தோன்றுகிறானே! அவனை நீ முதலில் ஸம்ஹாரம் செய்துவிட்டால் உடனே மிகவும் சுலபமாகத் திருவாரூர் நகரை அழித்துவிடலாம். இந்தப் புருஷனாலேயே அந்நகரம் ரக்ஷிக்கப்பட்டு வருகிறது" என்று தியாகேசர் தம் செவியில் உபதேசித்ததுபோலவே அவ்வசுரனுக்குக் காண்பித்தார். ஞானதிருஷ்டியினால் கண்டுரைத்த புலஸ்தியருடைய பேச்சை நிஜமென்று அசுரன் நம்பி உடனே கடலின் நடு ஜலத்தில் விளங்கும் அப்புருஷனை ஜலத்திலேயே அமிழ்த்தி ஹதம் செய்துவிடலாமென்று வேகமாக ஓடினான்.

சகல அசுரர்களையும் வதம் செய்வதற்காக அப்போது தியாகேசர் கடல் நீரின் நடுவே ஒரு மஹாபூத சரீரத்துடன் நின்றிருந்தார். பூதத்தின் அருகே ப்ரலேபனன் செல்லவே அப்பூதம் அவ்வசுரனைக் கைகளால் பிடித்துக் கட்டித் தலை கிழாகத் தூக்கி ஜலச்சுழியில் அழித்துவிட்டது. பரமேசனே இவ்விதம் பூதரூபியாயிருந்து ஜலச்சுழியில் தள்ளும்போது அவருடன் எதிர்த்துச் சண்டைசெய்யச் சக்தியற்ற பிரலேபனன் கடலிலேயே மாண்டான். புலஸ்தியரை அழைத்துச்சென்ற தம் தலைவன் திரும்பி வரவில்லையே யென்று அவனைத் தேடிக் கொண்டே ஐந்து அசுரர்கள் தென்திசை நோக்கிச் சென்று கடலில் அந்தப் பூதத்தினுல் அமிழ்த்தப்பட்டு மாண்டார்கள். அவர்களைத் தேடிவந்த பதினேழு அசுரர்களும் முன்னூறு அரக்கர்களும் அவ்வண்ணமே கடலில் மடிந்தார்கள். ஆயுதங்களைப் பிரயோகிக்காமலும் எதிர்த்து நின்று போர்புரியாமலும் இம்மாதிரியாக அசுரக் கூட்டமும் அரக்கக் கூட்டமும் தென்கடல் ஜலச்சூழ்ச்சிக்கு உணவாகி மாண்டனர். மற்ற அசுரர்கள் பயந்து வியப்புற்று மனம் நொந்து அழுதுகொண்டே ஓடிப்போயினர். பரமேசனுகிய பூதத்தால் இவ்வாறு அவ்வசுர அரக்கக் கூட்டம் மாய்க்கப்படவே தென்திசையின் பூபாரம் நீங்கி முன்போல் பூமி நிமிர்ந்தது. ஈசன் செய்த இவ்வற்புதச் செயலைப் புலஸ்திய முனிவர் சொல்லக்கேட்டு ஜனங்கள் சந்தன ரசத்தாலும், தேனுலும், பாலாலும், தயிராலும், காவிரி நீராலும் தியாகராஜனுக்குத் திவ்யாபிஷேகம் செய்வித்துத் துதிசெய்து மகிழ்ந்தார்கள்.



## 25. மத்தப்பிரமத்தாசுரர்களை அழித்த லீலை.

துவாபரயுகத்தின் திரிதீயாம்சத்தில் புரோவஸு என்னும் மகரிஷியொருவர் கங்கையின் உற்பத்திஸ்தானம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களில் வெகுநாள் தவஞ்செய்து பரமேசனை நேரில் தரிசித்துத் திவ்விய ஞானத்தை அடைந்தார். பரமானந்தத்துடன் மங்கைபாகனைத் துதித்துக் கர்மசேஷம் முடியும் வரையில் தமது சரீரத்தை வைத்திருக்க வேண்டுமென்று பரமேசனால் ஏவப்பட்டார். பிறகு தமது ஆச்சிரமத்தையடைந்தார்.

அக்கினிஹோத்திரம் முதலிய நற்காரியங்களைத் தம் தர்மபத்நியின் உதவியால் செவ்வையாக நடத்திவந்தார். அவருடைய பத்தினியாகிய தேஜோவதி ஒருநாள் ஆச்சிரமத்துக்கு அதிதியாக வந்த குலகுருவை வலம் வந்து நமஸ்கரித்து மிக்க சிரத்தையுடன் பூஜித்தாள். அதனால் மகிழ்ச்சியுற்ற குலகுரு அவளை ஆசீர்வதிப்பதற்காக அருகே வரச்சொல்லும்படி மகரிஷியை ஏவினார். அங்ஙனமே மகரிஷி பலதடவை பத்தினியைக் கூப்பிட்டும் அவள் உடனே வராமல் ஏதோ காரியவசத்தால் கொஞ்சநேரம் சென்றபின் குலகுருவின் எதிரே வந்து வணங்கி நின்றாள். அவளிடம் பெருங்கருணைகொண்ட குலகுரு அவளுக்கு நற்புத்திரன் உண்டாக வேண்டுமென்று நினைத்து நல்ல சமயத்தை எதிர்பார்த்திருந்தார். நல்வேளை சென்றபிறகு வந்த ரிஷி பத்தினியை நோக்கி, "நற்புத்திரனை அடைவாய்" என்று ஆசீர்வதித்தார். "சுபசமயம் தாண்டி விட்டதே. இவள் மீது ஆசீர்வாதம் அசுரவேளையிற் பாய்ந்ததே. இதனால் இவளுக்கு என்ன துன்பமும் அபகீர்த்தியும் உண்டாகுமோ தெரியவில்லையே!" என்ற துக்கத்தோடு முகம் வாடியவராகி அவர் ஒன்றும் சொல்லாமல் அவர்களிடம் "போய்

வருகிறேன்'' என்று மட்டும் சொல்லி அழுத கண்ணீருடன் குலகுரு மற்றோரிடம் சென்றனர்.

அவர் சென்றபிறகு புரோவசு மஹரிஷியும் தேஜோவதியும் தம் குலகுரு என்ன காரணத்தினால் இவ்வாறு கண்ணீர் விட்டு அழுதுகொண்டு சென்றாரோ தெரியவில்லையே யென்று வியப்பும் துக்கமும் அடைந்து தம்மையே நிந்தித்துக்கொண்டனர். பிறகு "இதன் பலனாக எது நேரிடினும் நாம் அநுபவித்தே தீரவேண்டும்'' எனறு ஆறுதலுற்று முன்போல் இல்லற தர்மத்தை நடத்தி வந்தார்கள். சிலநாள் சென்றபிறகு தேஜோவதி கர்ப்பவதியானாள். குலகுருவின் ஆசீர்வாதத்தினால் தமக்கு இவ்வித பாக்கியம் உண்டாயிற்றென்று ரிஷி தம்பதிகள் மிக்க மகிழ்ச்சியுடன் இருந்தனர்.

எந்த அசுரவேளையில் குலகுருவின் ஆசீர்வாதத்தைத் தேஜோவதி பெற்றாளோ அப்போதே அந்த அசுரவேளையின் மகிமையினால் அவளது வயிற்றில் இரண்டு அரைப் புத்திரர்களாக அசுராம்சத்துடன் இரண்டு குழந்தைகள் ஜனித்தன. ஒரு குழந்தைக்குப் பாதி சரீரமும் மற்றொரு குழந்தைக்குப் பாதி சரீரமும் இவ்வாறு அரைப் பிள்ளையாக உதித்த குழந்தைகளின் அசுராம்சத்தை ஞானதிருஷ்டியால் அறிந்த புரோவசு மகரிஷி அப்போதே குழந்தையைக் காட்டில் விடும்படி செய்துவிட்டார். "அசுராம்சமாக ஜனித்த புத்திரன் நமது புத்திரனல்லன். அவனை ஒழித்துவிடுவதே நலம்'' என்று நினைத்து அந்த ரிஷி தம்பதிகள் மனக்குறையை அடையாமல் சந்தோஷத்துடனே தர்மவழியில் நிலைபெற்று வந்தார்கள்.

நடுக்காட்டில் விடப்பட்ட குறைப் பிள்ளைகள் இருவரையும் அசுராம்சம் என்று அழுகுரலினால் அறிந்துகொண்ட ஜனங்கள் உபேக்ஷைசெய்து விட்டார்கள். கிராம தேவதைகளும் வனதேவதைகளும் குழந்தைகளைக் காப்பாற்றவில்லை.

பதினைந்து நாள்வரையில் காட்டில் தனியே விடப்பட்ட இரண்டு குழந்தைகளும் எவ்வித ஆகாரமும் இல்லாமல் அழுதுகொண்டே யிருந்தன. கிரிபேதனன் என்னும் அசுர ராஜன் ஒருவன் அக்குழந்தைகளிடம் இரக்கமுற்று அவற்றை எடுத்துச்சென்று ஒரு குகையில் வைத்து நன்றாக வளர்க்க ஆரம்பித்தான். குழந்தைகள் இரண்டும் ஆறு மாதத்தில் நல்ல வளர்ச்சியுற்று மலையின் அருகே வந்து மேயும் மான் களையும், கரடிகளையும், புலிகளையும், யானைகளையும், சிங்கங் களையும் கைகளால் பிடித்து நிறுத்தி அவைகளுடன் விளையாடி வந்தன. சில வருஷங்களில் மிக்க பலத்தையடைந்த அவ் விரண்டு அசுரகுமாரர்களும் தங்கள் ஜாதிக்குரிய மாயையை யும் கற்றுக்கொண்டு அங்கங்கே அசுரர்களுடன் சேர்ந்து வேதியர்களுக்கும் ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் உபத்திரவமே செய்துவர ஆரம்பித்தார்கள்.

ஒரே காலத்தில் தேஜோவதியின் கர்ப்பத்திலிருந்து இரட்டைப்பிள்ளைகளாக உதித்த இரண்டு அசுர குமாரர்களும் தயையில்லாமல் பலத்தினால் கர்வமுற்று உலகத்தைப்பிடித்துக் கொண்டு திரிந்தனர். அவர்களுக்கு மத்தன் என்றும் ப்ர மத்தன் என்றும் அசுரர்கள் பெயரிட்டார்கள். அவர்கள் இருவரும் முனிவர்களின் பர்ணசாலையில் திருட்டுத்தனமாக நுழைந்து அங்கே உள்ள யாகாக்கினியைக் கெடுத்து அவர் களின் கன்னியர்களை அழைத்து வரலானார்கள். இவ்வாறு அவர்கள் செய்யும் தீச்செயலைக்கண்ட முனிவர்களெல்லோரும் தமது யாகத்தின் பயனை அழித்தாவது அவ்விருவருக்கும் சாபம் அளிக்க யோசித்தார்கள்.

அப்போது புரோவசுமஹரிஷியின் குருவாகிய ரிஷி சிரேஷ்டர் தமது ஆசீர்வாதமானது அகாலத்தில் தேஜோ வதியின் மேல் படிந்ததால் இவ்வித கொடிய புத்திரர்கள் இருவர் பிறந்து மஹரிஷிகளின் ஆச்சிரம மண்டலங்களை

அழித்து வருகின்றார்களென்று அறிந்து அவ்விருவரையும் தாமே யழிப்பது நலமென்று கருதினர். திருவாரூர் க்ஷேத்திரத்தில் ஹம்ஸதீர்த்தக்கரையில் அவர் சிலநாள் தவம் செய்து தியாகராஜனை நேரில் கண்டு அந்த இரட்டைப்பிள்ளைகளின் வதோபாயத்தை வரமாக யாசித்தார். தியாகேசன் அவர் காதில் அப்போது ஓர் உபாயத்தையும் மந்திரத்தையும் ஓதினர். வதமந்திரத்தையும் உபாயத்தையும் அறிந்துகொண்ட அம்முனிவர் மத்தப்ரமத்தர்கள் இருக்கும் இடத்தை நாடி அவர்களுக்கு எதிரே நின்று ஒரு மந்திரத்தை உச்சரித்தார். அதனால் இரண்டு அசுரர்களுக்கும் பெருந்தூக்கம் உண்டாயிற்று. உடனே கீழே விழுந்தார்கள். பிறகு முனிவர் தமக்குத் தியாகேசர் உபதேசித்ததுபோல் ஒரு தர்ப்பையை அவர்கள் சரீரத்தின்மேல் எறிந்தார். மந்திரித்து விடப்பட்ட குசம் அவர்களின் சரீரத்தை இரண்டு பிளவாகப்பிளந்து விட்டது. அவ்விருவரும் தூக்கம் தெளியாமல் யமநகரத்தை அடைந்தார்கள். முனிவர் இவ்வாறு தியாகேசன் உபதேசத்தினால் அவர்களை மாய்த்துவிட்டுப் புரோவசுரிஷிக்கு ஒரு நல்ல புத்திரன் உண்டாகும்படி ஆசீர்வாதம் செய்துவிட்டு யோகம் செய்யக் கருதி இமயமலையை அடைந்தார். தியாகமூர்த்தியின் அருளால் அசுரபயமற்ற முனிவர்கள் சுகமாக வாழ்ந்தார்கள்.



## 26. சனியின் கர்வத்தை அழித்த லீலை.

பிருஹஸ்பதி முதலிய தேவர்களாலும் அஷ்டதிக் பாலகர்களாலும் அவர்களுடைய பரிஜனங்களாலும் நிறைவுற்று விளங்கும் சுதர்மை என்னும் தேவசபையில் கற்பக விருக்ஷத்தின் நிழலில் இந்திராணியுடன் இந்திரன் சிம்மாசனத்தில் வீற்று விளங்குகையில் சில தேவர்கள் அஞ்சலிசெய்து இந்திரனைத் துதித்து விட்டு எல்லா அண்டங்களுக்கும் ஆதாரமாகிய பிரம்மாண்டத்துக்குள் உண்டாக்கப்பெற்ற பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், தேவரிஷிகள், தேவர்கள், அசுரர்கள், யக்ஷர், கந்தர்வர், கின்னரர், கிம்புருஷர், நாகர், மனுஷ்யர், சிங்கம், புலி, கரடி, யானை, குரங்கு, மான், குயில், மயில், ஈ, பூச்சி, புழு முதலிய பல்கோடி ஜீவராசிகளையும் படைத்திருக்கும் சதுர்முகனுடைய அளவற்ற சக்தியைப் பலவாறு புகழ்ந்து கொண்டாடினர். மற்றும் சில தேவர்கள் எல்லாத் தொண்டர்களுடைய இடரை நீக்கும் கருணையுடையவராகவும், ஸம்ஹாரகர்த்தாவாகவும், பரசிவஸ்வரூபத்தில் திரிமூர்த்திகளுக்கும் மேலான பதவியில் விளங்கும் கைலாசநாதரையே மிகவும் பாராட்டினார்கள். மற்றும் சில தேவர்கள் "மேகத்தை வாகனமாக அடைந்து அவற்றைத் தக்க சமயங்களில் ஏவி மழையைப் பொழிவிக்கும் இந்திரனாலேயே ஜீவராசிகள் ஜீவனைப் பெற்று மகிழ்கிறார்கள். மழைபெய்வதால் சிறப்பையடைந்த பூமியிலுள்ள சற்பிராமணர்களின் ஸ்வாஹாகாரங்கள் முதலியவைகளினாலேயே இந்தத் தேவலோகத்திலுள்ள இமையவரும் அளவற்ற திருப்தியடைகிறார்கள். ஆதலால் இந்திரனே உலகத்துக்குப் பேருபகாரி" என்று இந்திரனைப் பலவாறு புகழ்ந்தார்கள்.

மற்றும் சிலர் அக்கினியையும், சிலர் யமனையும், சிலர் நிருருதியையும், சிலர் வருணனையும், சிலர் வாயுவையும், சிலர்

குபேரனையும், சிலர் ஈசானனையும், சிலர் நவக்கிரகங்களையும் சிறப்பாய்ப் புகழ்ந்து அவரவர்களின் குணங்களைத் தேவசபையில் மேன்மையாக எடுத்துரைத்தார்கள். அச்சமயம் நாரதர் தேவசபைக்கு வந்துசேர்ந்தார். சகல தேவர்களும் அந்த ரிஷியைக் கொண்டாடி அதுவரையில் தாங்கள் கூறிய விஷயத்தை அவரிடம் அறிவித்தார்கள். எல்லாவற்றையும் கேட்ட நாரதர் முடிவில் சிறிது புன்சிரிப்புடன் தலையை அசைத்து "ஓ! தேவசிரேஷ்டர்களே! நீங்கள் உரைத்தது எல்லாம் இச்சமயம் உண்மையே. அதில் சந்தேகமில்லை. பரம்பொருளாகிய பரமசிவனுடைய தத்துவத்தின் மேன்மையை வெளிப்படுத்தும்போது சதுர்முகன், திருமால், இந்திரன், அஷ்டதிக்பாலகர்கள், நவக்கிரகங்கள், எல்லா அசுரர்கள், எல்லாத் தேவர்கள், எல்லா வீரர்கள் யாவரும் ஒன்றுசேர்ந்தாலும் பரமசிவனுடைய சக்தியாகிய கடலின் அலையில் ஒரு ஜலத்திவலைக்கு நிகராகமாட்டார்கள் என்னும் விஷயத்தை முன் யுகங்களில் அநேகர் அறிந்திருக்கிறார்கள். திக்பாலகர்களுக்கும், நவக்கிரகங்களுக்கும், இந்திரன் முதலிய தேவர்களுக்கும் ஈசனால் சக்தி அளிக்கப்பட்டதே தவிர வேறில்லை.

சிவபெருமானுடைய கருணை இல்லாவிடில் திக்பாலகர்களின் பலமும், நவக்கிரகங்களின் பலமும், தவத்தின் மேன்மையும், தானத்தின் சிறப்பும், அரசின் பெருமையும், கல்வியின் திறமும், சேனையின் பெருக்கமும் பயன்பெறமாட்டா. சிவபிரானுடைய கருணைமட்டும் யாரிடம் விளங்குகிறதோ அவர் எவ்விதமான துன்பத்தினின்றும் நீங்கிச் சிறப்புடன் வாழ்வார். அவருக்கு வானவரும் நிகராகார்" என்று பலவாறு சிவபிரானைப் புகழ்ந்து இந்திரனிடம் விடைபெற்று மிகவேகமாகப் பாதாள உலகம் சென்றார்.

நாரதரின் பேச்சைக் கேட்ட தேவர்கள் சிலருக்குச் சிறிது சந்தேகம் உண்டாயிற்று; நவக்கிரக வீக்ஷணத்துக்கு

மேன்மை அதிகமா? ஈசுவரனுடைய கடாக்ஷத்துக்கு மேன்மை அதிகமா? இவ்விஷயத்தைப் பரீக்ஷைசெய்ய வேண்டுமென்று எண்ணி நவக்கிரகங்களில் ஒருவனாகிய சனிதேவனை அச்சபைக்குத் தேவர்கள் வருவித்தார்கள். சனி இந்திரன் முன் தோன்றினன். பிருஹஸ்பதி முதலிய தேவர்களும் இந்திரனும் தமது கருத்தை அவனிடம் வெளியிடவே அவன் தேவர்களின் கட்டளையினல் சோதிடத்தில் கொடுமையென்று கூறப்பட்ட கெட்ட ஸ்தானத்தில் ஏறி பூவுலகத்தில் திருவாரூரில் வசிக்கும் ஓர் ஏழைப் பிராமணனைத் தனது வீக்ஷணத்துக்கு இலக்காகச் செய்தான். கொடிய வீட்டை யடைந்த சனி தேவர்களின் கட்டளையினல் தனக்குத் துணையாயுள்ள மற்றக் கிரகங்களின் கெட்ட நோக்கையும்பெற்று மிக்க கோபத்துடன் சதுர்வேதி என்னும் வேதியனை நோக்கப் பூமியில் அவ்வேதியனுக்குத் திடீரென்று ஆயாசமுண்டாயிற்று. அவனது பாரியையாகிய தர்மவதி என்பவளுக்கும் திடீரென்று ஜ்வரம் கண்டது. அவள்வீட்டில் ஆகாரம் செய்விக்க ஒருவிதமான பொருளும் இல்லை. அவன் பையனும் பசியால் வருந்தி அலறினன். இந்தக் கஷ்டங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு அவ்வேதியன் தியாகராஜாவின் குணங்களின் சிறப்பையும் நாமங்களையும் கீர்த்தனஞ்செய்து கொண்டே வீதியில் அழுதபடி யாசகத்துக்குப் புறப்பட்டான். தினந்தோறும் அவனுக்குப் பிச்சைத் தண்டுலமளிக்கும் மற்றொரு பிராமணரின் மகள் அன்றைய தினத்திலும் வழக்கம்போல் சதுர்வேதி வேதியருக்குத் தண்டுலமளித்துவிட்டு வீட்டுக்குத் திரும்புகையில் அவள் கையிலிருந்த பொன் வளையல் திடீரென்று காணப்படவில்லை.

சற்று நேரத்தில் அதைத் தேடிவந்த சிலர் சதுர்வேதி வேதியரின் துணி முடிப்பில் அப் பொன்வளையல் முடிந்திருப்பதைக் கண்டு பலவாறு இகழ்ந்துபேசி அவரைச் சோரவேதியனென்றழைத்து அரசசபைக்குக் கட்டிவந்தார்கள். வேதி

யர் திடுக்கிட்டுத் திகிலடைந்தார். குற்றமற்ற தமது காரியத்துக்கு விரோதமாக நடந்துவரும் கஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டு பஞ்சாக்ஷரத்தை மனனம் பண்ணினர். அரசசபையில் தர்மதேவதைபோல் விளங்கும் மார்த்தாண்ட மஹாராஜன் அவ்வேதியருடைய முகத்தை உற்றுநோக்கி ஆலோசித்து அவர் திருடியிருக்க மாட்டாரென்று கூறி அவரை மன்னித்து வீட்டுக்கு அனுப்பிவிட்டான். தியாகராஜாவின் அருளால் யாதொரு தண்டனையும் அடையாமல் வீட்டுக்குத் திரும்பிய வேதியனிடம் சனி தன் கொடிய பார்வையைச் செலுத்தினன். வேதியன் வீட்டுக்கு வந்தபோது ஓர் அதிதிப் பிராமணர் அவ்வெதிரில் தோன்றினர். அவரை மிக்க சந்தோஷத்துடன் சதுர்வேதிவேதியர் வரவேற்றுத் தம் வீட்டில் உணவளித்தார். அவ்வேதியர் போஜனம்செய்து விடைபெற்று வீதியில் வரும்போது வாந்திசெய்தார். அப்போது அவர் வாயிலிருந்து மாமிசத்துண்டுகள் விழுந்தன. அதுகண்ட ஜனங்களெல்லாரும் "சதுர்வேதி வேதியன் இப்படிப்பட்ட உணவை அதிதிக்கு அளித்தானே" என்று அவரை இகழ்ந்தார்கள். தியாகராஜன் கருணையால் அப்போது ஓர் அசரீரி உண்டாகி "அதிதி வேதியர் வாந்திசெய்ததில் தோன்றிய மாம்சம் மாயை. சதுர்வேதி அந்தணர் தோஷமற்றவர்" என்று கூறக்கேட்டு ஜனங்கள் அவரைப் புகழ்ந்தார்கள்.

மறுபடி அவ்வேதியர்மீது சனி தன் கொடிய பார்வையைச் செலுத்தியதால் சில நாள் சென்றபிறகு சதுர்வேதியந்தணர் வீதியில் பிக்ஷாடனத்துக்குச் செல்லுகையில் ஒரு பசுங்கன்று துள்ளித்துள்ளி விளையாடிவந்து அவர் பாதத்தருகில் விழுந்து மாண்டது. அதுகண்ட ஜனங்கள் யாவரும் அவரை "கோவதம் செய்தவர்" என்றே எண்ணி அவரைக்காணும் பொழுதெல்லாம் கண்களை மூடிக்கொண்டு சிவநாம கீர்த்தனம் செய்யலானர்கள்.

இவ்வித அபவாதத்தையும் சதுர்வேதிவேதியர்பொறுத்

துக்கொண்டு தியாகேசரிடம் பக்தியையே ஊன்று கோலாகக் கொண்டு வீடுதிரும்பினர். வீட்டில் அவரது மனைவி பேச்சு மூச்சில்லாமல் செத்த பிணம்போல் விளங்கினள். அதுகண்டு துயரமுற்ற வேதியர் அவளைத் தகனம் செய்பச்சுடலைக்குக் கொண்டுபோகையில் அவர்கண்ணில் நீர்ததும்ப மனத்தில் தியாகேசனையே மனனம் செய்தார். தமக்கு நேரிட்ட இத்தனை துன்பங்களுக்கும் காரணம் தமது தலைவிதியே என்று எண்ணினர். ஒருவரையும் நிந்திக்கவில்லை. பலவாறு கஷ்டத்தை யனுபவித்துக்கொண்டு அவர் தம் பார்யையை தகனம் செய்ய முயலுகையில் தியாகராஜனுடைய வீக்ஷணத்தினுல் சனியின் தேகத்தில் கொடிய வெப்பம் உண்டாயிற்று. "தேவர்களின் ஏவுதலால் குற்றமற்ற இவ்வேதியனுக்கு இவ்வித பழியையும் ஹானியையும் துயரத்தையும் உண்டுபண்ணி விட்டேன். இந்த அபசாரத்தினுலேதான் என் சரீரம் இப்போது இவ்வாறு வேகின்றது" என்று அலறிக்கொண்டே ஒரு மானிட சரீரத்துடன் சனிதேவன் திருவாரூர் வந்து தியாகேசனை நேரிற்பணிந்து போற்றித்தன் கர்வத்தை விட்டான். அப்போது ஈசனுடைய கருணையினுல் சனியின் வெப்பமும் அடங்கியது. வேதியரின் மனைவி உயிர்பெற்றெழுந்தாள். தேவர்கள் புஷ்ப மாரி பொழிந்து "சனியின் பார்வையால் வேதியனுக்கு முடிவில் எவ்விதத் தீங்கும் நேராவண்ணம் காப்பாற்றியது பரமசிவனது கருணையொன்றே" என்ற விஷயத்தையும் எடுத்துக்கூறினர். ஜனங்கள் யாவரும் இவ்விஷயத்தைக்கேட்டு வியப்படைந்து சனியின் கொடுஞ்செயலைப்பற்றியும் ஈசனுடைய கருணையைப் பற்றியும் நினைந்து வேதியரை வணங்கி அவரது அருளைப் பெற்று விளங்கினர்கள்.



## 27. யாகசாலையில் நுழைந்த நாயை மேன்மைப்படுத்திய லீலை.

தியாகராஜர் சனியின் கர்வத்தை அழித்துவிடவே ஜனங்களெல்லாரும் வியப்படைந்து ப்ருகுரிஷியின் மூலம் மற்றொரு சமயம் பரமேசுவரனுடைய கருணையின் சிறப்பை அறிந்து அதுமுதல் தியாகராஜனுக்கு, 'சனியின் கர்வத்தை யழித்தவர்' என்று பெயரிட்டு அவருடைய நாமங்களைக் கீர்த்தனமாக எங்கும் பரப்பி வந்தார்கள். பிருகுமகரிஷியின் கனவில் ஒருநாள் பரமேசுவரன் தோன்றி, "இங்கே நமது ஸந்நிதானத்தில் 'அப்தோர்யாமம் என்னும்யாகத்தைச்செய்வீர்' என்று பணித்தார். அதனால் மனக்களிப்புற்ற மகரிஷி யானவர், அத்ரி, ப்ருகுகுத்ஸர், வசிஷ்டர், தௌமியர், பாரத்வாஜர், வியாசர், சுகர், பராசரர் முதலிய அருந்தவ முனிவர்களை வருவித்து முறைப்படி அவர்களுக்கு ஆசனமளித்து வணங்கி தம் கனவில் பரம்பொருள் தோன்றி உத்தரவிட்ட செய்தியை அறிவித்து அவர்களின் அனுமதிபெற்று அவர்களுள் ஒருவரை உத்காதாவாகவும், மற்றொருவரை அத்வர்யுவாகவும் ஏற்படுத்தி வரித்துத் திருவாரூரில் விளங்கும் கமலாலயக்கரையில் அப்தோர்யாம மகாயாகத்தை மிக்க சிறப்புடன் செய்ய ஆரம்பித்தார்.

யாக கல்பத்தில் உள்ளபடி எல்லா மந்திரங்களையும் தந்திரங்களையும் குறைவின்றி மகரிஷிகள் நடத்த ஆரம்பித்தார்கள். சில ரிஷிகள் பூர்வசாலையில் பிரவேசித்துக் குண்டவிதானங்களைச்செய்து அதில் வைதாக்கினி தேவனை வளர்த்து நெய் முதலிய சருத்திரவியங்களால் அக்கினியை வளர்த்து "நான்கு சிகரங்களை உடையவனாகவும் மூன்று கால்களையுடையவனாகவும் ஏழு கைகளையுடையவனாகவும் ஸ்வாஹாதேவியுடன்

மந்திரஸ்வரூபியாக விளங்குபவனாகவும் ஸகல தேவர்களுக்கும் ஹவிஸ்ஸை அளிப்பவனாகவும் தேவர்களின் முதல்வனாகவும் ஸகல ஜீவராசிகளின் சிதா காடியாகவும் மூன்றுவது சுடராக வும் வைச்வாநரஸ்வரூபியாகவும் உள்ள அக்கினி தேவனே! நீயே எங்கள் விருப்பத்தைப்பூர்த்தி செய்விப்பாயாக'' என்று துதி செய்தார்கள். மற்றும் சில ரிஷிகள் யாகசாலையின் கிழக்கு மத்தியிலுள்ள மேடையில் மரீசிமகரிஷியை வீற்றிருக் கச்செய்து அவர்மீது பிரம்மதேவனை ஆவாஹனம் செய்தார் கள். மற்றும் சிலர் தென்பாகத்திலும் வடபாகத்திலும் மகா விஷ்ணுவையும் ருத்திரனையும் ஆவாஹனம் செய்து பூஜித்தார் கள். மேற்குப்பாகத்தில் வருணனை ஆவாஹனம் செய்து ததீசி, புலஸ்தியர் முதலிய ரிஷிகளையும் வீற்றிருக்கச்செய்தனர். பிறகு பிருகு மகரிஷியானவர் அம்மகரிஷி மண்டலத்தை நமஸ்கரித்து அவர்களின் சம்மதத்தைப்பெற்று அந்த அப்தோர்யாமயாகத் தில் தீக்ஷிதராக வீற்றிருந்தார். மற்றும் சில ரிஷிகளும் சுரோத்திரியர்களும், பிரம்மநிஷ்டர்களும் வேதியரும் கனை கடல்போல் யாகசாலையின் வடக்கில் வேதங்களைப்படனம் செய்தனர். அந்த யாகத்தின் சிறப்பைக்கண்டு மேன்மை அடையக்கருதிவந்த மானவர் பலரும் நிறைந்திருக்கும் யாக சாலையின் நான்கு வாசற்படிகளிலும் நூற்றுக்கணக்கான வேதி யர்கள் காவல்புரிவதுபோற் கூடியிருந்தனர்.

வேதபாடம், மந்திர உச்சாரணம், உத்காத்ருகானம் முதலியவற்றின் ஸ்வர இனிமையைக் கேட்டுப் பக்தர்கள் யாவரும் களித்திருந்தனர். ஆகாயமார்க்கமாக அப்போது செல்லும் திரிசிரஸ் என்னும் ஓர் அசுரன் கமலாலயத்தின் கரையில் இவ்வாறு சிறப்புடன் நடக்கும் யாகத்தைக்கண்டு பொறுமையுற்று அதை எவ்வாறேனும் கெடுக்க எண்ணினன். தன் மாயையினால் ஒரு காய் உருவம் எடுத்துக்கொண்டு க்ஷண காலம் வரையில் ஒவ்வொருவருடைய கண்களையும் மறைத்து

ஒருவருக்கும் தெரியாமல் யாகசாலையின் நடுவே சென்றான். ஐந்தாறு க்ஷணகாலம் வரையில் ஒன்றும் தோன்றாமல் மயங்கியவர்கள்போல் இருந்த எல்லாரிஷிகளும், எல்லா அந்தணர்களும் உட்கார்ந்திருக்கையில் யாகசாலையின் நடுவே திடீரென்று தோன்றிய ஒரு நாயைக் கண்டார்கள். உடனே அவர்கள் ஹா ஹா என்று கூக்குரலிட்டு "இந்த யாகத்தை அழிக்கவந்த மாயாவிகளோ, அசுரரோ, இராக்கதரோ இந்நாயை இங்கு ஏவிவிட்டார்களே. இந்நாயின் பார்வை விழுந்தமாத்திரத்தில் ஹோமத்திரவியங்கள் எல்லாம் அசுத்தத்தை அடைந்துவிடுமே. யாகமும் அசுத்தியுற்று அழியுமே! என்செய்வோம்! ஈசா, தியாகேசா" என்று அலறினார்கள். அத்தருணத்தில் தயாநிதியாகிய பார்வதிநாதர் அரைவிநாடிக்குள் அந்நாயை ஒரு சிறிய மான்குட்டியாகச் செய்துவிட்டார். அப்போதே ஓர் அசரீரி வாக்கும் உண்டாயிற்று. "கேளீர் மகரிஷிகளே, முன்பு துவாபரயுகத்தில் இந்த ப்ருகுமகரிஷியின் புத்திரருள் ஒருவனாகிய நதிபானு என்பவன் இளமையில் அறியாத்தனத்தால் காட்டில் ஒரு சிறுவனுடன் விளையாடிக்கொண்டு சஞ்சரிக்கையில் எதிரில் தோன்றிய ஓர் அசுரனுடைய உபதேசத்துக்கு உட்பட்டு அதுமுதல் அசுரர்களுடன் சேர்ந்து ஆயிரம் யானை பலத்தை அடைந்து அவர்களுடனே வாசம்செய்து தன் ஜாதி தர்மத்தையும் குலச்சிறப்பையும் மறந்துவிட்டான். ஒருநாள் ஒரு புண்ணிய காலத்தில் அவன் பல அசுரர்களுடன் கங்கைக் கரைக்கு வருகையில் அங்கேயிருந்த சமீக முனிவர் அவனை உற்றுப்பார்த்துத் தம் ஞான திருஷ்டியால் அவன் வரலாற்றையறிந்து க்ஷணகாலம் அசுரர்களை விட்டுப்பிரித்து 'நீ யார்' என்று கேட்டார். அவருடைய பார்வையைப் பெற்றதுமே அவன் நற்புத்தியை யடைந்து "ஸ்வாமி, நான் பிரம்ம குலத்தில் உதித்து இளமையில் அசுரர் கூட்டத்தில் வந்து இவ்விதம் கெட்டுவிட்டேனே! எனக்கு எப்போது நற்கதி ஏற்படும்" என்று கேட்டான். உடனே சமீக முனிவர் அவன்மீது

கருணைகொண்டு 'பிருகு மகரிஷியின் புத்திரனாகிய ஓ கதிபானுவே! நீ இன்னும் பல்லாயிர வருஷகாலம் வரையில் அசுரப் பெயராகிய திரிசிரஸ் என்னும் பெயரையும் அசுர மாயையையும் பெற்று அதற்குரிய சேஷ்டைகளையும் நடத்திவருவாய். உனது பிதாவாகிய பிருகுரிஷி யாக தீக்ஷிதராய் வேதிகையின் மீது வீற்றிருக்கையில் நீ ஓர் அற்ப ஜந்துவாய் எப்போது அவரைப் பார்ப்பாயோ, அப்போதே பரமேசன் கருணையினால் உனது ஜன்மம் மாறி வேறு சிறந்த உருவத்தை அடைந்து யாககாரியத்துக்கு உரிய யோக்கியதையையும் பெற்று விளங்குவாய். பிறகு உனது நிஜஸ்வரூபம் உண்டாகக்கடவது' என்று அருளினர்" என்று உரைத்தது. அதைக்கேட்ட எல்லா மகரிஷிகளும் வேதியரும் ஆச்சரியமடைந்து தியாகபதியைத் துதித்து அந்த மானைப்பிடித்து யாக தீக்ஷிதராகிய பிருகுவின் அருகில் நிறுத்தினர்கள். அத்தருணம் மானின் வீக்ஷணம் யாககாரியத்துக்கு வேண்டியிருந்ததால், அம்மானைக் குண்டத்தின் அருகே சிறிது நேரம் நிறுத்தி மந்திரத்தை ஜபித்தனர். உடனே அம்மானுருவம் மாறி ஆதிகாலத்தில் இருந்த ரிஷி புத்திர சரீரமும் அழகும் புத்தியும் வைதிக விசுவாசமும் தந்தையினிடம் பக்தியும் உண்டாயின. அப்போதே கதிபானு தந்தையை நமஸ்கரித்து மற்றத் தபோதனர்களின் ஆசியைப்பெற்று விளங்கினன். இவ்வாறு யாகத்தை இடையூறின்றி நடப்பித்த எல்லா ரிஷிகளும் பிருகுவை முன்னிட்டுத் தியாகேசரைப் பணிந்து புகழ்ந்து அவப்ருத ஸ்நாநாதி நிகரற்ற பலனைபடைந்து தமது இருப்பிடம் சென்றனர்.



## 28. அசுரன் கண்ணைப் பிடுங்கி உலகைக்காத்த லீலை.

நியாகேசனருளால் நூறு வருஷ காலம்வரையில் உலகில் அசுர அரக்கர் பயமில்லாமல் ஜனங்கள் மிகவும் சுகமாக வாழ்ந்துவந்தனர். பிறகு ஒருசமயம் மகத நாட்டை யாண்டு வந்த வஸுசர்மமஹாராஜன் தன் குல மந்திரிகளுடன் யோசனைசெய்து வங்கதேசத்துக் கதிபதியாக விளங்கிய ப்ருஹத்பாதாசுரனுடைய சபைக்குத் தன் தூதனை யனுப்பி பலவாறு நல்லுரைகளைத் தெரிவித்தபோதிலும் அவ்வசுரன் அந்த நல்லுரையை ஒருசிறிதும் பொருட்படுத்தாமல் தன் அசுரத் தன்மையையே பலவாறு காட்டிவந்தான். மிக்க கொழுப்பை யடைந்து அவன் யோகம், யாகம், வேதபடனம், பரமேச குண கீர்த்தனம் முதலிய நற்காரியங்களைச் செய்பவர்களுக்கு இடையூறுகளை விளைவித்து வந்தான். சிலசமயங்களில் அவன் தன் பரிஜனங்களையும் சேனைத் தலைவரான அசுரர்களையும் ஏவி உலகத்துக்குத் தீங்கை உண்டாக்கினன். மனுமுறையிற் கண்ட அரச நீதிகளை யெல்லாம் இகழ்ந்து தன் மனப்போக்கின்படியே ஜனங்களைப் பீடித்தான். அவனுடன் எதிர்நின்று போர்செய்யவல்ல பூபாலர் ஒருவரும் இன்மையால் அருந்தவர்களும் அவன் பலத்தைக் கண்டு பயந்தனர். வேதியர் முதலிய சாதுக்கள் அவனையழிக்கும் உபாயத்தைத் தேடினர். அவ்வசுரன் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு தேசத்தரசன் மீது தானே போர்புரிந்து அநீதியாக அவர்களை ஜயித்து அவர்கள் பூமியைக் கவர்ந்து ஜனங்களுக்குப் பலவழிகளில் தீங்கை விளைவித்து வந்தான்.

ப்ருஹத்பாதாசுரனுடைய பெயரைக் கேட்கும்போதே எல்லோரும் திகிலடைவார்கள். சூரபத்மனைப்போலவும் ஹிரண்யகசிபுவைப்போலவும் அவன் பலத்தினால் வளர்ந்து கர்வமிடைந்து கெட்டவழியில் திரிந்தபோதிலும் யாகஞ்செய்பவர்

களின் கருத்தை முற்றிலும் நிறைவேற்றும் ஒரு நற்குணத்தை யுடையவன். தானத்தின் சிறப்பை நன்ருக அறிந்தவன்.

தன்னிடம் யாசகத்துக்கு வருவோர் நற்குணத்தினரா யினும், கெட்ட குணத்தினராயினும், கெட்டவழியில் செலவிடுப வராயினும், ஈன குலத்தினராயினும், கெட்ட எண்ணத்தோடு வருபவராயினும், அகாரணமாய் வருவாராயினும் அகாலத்தில் வந்தாலும் எல்லையை மீறி வந்தாலும் அவன் யோசியாமல் யாசகர்களுடைய வரவை ஏவலாளர்கள் மூலம் கேட்டவுடனே வெளியேவந்து அவர்களுடைய முகக்கமலத்தைப் பார்த்து வருத்தமுடைந்து கைகூப்பி வணங்கி அவர்கள் வேண்டிய பொருளை அப்போதே அளித்து அவர்கள் கையில் தன் பொருள் சென்றதே என்று மிக்க மனக்களிப்பை அடைவான். நிகரற்ற இவ்விதமான தர்மசிந்தை யொன்றுமட்டும் அவனி டம் குடிகொண்டிருந்தமையால் அவன் செய்யும் தீமைகளை உலகோர் பொறுத்துவந்தனர்.

இவ்வித மேன்மையான தர்மசிந்தை அடைந்திருந்தும் ப்ருஹத்பாதாசுரன் தான் பிறந்த அசுரஜாதியின் அம்சத்தால் தானம் செய்யும் சமயத்தை ஒரு நியமமாக வைத்துக்கொள்ள வில்லை.

சிலதினங்கள் காலையிலும், சிலநாள் மாலையிலும், சில நாள் அஸ்தமன சமயத்திலும் தானம் செய்வான். சிலசமயம் நாலைந்து தினங்கள் மலைக்குகைகளில் இருப்பான். ஒருமாதம் வரையில் ஆகாயத்திலேயே சஞ்சரிப்பான். சிலசமயம் தடா கத்துள் மூழ்கியிருந்தே காலங்கழிப்பான். சிலசமயம் ஏழை களுடனும் தவத்தோருடனும் வலுவில் சண்டைசெய்வான். வங்கதேசத்தில் அவன் தங்கியிருக்கும் சமயத்தைத் தேடிப் பார்த்து அவனிடம் செல்வது மிகவும் கஷ்டமாயிருந்தபடியால் அநேக யாசகர்கள் அலைந்து திரிந்து எதிர்பார்த்தும் அவன்

வராமற்போகவே மனமுறிந்து வேறொரு தேசம் போய்விடுவார். வெகுநாள் காத்திருந்து அவனைக் காணும் யாசகர்கள் அவன் கொடுக்கும்பொருளைத் தூக்கிச் செல்ல முடியாமலும் தாம் விரும்பியதைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாய்க் கிடைத்தபடியாலும் சில யாசகருக்குத் தாமே கொடுத்து அவனைப்புகழ்ந்து வந்தார்கள். அவ்வசுரனிடம் இவ்வாறு பல கெட்ட குணங்களுடன் தானம் செய்தல் என்னும் ஒரு நற்குணமும் குடி கொண்டிருந்ததால் அவன் செய்த தீமைகளை வெகுநாள்வரை ஜனங்கள் பொறுத்திருந்தார்கள்.

பரதாரஹரணம், பிராமண ஹநநனம் (நிந்தை) கோவதை முதலிய பல கொடுஞ்செயல்களை அவன் புரிய ஆரம்பித்தபோது வேதியரும், தவசிகளும், மன்னரும் கண்ணீர் விட்டுக் கதறினார்கள். ஒருநாள் அந்நாட்டு ஜனங்கள்* அவ்வசுரனுடைய பரிஜனங்கள் செய்யும் கொடிய செயல்களைப் பொறுமல் வங்கதேசத்தைவிட்டு மகத நாட்டு வஸுசர்ம மகாராஜனிடம் வந்து அவனை வணங்கி அவனிடம் சரண்புகுந்தார்கள்.* அவ்வரசன் அவர்களுக்கு அபயம் அளித்து அது முதல் தன் நாட்டிலேயே அவர்களுக்கு இடம்கொடுத்துக் காத்து வந்தான். அதனல் அவனுக்கு மிக்க மகிழ்ச்சி உண்டானலும் எந்தசமயம் அவ்வசுரன் தன் நாட்டுக்கு வந்து ஜனங்களை துன்புறுத்துவானே என்ற கவலையையும் கொண்டான். அச்சமயம் அவனுடைய சபைக்கு நாரத முனிவர் வந்து தோன்றினர். மகாராஜன் எதிர்கொண்டு அவர் பாதத்தை வணங்கிப் பூஜித்துத் தன் ஜனங்களுக்கு அவ்வசுரனல் நேரிட்டிருக்கும் பயத்தையும் அவனுடைய் நன்மை தீமைகளையும் எடுத்துரைத்தான். நாரதர் கேட்டு "மகாராஜனே, நீ பயப்பட வேண்டாம். தெற்கேயுள்ள சோழ நாட்டரசனை யடைந்து நீ அவன் மூலம் தியாகராஜ மூர்த்தியைச் சரணடைந்தால் அவ்விசனே அவ்வசுரனை யழித்து

ஜனங்களைக் காப்பாற்றுவார்" என்று சொல்லிவிட்டு வானுலகை நோக்கிச் சென்றார்.

பின்பு வஸுசர்மன் சில சேனை வீரர்களுடன் தென் திசையை நோக்கிச் சென்று திருவாரூரில் செங்கோல் செலுத்தி வரும் புஷ்யபாஸ்கர மகாராஜனை யடைந்து அவனுடன் கமலாலயத்தில் நீராடித் தேவாலயத்தில் விளங்கும் ஸ்ரீ தியாகர் பிரம்ம மூர்த்தியைச் சரணடைந்து பலவாறு துதித்துப் போற்றினன். மூன்றுபட்சம் வரையில் தினந்தோறும் காலையில் நீராடித் தியாகேசர் சந்நிதானத்தில் நின்று மகத தேசத்து மன்னனும் சோழ அரசனும் ஜனங்களின் க்ஷேமத்துக்காக அந்த பிரகத் பாதாசுரனை அழிக்க வேண்டுமென்று பரமேசுவரனைக் குறித்துத் துதிசெய்து போற்றி நிற்கையில் ஒரு நாள் தயாநிதியான தியாகராஜ மூர்த்தி ஓர் அசரீரி வாக்கு மூலம் "ஓ ராஜ குஞ்சரங்களே! தர்மவழியில் நிலைபெற்ற நம்மைத் தஞ்சமென்றடைந்த உங்களையும் இவ்வுலக ஜனங்களையும் துன்புறுத்திவரும் அவ்வசுரனை இன்னும் சில தினங்களில் மாய்த்துவிடுவோம்" என்று உரைத்தார். பூபாலர்கள் இருவரும் உடனே பரமேசனைப் பணிந்து திரும்பி மனக்களிப்புடன் திருவாரூரில் இரண்டு மேகங்கள் போல் வாழ்ந்து வந்தனர். ஒருநாள் ப்ரஹத்பாதாசுரன் தன் துணைவராகிய பதினொரு மாயாவிகளுடன் தென் திசையை நோக்கி ஆகாய மார்க்கமாக வருகையில் தியாகராஜ மூர்த்தி ஒரு வேதிய னுருவமெடுத்து அங்கேயுள்ள புண்ணிய தீர்த்தத்தின் கரையில் ஒரு பெரிய ஹோமகுண்டத்தில் அக்கினியை வளர்த்து ஆஹுதி செய்துகொண்டிருந்தார். அந்த அக்கினி ஜ்வாலைக்கு நேராக வானத்தில் சென்ற அசுரன் கீழ்நோக்கி ஆஹுதி செய்யும் முனிவரெதிரில் வந்து நின்றான். அப்போது வேதிய னுருவமாக விளங்கும் பரமேசுவரன் மிக்க வேகமாய் எழுந்து விநயத்துடன் "ஓ அசுர மகாராஜனே! எனது பாக்கியத்தினால் நீ இங்கு தோன்றினாய். என் வயது முடிவில் இந்த

யாகத்தை நான் செய்ய ஆரம்பித்துவிட்டேன். இந்த யாகத்துக்கு வேண்டிய ஹோமத்திரவியம் இருபத்துநான்கு குறையாக உள்ளன. அவற்றை நீயே அளிக்கவேண்டும். உன்னை நான் யாசகனுகப் பற்றினேன்" என்றார்.

தானம் செய்வதில் மிக்க விருப்பமும் பலமும் நிறைந்த அவ்வசுரன் "ஓ வேதியரே, நீர் விரும்பியதை அளிக்கிறேன், என்ன வேண்டும்" என்று கேட்கவே, பரமேசுவரனுகிய வேதியர், "உன்னுடையனவும் உன் துணைவர் இப்பதினெருவருடையனவுமான 24 கண்களை ஆகுதி செய்யவேண்டும்" என்றார். கேட்ட அசுரன் முகமலர்ச்சியுடன் "வேதியரே, இதோ என் இரண்டு கண்களும், இவற்றைப் பெற்றுக் கொள்ளும். மற்றவர் கண்களையும் நீரே பிடுங்கிக்கொள்ளும்" என்று கூறிக்கொண்டே தன் இரு கண்களையும் பயப்படாமல் மிக்கக் களிப்புடன் பிடுங்கி அவர் கையில் அளித்தனன். அவற்றைப் பெற்றுக்கொண்ட பரமேசுவரர் மற்றவர் கண்களையும் பிடுங்கினர். அப்போது அசுரராஜன் "ஓ வேதியரே, நீர் யார்! என்ன பலனை உத்தேசித்து எம் கண்களை இரந்தீர்? கருணையோடு சொல்லும்" என்று கேட்கவே பரமேசுவரன் அவனது தானச்சிறப்பைப்பற்றிக் களித்து அவனுக்கும் மற்றவர்களுக்கும் தமது ஸதாசிவ ஸ்வரூபத்தை க்ஷணகாலம் காட்டி அப்பன்னிருவருக்கும் சுவர்க்கலோகத்தை அளித்தார். இவ்வதிசயங்களைக் கண்ட வானவர் மலர்மழை பொழியவும் மானவர் ஈசனைத் துதிக்கவும் உலகம் களிக்கவும் தியாகராஜர் மறைந்தருளினர்.

## 28. சுக்கிரனைத் தண்டித்துத் தொண்டனைக் காத்த லீலை.

தியாகராஜப்பரம்பொருளின் திவ்விய லீலைகளினால் உலகத்தில் துன்பங்கள் தொலைந்து பக்தியும் செல்வமும் இன்பமும் வளர்ந்து ஜனங்களெல்லாரும் மிகவும் சுகமாக வாழ்ந்திருந்தார்கள்.

அப்போது தேவலோகத்தில் சுதர்மையில் வீற்றிருந்து அரசுபுரியும் இந்திரன் சுவர்க்கத்தை நெடுநாளாக நாசம்செய்து வரும் ஜம்பாசுரன்மீது நிகரற்ற தேவசேனையை ஏவி தானும் ஐராவதத்துடன் போர்க்களத்தை அடைந்து தன் கையில் விளங்கும் வச்சிராயுதத்தினால் அவ்வசுரனை வதைத்து வானுலகுக்குத் திரும்பினான். நெடுநாள் இரவும் பகலும் அவ்வசுரனுடன் போர்புரிந்த சிரமத்தினால் தேவேந்திரனுடைய சரீரத்தில் நடுக்கமும் தலைச்சுற்றும் உண்டாயின. அவன் முன்பு 100 அசுவமேதயாகம் நிறைவேறும் வரையில் அநேக வருஷங்கள் உணவின்றியிருந்தபோதும், விருத்திரன் பாகன் முதலிய கொடிய அசுரப் படைவீரர்களுடன் போர்புரிந்தபோதும் உண்டாகாத ஒரு பெருநடுக்கம் அவன் சரீரத்தில் இப்பால் உண்டாகவே அசுவினி தேவர்களாகிய தேவ வைத்தியர்கள் பலவாறு மணிமந்திர ஔஷதப் பிரயோகங்களினாலும் அந் நடுக்கத்தைப் போக்க முடியாமல் வருந்தினார்கள். இந்திரனுடைய கண்கள் அடிக்கடி சுழன்றுத் தலை சுற்றி உடல் வெதிர் வெதிர்த்து நடுங்கும்போது இந்திரன் எவ்வாறு சிம்மாசனத்தில் வீற்றிருந்து பரிபாலனம் செய்வான்? அவ்விந்திரனுடைய சரீரத்துக்கு ஆரோக்கியம் உண்டாகும் வரையில் அவனது பதவியில் வேறு யாரையாவது ஸ்தாபித்து வானுலகத்தை நடத்தலாமென்று பிருகஸ்பதி முதலியவர்கள் ஆலோசனை செய்து பூவுலகில் நிறைசெல்வத் திருவாரூரில் விளங்கும் பாஸ்கர சோழமன்னனை விமானத்தில் ஏற்றி அழைத்து

வந்து தேவலோகத்தின் தேவசபையில் கற்பக தருவின் நிழலில் விளங்கும் சிம்மாசனத்தில் அமர்த்தித் தேவகங்கா ஜலத்தினால் அபிஷேகம் செய்வித்து மிக்க சிறப்புடன் வீற்றிருக்கச் செய்தார்கள்.

அந்தச் சோழ மஹாராஜன் பூவுலகில் அநேக அசுவமேத யாகங்களைச் செய்தவன். வேதங்களின் தத்துவங்களை நன்கு அறிந்தவன். தேவர்களிடம் மிக்க அன்பு பூண்டவன். பரம சிவத்தின் தத்துவத்தை நன்ருக அறிந்து முக்காலத்திலும் தியாகராஜனுடைய பாதபங்கயங்களைப் போற்றி வணங்கும் நல்லெண்ணம் உடையவன். சத்தியவாதி. நியாயங்களையே கண்களாகக் கொண்டவன். சோம்பலற்றவன். போர்க்களத்தில் அளவற்ற சக்தியினால் பகைவரை வென்று நீதியை நிறுத்தும் தன்மையுடையவன்.

இவ்வளவு நற்குணங்களுக்கும் இருப்பிடமான பாஸ்கர சோழ மஹாராஜன் தியாகேசனருளால் தேவர்கள் வேண்டு கோளுக்கு இணங்கி வானுலகைநாடி மனுஷ்ய சரீரத்துடன் தேவசபையில் வீற்றிருந்து பிருஹஸ்பதி முதலிய சகல தேவர்களையும் விநயமாக வணங்கித் துதித்து அவர்களின் அனுமதி பெற்று ஆசனத்தில் அமர்ந்து தேவலோக நியாய விஷயங்களை நிலைபெறச்செய்து வந்தான்.

அம்மானுஷ மஹாராஜன் அரசுபுரியும் மேன்மையையும் அவனுடைய பக்தி முதலிய நற்குணங்களையும் கண்டு வியப்புற்ற தேவர்கள் அவனுக்குப் பலவாறு ஆசி கூறினர். அசுரர்களின் எவ்வித மாயையும், அரக்கர்களின் சூழ்ச்சியும் வானுலகில் தோற்ருவண்ணம் மிகவும் சிறப்பாகச் சுவர்க்கத்தில் பாஸ்கர சோழ மஹாராஜன் செங்கோல் செலுத்திவந்தான். ஒரு நாள் பிருஹஸ்பதி முதலிய தேவ ச்ரேஷ்டர்களைப் பார்த்து வணங்கிப் பூவுலகில் திருவாரூரில் விளங்கும் கைலாஸபதியாகிய தியாகராஜாவின் அற்புத லீலைகளையும் அவரே தொண்டர்

களின் எல்லா நோய்களையும் ஒழிக்க வல்லவரென்னும் செய்தியையும் நன்ருக எடுத்துக் கூறி நாள்தோறும் காலையில் கமலாலயத்தில் நீராடித் தியாகராஜாவின் சந்நிதானத்தைப் பிரதக்ஷிணம் செய்யும்வண்ணம் சில தேவர்களுடன் தேவந்திரனைத் திருவாரூருக்கு அனுப்பினன்.

பூவுலகிலுள்ள ஒரு மானிட மன்னன் சுவர்க்கத்துக்கு வந்து மிக்க மேன்மையுடன் செங்கோல் செலுத்திவருவதுடன் தேவேந்திரனுடைய நோயை நீக்குவதற்கு ஓர் உபாயம் சொல்லி அவனைப் பூவுலகுக்கு அனுப்பிவிட்டதைச் சில அசுரர் மூலம் கேட்டறிந்த சுக்கிராசாரியர் கடுங்கோபத்தை அடைந்தார். எவ்வாறேனும் அம்மானிட மன்னனைப் பூவுலகில் தள்ளிவிட வேண்டுமென்று சுக்கிரன் எண்ணி ஒருநாள் பாஸ்கர மன்னனைக் கண்டு "ஓ மன்னர் மன்னனே! புரந்தரன் பதவியை அடைந்து விளங்கும் நீ பிருஹஸ்பதியையும் அற்பசுரர்களையும் வணங்குவது நியாயமா?" என்று கலகஞ் செய்தார். அவ்வுரையை அவன் அங்கீகரித்துக் கொள்ளவில்லை. மற்ருெரு சமயம் சுக்கிரன் மன்னவனைக் கண்டு சித்திரலேகையை மணந்துகொள்ளும்படி உரைத்தார். அதற்கும் மன்னன் இணங்கவில்லை.

ஜிதேந்திரியனுகவும் நியாயக் கண்ணுடனும் விளங்கும் அம்மன்னவன்மீது ஏதேனும் ஒரு மாயையைச் செலுத்தி ஏமாற்றி அவனை ஸ்வர்க்கத்திலிருந்து நரகத்துக்காவது பூமிக்காவது, பாதாளத்துக்காவது தள்ளிவிடவேண்டுமென்று சில அசுரர்களின் பேச்சைக்கேட்டு அசுரகுருவாகிய சுக்கிராசாரியர் ஒருநாள் சோழமஹாராஜனைக் கண்டு பேசும்போது சுக்கிரனுடைய அசுரக் கருத்தையறிந்து அக்கினிதேவன் மன்னவனருகே ஓடிவந்தான். அவன் தம் கருத்தை மன்னவனிடம் வெளியிடுவானே என்று சுக்கிரன் பயந்து திடீரென்று பேச்சை நிறுத்திவிட்டு ஒரு மாயாமந்திரத்தை உரைத்தார்.

அம்மாயா மந்திரம் மன்னவன் செவியில் நுழைவதற்குள் அக்கினிதேவன் அருகே வந்து கையை நீட்டி அதட்டி ஒரு வித அடையாளஞ் செய்தான். இவ்விரண்டுவிதமான சூழ்ச்சிகளையும் ஒரே காலத்திற் கவனித்துக்கொண்டு அம்மன்னவன் ஒன்றுந் தோன்றாமல் கண்மயக்கமுற்று, தியாகேசனே சரணமென்று அலறிவீழ்ந்தான். தொண்டரைக் காக்கும் பரம்பொருளாகிய தியாகேசர், தம் பெயரை மன்னன் உரைத்த பொழுதே ஒரு சங்கற்பம் செய்துவிட்டார். அதனால் அசுரர்களும் சுக்கிரனும் மூர்ச்சையடைந்து வீழ்ந்தார்கள். அப்போதே நித்திரையிலிருந்து எழுந்தவன்போல பாஸ்கர மஹாராஜன் கண்களைத் திறந்து அருகில் நிற்கும் அக்கினியைப் பணிந்தனன். அப்போது நேரிட்ட சம்பவங்களை யெல்லாம் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு தியாகராஜாவினிடமுள்ள பக்தியின் மேன்மையைப் பற்றிச் சிலாகித்துக் கொண்டே தேவசபைக்குச் சென்றனர். கமலாலயத்தில் நீராடி ஈசனைப் பணிந்ததால் நடுக்கம் தீர்ந்து நன்மையடைந்த ஸஹஸ்ராக்ஷனாகிய தேவேந்திரன் அப்போது தேவசபையில் விளங்குவதைச் சோழ மன்னன் கண்டு வணங்கி அவனாலும் தேவர்களாலும் ஆசிக் கூறப்பெற்று விமானமூர்ந்து மறுபடி திருவாரூரையடைந்து பூபாலர்தொழ மிக்க சிறப்புடன் செங்கோல் செலுத்திக்கொண்டு நன்கு வாழ்ந்து வந்தான்.

பாஸ்கர ராஜன் தம் மாயையினால் வீழும்போது தியாகராஜாவென்று உரைத்ததைச் செவியுற்ற சுக்கிரனும் ஈசனைத் துதித்து அவரது கருணையினாலே மூர்ச்சை தெளிந்து அசுர குருவின் பதத்தில் விளங்கினர்.

இவ்வரலாறுகளை யெல்லாம் அரசன்மூலம் அறிந்த அமைச்சர் முதலியவர்கள் பரமானந்தமடைந்து ஈசனைத் துதித்தனர்.



## 30. காமதேனுவின் சாபமொழித்த லீலை.

பூவுலகில் வீற்றிருந்தே ஸ்ரீ தியாகேசர் தமது கருணைப் பெருக்கினாலே சுவர்க்கலோகத்தையும் மத்திய லோகமாகிய பூவுலகத்தையும், நாகலோகமாகிய பாதாள லோகத்தையும் காப்பாற்றி வருகிறார் என்றும் சத்தியவாதிகளையும் சிறந்த பக்தர்களையும் காப்பாற்றிவருகிறாரென்றும் பரமேசுவரனுடைய திவ்விய குணங்களைக் கானஞ்செய்து மூவுலகினும் எல்லா ஜனங்களும் மேன்மையுடன் வாழ்ந்து வருகையில் பாற்கடலில் உதித்த காமதேனு ஒருநாள் கங்கைக் கரையிலுள்ள வசிஷ்டருடைய ஆச்சிரமத்திலிருந்து கிளம்பி இஷ்டம்போல் அங்கங்கே இளம்புற்களும், குளிர்ந்த நிழலுமுள்ள ஸ்தலங்களில் நிலைபெற்று அநேக நதிகளையும், வனங்களையும், தேசங்களையும் கடந்து தென்றிசையை நோக்கிச் சென்றது. அங்கே ஒரு காட்டின் நடுவே சிறிய தபோவனம் ஒன்றுண்டு. தவம் செய்தற்கேற்ற அவ்விடத்தில் பிருகு முனிவர் நெடுநாள் யோகம் செய்துமுடித்துத் திரும்புகையில் மங்களகரமாக எதிரில் வரும் காமதேனுவைக் கண்டு மகிழ்ந்தார்.

தமது யோகம் குறைவின்றி முடிந்து தாம் பர்ணசாலைக்குத் திரும்புகையில் மஹா புண்ணியவதியாகிய காமதேனுவின் தரிசனம் கிடைத்ததே என்று பிருகு முனிவர் மிக மகிழ்ந்தார். அருகே ஒரு வில்வமரத்தடியில் விளங்கும் லிங்க ஸ்வரூபிக்குப் பாலபிஷேகம் செய்ய நினைந்து ப்ரபோத ஸ்துதி முதலியவற்றைச் சொல்லிக் கைலாஸ லிங்கத்தின் அருகே நின்றுகொண்டு "காமதேனுவே! இவ்வீசனுடைய அபிஷேகத்துக்குத் தக்கவாறு நீ பாலைப் பொழிவாயாக" என்று நாலைந்து தடவை மனத்தில் ஸ்மரித்தபோதிலும் காமதேனு பாலை அளிக்கவில்லை. திரும்பிப் பார்க்கவுமில்லை. வாலை வீசிக்கொண்டே தன் மனம்போல் தென்திசையையே

நோக்கிச் சென்றது. கைலாஸ லிங்கத்தின் அபிஷேகத்துக்காக அந்த பிருகு ரிஷி காமதேனுவை மனத்தில் நினைத்தும் கூப்பிட்டும் துதித்தும் அது பாலையளிக்காததால் முனிவர் கோபமுற்று அப்பசுவை நோக்கி "ஏ, சுரபியே! லிங்கத்தின் அபிஷேகத்துக்கு நீ பாலை அளிக்காமலும் எனது வேண்டுகோளை அங்கீகரியாமலும் சென்றபடியால் இந்த நிமிஷம் முதல் நீ பூலோகப் பசுவைப்போல் ஆவாய்" என்று சாபம் இட்டார்.

அப்போதே காமதேனுவுக்குத் தெய்வத் தன்மையும் தானச் சிறப்பும் குலைந்து சாதாரணமான பசுவைப்போல் அக்காட்டில் மேயும் ஆநிரையுடன் சேர்ந்து விட்டது. அப்பசுக் கூட்டத்தை மேய்க்கும் ஸ்ரீமுகன் என்னும் இடையன் புதிதாகப் பசுக்கூட்டத்தில் கலந்திருக்கும் அக் காமதேனுவின் வடிவைக் கண்டு வியப்புற்று, "இது தெய்வப் பசுவோ! தவத்தின் பயனைப் பெற்ற தேனுவோ! உலகமாதாவோ!" என்று மிக்க கௌரவத்துடன் அன்றுமுதல் தானே அப்பசுவை மேய்த்து நீர்காட்டி நிழலில் உறங்கச் செய்து போஷித்து வந்தான்.

ஆறுமாத காலமாகியும் தன் பசுவாகிய காமதேனு தன் ஆச்சிரமத்துக்குத் திரும்பி வராமையால் வசிஷ்டர் மனக் கலக்கத்தை அடைந்தார். தம் யாககாரியங்களுக்கு அளவற்ற திரவியங்களை அளிக்கும் தெய்வத் தன்மை வாய்ந்த காமதேனு எவ்வுலகத்தில் எங்கே நிலைபெற்றுள்ளது என்று தமது தியானக் கண்ணால், தமது காமதேனுவுக்கு நேரிட்ட சாபத்தையும் ஓர் இடையனிடம் அது சுகமாக வாழ்வதையும் அறிந்து துக்கத்தையும் மகிழ்ச்சியையும் அடைந்து சில சிஷ்யர்களுடன் அவ்விடையனிடம் சென்று, "ஓ! கோபாலா! சிலதினங்களுக்கு முன் ஒரு சிறந்த பசு உன் பசுக்கூட்டத்தில் சேர்ந்ததல்லவா! என் பசுவே அது. அதை நீ என்னிடம்

ஓட்டிவிடவேண்டும். இதுவரையில் நீ அதை நன்ருகக் காப் பாற்றிவந்ததற்கு என்ன கூலி கேட்டாலும் தருகிறேன்" என்ருர். சிறந்த ஒளியோடு விளங்கும் அவர் சொன்னதைக் கேட்ட கோபாலன் "ஓ மஹரிஷியே! நீர் ஒரு சிறந்த ரிஷிபோல் விளங்குகிறீர். அதை உம்மிடமே ஒப்பித்து விட்டேன். நீர் பெற்றுக்கொண்டு செல்வீர். கூலியொன் றும் வேண்டாம். எனக்கு நற்புத்தியும் நற்கதியும் அளிப்பீர்" என்று சொல்லி அவர் பாதத்திற் பணிந்து நின்ருன். அப் போது வசிஷ்டர் "ஓ கோபாலனே, சகல விருப்பங்களையும் அளிக்கவல்ல இக்காமதேனு சிலதினங்களுக்கு முன் கலிங்க தேசத்தின் மேற்குப் பக்கத்தில் மிலேச்சர், கிராதர், புளிந்தர் வசிக்கும் பூமியைத் தன் குளம்பினுல் தொட்டபடியால் மதியிழந்துவிட்டது. சற்றுநேரம் மதியிழந்து செல்லுகை யில் பிருகு மகரிஷியின் வார்த்தையை அறிந்துகொள்ள முடி யாமல் பூலோகப் பசுவைப்போல் சக்தி குன்றியிருக்கிறது. எனது யாகத்துக்குரிய இப்பசுவை நீ எனக்கு அளிப்பாயா யின் நான் தென்திசையில் விளங்கும் திருவாரூரை யடைந்து தியாகேசரின் கடாக்ஷத்தால் இப்பசுவின் சாபத்தை ஒழிக்கப் போகிறேன். நீயும் இப்பசுவை ஓட்டிக்கொண்டு வருவாயா ஞல் உனக்கும் நற்கதி கிடைக்கும்" என்ருர். முனிவர் சொல்லைக் கேட்ட ஸ்ரீமுகன் கமலாலயத்தில் நீராட விரும்பி அப்பசுவை ஓட்டிக்கொண்டே வசிஷ்டரைப் பின்தொடர்ந்து அவரால் பரமேசுவரரின் மகிமையை அறிந்து ஆரூரை யடைந்து கமலப் பொய்கையில் நீராடிப் பாபத்தைப்போக்கி நற்கதியடைந்தான்.

சூரிய வம்சத்து குலகுருவாகிய வசிஷ்டரைச் சோழ ராஜன் அப்போது வணங்கிப் போற்றித் தியாகராஜ தரிச னத்தை அளித்தான். வசிஷ்டர் காமதேனுவைக் கமலப் பொய்கை நீரினுல் புரோக்ஷித்துத் தியாகேசர் முன்னிலையில்

திருத்தியபொழுது தியாகராஜர் ஆகாய வாணியினுல் "வசிஷ்டருடைய காமதேனுவினுல் யாககாரியம் நடப்பது முக்கியமானதால் இப்போது இப்பசுவின் பாவம் தொலைந்துவிட்டது. முன்போல் அளவற்ற சக்தி இப்பசுவுக்கு உண்டாகக்கடவது" என்று உரைத்தார். அங்ஙனமே திவ்ய சக்தியையடைந்த காமதேனுவின் மகிமையினுல் வசிஷ்டர் தியாகேசருக்கு ஒரு க்ஷீராபிஷேகம் செய்வித்துக் காமதேனுவுடன் தவஞ்செய்யும் பொருட்டு இமயத்தை அடைந்தார்.



## 31. சாபமளித்தவரைப் புகழ்ந்த லீலை.

வேதாந்தத்தின் பொருளாகிய தியாகராஜனே நாடுகளிற் சிறந்த சோழநாட்டிலே மத்தியார்ச்சுன மென்னும் க்ஷேத்திரத்தில் ஒருசமயம் லிங்கஸ்வரூபியாகத் தோன்றி விளங்கினர். புண்ணியவிரத க்ஷேத்திரமாகிய திருவாரூரில் தியாகராஜ மூர்த்திக்கு எவ்விதமான சிறப்பும் வைபவமும் நிறைவேறினவோ அவ்வித சிறப்பும் வைபவமும் சோழநாட்டரசராலும் முனிவர்களாலும் அந்தணர்களாலும் மத்தியார்ச்சுன மூர்த்திக்கும் நிறைவேறின. இதனை அறிந்த தொண்டர்கள் கோடிக்கணக்காக லிங்கஸ்வரூபியை வணங்கித் தம் விருப்பங்களை அடைந்து மேன்மையுடன் விளங்கினர்கள். அப்போது ஒரு வருஷத்தின் ஆரம்பத்தில் சோழநாட்டில் வஸந்தகாலம் தோன்றிற்று.

பனியின் பிணி நீங்கிய தாமரை வாவிகள் அப்போது தம்மிடம் மலரும் கமல மலர்களின் தேனை வண்டுகளுக்கு அளித்தன. கொடிகளும் செடிகளும் பழைய இலைகள் நீங்கி இளம் தளிர்களோடு விளங்கின. கொடிகளிடம் மலர்கள் காணப்பட்டன. ஆகாயத்தை அளாவிய சோலைகள்தோறும் வண்டுகளின் கானமும் குயில்களின் பஞ்சமமென்னும் கீதமும் விளங்கின. தென்றற்காற்று சோலைகளில் அழகாக வீசிற்று. காவிரிக் கரையில் புதர்கள் வனப்புற்றன. முனிவர்களும் கலங்கும்படி இளவேனிற் காலம் தோன்றிற்று.

அப்போது மத்தியார்ச்சுனத்தில் லிங்கஸ்வரூபியாய் விளங்கும் தியாகராஜனுக்கு உமையாளுடைய அழகிய நடையும், வதனமும், கூந்தலும், ஸ்தனபாரமும், புன்முறுவலும் எதிர் நின்றனபோல விளங்கின. பரம்பொருளாகிய லிங்கஸ்வரூபியே இவ்வாறு உலகமாதாவுடன் கூடிக்களிக்க எண்ணு

கையில் காமதேவதையாகிய மன்மதன் வசந்த தேவனுடன் சேர்ந்து காவிரியாற்றின் கரையை மிகவும் அழகியதாகச் செய்து பார்வதி பரமேசுவரர்களுடைய மனத்தில் காமரசத்தைத்தேக்குவித்தான். அதனால் அவ்விருவரும் ஸமமான காமத்தையடைந்து காவிரிக்கரையில் விளங்கும் சோலையினுள்ளே புகுந்து பலவித லீலா ரசங்களை யனுபவித்து மனக்களிப்பை அடைந்தார்கள்.

உலகங்களுக்கெல்லாம் தாய்தந்தையராகிய உமையும், சிவனும் ஒன்றுசேர்ந்து கிரீடை செய்தபொழுது வசந்தகாலத்தினாலும் காமனாலும் அளிக்கப்பட்ட காலத்தின் மேன்மையினால் சிறப்பையடைந்து விளங்கினார்கள். அச்சோலையில் ஏகாந்தத்தை யடைந்த உமையும் பரமேசனும் சிறிதுநேரம் மானின் உருவங்கொண்டு இன்பமாகப் பொழுது போக்கினர். பிறகு சக்கரவாகப் பட்சியின் உருவமெடுத்து உல்லாசமாகப் பொழுதுபோக்கினர். சிறிதுநேரம் கிளியுருவங்கொண்டு அழகாய்ப் பேசிக்களித்தனர். சற்றுநேரம் வெள்ளைக் குதிரை வடிவங்கொண்டு மகிழ்ந்தனர். இவ்வாறு இஷ்டம்போல் பல உருவங்களையெடுத்துக் காமரசத்தை யனுபவிக்கையில் முடிவில் மானுஷ சரீரத்தையெடுத்து உல்லாச நடையுடன் இனிமையாகப் பேசிக்கொண்டு மெய்மறந்து நடந்தனர்.

அப்போது காவிரியின் கரையில் ஓரிடத்தில் புண்ணிய கட்டத்தில் ஆயிரம் வேதியர் நீராடி ஜபதபங்கள் செய்திருந்தனர். அந்த இடத்துக்குக் கொஞ்சம் மேற்கே பிருகு ரிஷியானவர் புண்ணியகால ஸ்நானம்செய்து ஜபம், தியானம், நாம கீர்த்தனம் முதலியவற்றை நிறைவேற்றித் திரும்பினர். அப்போது மெய்மறந்திருந்த சிவபிரானையும் உமையையும் கண்டனர். அவரைக் கண்ட உலகமாதாவாகிய உமைமட்டும் சற்று ஒதுங்கி வெட்கமுற்று நின்றனள். பரமசிவனோ முனிவரைக்கண்டு வெட்கமுறாமல் உமாதேவியை அணைய முயன்

றனர். உடனே பிருகு முனிவர் கோபமுற்று, "இப்போதே சரீரம் வாடும்படியான சாபத்தை யளிப்பேன்" என்று சொல்லிக்கொண்டே சில சாப எழுத்துக்களையும் வெளியில் உரைத்தார். அதைக்கண்ட தேவர்களும் ரிஷிகளும் கடுக்கமுற்றனர். "உலக தம்பதிகளென்று அறிந்துகொள்ளாமல் ஞானமற்றவர் போல் ஏன் பிருகு இவ்வித சாபமளித்தார்" என்று திகிலையடைந்து கதறினார்கள். பார்வதியும் பரமசிவனும் ஒரு நொடிப்பொழுதில் மறைந்துவிட்டார்கள்.

உடனே ஈசன் அசரீரி வாக்காய் "ஓ பிருகு ரிஷியே! நீர் பயப்படவேண்டாம். தேவர்களே! நீங்களும் அஞ்சவேண்டாம். புருஷருக்குரிய அதிக காமத்தினால் மெய்மறந்து ஏகாந்த ஸ்தலத்தை விட்டு நீர் ஜபம் செய்யுமிடத்துக்கு நான் வந்தமையாலும் உமது எதிரில் வெட்கமின்றி உலகமாதாவை நான் தழுவத்துணிந்தமையாலும் நீர் சாபமளிக்க முயன்றது நியாயமேயாகும். குருவானாலும், தேவதையானாலும், ரிஷிகளானாலும் நியாயத்தை விட்டுத் தப்புவழியில் செல்லும்போது அவர்களைக் கண்டிப்பதே வேதத்தின் கருத்தாகும். என்மீது நீர் சாபமளித்ததுபற்றி நான் சந்தோஷப்படுகிறேன்" என்று உரைத்தார்.

அசரீரியைக் கேட்ட பிருகுமகரிஷியும் பரமேசுவரன் சஞ்சரித்த பூமியைப் பலமுறை வலஞ்செய்து தொழுது துதிசெய்து அதுமுதல் அப்பூமிக்கு 'லீலாவன புண்ய பூமி' என்ற பெயரை அளித்தனர்.



## 32. வேதியனுகி அசுரன் வயிற்றைக் கிழித்த லீலை.

முன்பு ஒருகாலத்தில் கொடிய அசுரர்களெல்லோரும் ஒன்றுகூடி நெடுநாளாக அருந்தவம் புரிந்து பிரம்மதேவனிடம் வரம்பெற்றுத் திரும்பிவந்த யுக்திகல்பனென்னும் அசுர ராஜனை வணங்கித் துதிசெய்து "ஓ அசுர சிரேஷ்டனே! அசுர ஜாதியிற் பிறந்து வலிமை குன்றி மனக்குறையை அடைந்து நாங்களெல்லோரும் உம்மையே சரணமாக அடைந்திருக்கிறோம். மனுஷ்யர்களுக்கு ஒருவருஷ காலமானது நமக்கும் தேவர்களுக்கும் ஒரு பகலாகும். இவ்விதமான தேவாசுர வருஷங்கள் நூறு நூறாகக் கழிந்துபோன பிறகும் நீர் தபோவனத்திலிருந்து திரும்பிவரக் காணோம். அதனால் நாங்களெல்லோரும் சோர்வடைந்து திக்குக்கு ஒருவராகச் சிதறிவிட்டோம். நீர் தவம்செய்ய உட்கார்ந்த பிறகு இது வரையில் தேவர்களும் முனிவர்களும் விரும்பியபடி பரமசிவனும் மற்றும் சில தேவதைகளும் ஒருவரோடொருவர் துணையாக இருந்து அசுரர்களைக் குலம் குலமாக வதைத்துக் கொன்றார்கள். அசுரர்களுக்கெல்லாம் தலைவராகிய ரக்தாசுரனையும் கோலாசுரனையும், ப்ரதர்க்காசுரனையும், மத்தப் பிரமத்தாசுரர்களையும் தென்றிசையில் விளங்கும் தியாகராஜனென்னும் ஒரு தேவர் பலவித உபாயங்களினால் ஸம்ஹாரம்செய்து விட்டார். இந்த அசுரத் தலைவர்கள் மாய்ந்தபிறகு துணைப்பலமற்ற எங்களை அற்ப அரசர்களும் முனிவர்களும் மனிதர்களும் ஏசும் சமயம் வந்துவிட்டது. கூட்டம் கூட்டமாக அசுரரும் அரக்கரும் அழிந்து போகவே பூவுலகமெங்கும் அசுரபயமில்லாமல் கொழுப்படைந்து விளங்குகிறது. இவ்விஷயங்களை யெல்லாம் உமக்கு அறிவித்தோம். நெடுங்காலம் தவம்புரிந்து ஒப்பற்ற வரத்தினால் சிறந்த பராக்கிரமத்தை அடைந்த நீர் எங்களைக் காப்பதுடன் உலகத்தில் நமது வம்சம் வளர்ந்தோங்குமாறு பரிபாலனம் செய்வீராக" என்று முறை

யிட்டனர். அதனுல் அவ்வசுர வீரன் கடுஞ்சினமடைந்து அவர்களில் எழுவரைத் துணையாகக்கொண்டு அந்த நிமிஷ முதல் வேதியர்களுக்கும், ரிஷிகளுக்கும், தேவர்களுக்கும் தீங்கு செய்தலையே விரதமாகக் கொண்டான். ஒப்பற்ற வர பலத்தினுலும் மாயா விசேஷத்தினுலும் அவ்வசுர வீரன் பற்பல வடிவங்களை எடுத்துக்கொண்டு ஜீவராசிகளுக்குத் துன்பம்செய்து காலன்போல் உலகை அழித்துவந்தான்.

அவ்வசுரன் சிலசமயங்களில் சிறந்த யானைபோலும், குதிரைபோலும், மான்போலும், மாயையினுல் உருவமெடுத்துக்கொண்டு அரசர்களை விலைக்கு வாங்கச்செய்து தக்க சமயத்தில் மாயையினுல் அவ்வரசர்களை மாய்த்து அரண்மனையிலுள்ள மாதர்களைப் பங்கப் படுத்திப் பொருளையழித்துப் பாழாக்கி வந்தான். சிலசமயங்களில் சிறந்த கனியின் உருவம்கொண்டு வேதியரிடமும், ரிஷிகளிடமும் சென்று அவைகளை வாங்கச் செய்து அவர்கள் அக்கனிகளைப் புசித்தவுடனே அவர்களின் வயிற்றைப் பிளந்து வெளியேவந்து அவர்களைக்கண்டு 'மாண்டு போனீர்களா' என்று நகைப்பான்.

யுக்திகல்பாசுரனும் அவன் துணைவீரரும் இவ்வாறு மாயா பலத்தினுல் ரிஷிகள்போலவும், தேவர்கள்போலவும், திரிமூர்த்திகள்போலவும், இந்திரன்போலவும், வேதியர்போலவும், க்ஷத்திரியர்போலவும், வைசியர்போலவும், சூத்திரர்போலவும், இடையர்போலவும், வேடர்போலவும் உருவெடுத்துப் பலவித மாயையினுல் எதிரே தோன்றும் ஜீவராசிகளின் உயிரைப் போக்கி மாமிசத்தைத் திக்குகளில் வீசியெறிந்து பறவைகளுக்கு விருந்தளிப்பார்கள்.

"இவ்விதமான கொடுந்தொழிலை நாடோறும் செய்து வரும் அவ்வசுரர்களை அழிக்க வல்லவராக யார் உதிக்கப் போகிறுர்களோ" என்று ஜனங்களெல்லோரும் ஹா ஹா

வென்று அழுது புலம்புகையில் தியாகேசர் ஒருநாள் ஒரு வேதியர் உருவத்தையடைந்து அவ்வசுரர்கள் தாவியுலாவும் நர்மதை நதியின் கரைக்குச் சென்றார். அவரைக்கண்ட அவ்வசுரராஜன் "ஓ வேதியரே! நீர் எங்கே செல்லுகிறீர்!" என்று கேட்க அவர் "ஓ! அசுர ராஜனே! நான் காசிக்குப் போகிறேன். வழிநடையினால் உண்டான களைப்பைத் தணித்துக்கொண்டு போகலாமென்று உன்னிடம் வந்தேன். சாப்பிடுவதற்கு ஏதேனும் உணவுப்பொருளை அளித்தால் நலமாயிருக்கும்" என்று உரைத்தார். அவ்வசுரன் உடனே மிக்க மகிழ்ச்சியுடன் உள்ளேசென்று தன்னுடன் துணையாக வந்த அசுரர்களுள் ஒருவனை மாம்பழ உருவம் எடுக்கச்செய்து அக்கனியைக் கையில் எடுத்துக்கொண்டு வெளியேவந்து வேதியருக்கு அர்க்கியம் பாத்தியம் முதலிய உபசாரங்களைச்செய்து அக்கனியை அவருக்களித்துப் புசிக்கச்சொன்னான். பரஞ்ஜோதியாகிய வேதியர் அதைக் கையில் வாங்கி ஜலத்தினால் தெளித்து ஒரு மந்திரத்தைச் சொல்லிக்கொண்டே புசித்துவிட்டார். சில நிமிஷங்களுக்கெல்லாம் வழக்கம்போல் அவரது உடலைப் பிளந்துகொண்டு அவ்வசுரன் வருவானென்று யுக்திகல்பாசுரன் எதிர்பார்த்திருந்தான். அரைமுகூர்த்தம் ஒரு முகூர்த்தம்வரையில் அவன் வெளிவராமையால் யுக்திகல்பாசுரன் வியப்புற்றிருக்கையில் வேதியர் "எனக்கு இன்னும் பசி அடங்கவில்லை; பசி அதிகமாயிருக்கிறது. இன்னுமொரு மாம்பழத்தை யளிப்பாய்" என்று கேட்டார். அசுரராஜன் துக்கத்தையும், ஆச்சரியத்தையும், மனக்கலக்கத்தையும் அடைந்து பெருமூச்சுடன் உள்ளேசென்று வேறோர் அசுரனை ஒரு பலாப்பழம்போல உருவெடுக்கச் சொல்லி அக்கனியை வேதியருக்களித்தான். அதையும் வேதியர் பக்ஷித்துவிட்டு "இன்னும் பசி தீரவில்லை. வேறெவ்வித பழத்தையாவது அளிப்பாய்" என்று கேட்கவே அசுரராஜன் கடுஞ்சினங்கொண்டு தனக்குத் துணையாகவந்த மற்ற அசுரர்களையும்

கனியுருவாக்கி வேதியருக்கு அளித்து நின்றான். எல்லாவற்றையும் வேதியர் புசித்துவிட்டு "திருப்தியாயிற்று. போதும்" என்று உரைத்தனர். உடனே அசுர மன்னன் வேதியரை அழிக்கும்வண்ணம் பலவித சங்கேதங்களினால் அவ்வேழு அசுரர்களையும் எழுப்பினான். அவர்கள் அனைவரும் வேதியர் வயிற்றில் ஜீரணமாகி விட்டபடியால் வெளியே வரவில்லை. அதனால் அடங்காக் கோபமடைந்த அசுரராஜன் அவ்வந்தணரை மாய்க்கக் கருதி நாலைந்துநாள் வரையில் தன் இருப்பிடத்திலேயே வைத்திருந்தான். அவ்வேழு அசுரர்களுள் ஒருவரும் வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியே வாராமையால் அவ்வேதியரே ஏதோ சூதுசெய்திருக்க வேண்டுமென்று நினைத்து அவர்மீது ஒரே பாய்ச்சலாய் அசுரராஜன் பாய்ந்து ஒரு குத்தினால் அவரைக் கீழே தள்ளிக் கொன்று அக்கினியில் அவரது சரீரத்தைக் கொளுத்திச் சாம்பலையெல்லாம் திரட்டிச்சேர்த்து நன்றாகப் பொடிசெய்து தண்ணீரில் கலந்து கலக்கிக் குடித்துவிட்டு "இந்தத் துஷ்ட வேதியன் இனி எழுந்திருக்கமாட்டான்" என்று சந்தோஷத்துடன் கர்ஜனை செய்தான். அப்போது பரம்பொருளாகிய அவ்வேதியர் சேற்றுநீராகித் தண்ணீருடன் கலந்தபோதிலும் அவ்வசுரன் வயிற்றை இருபிளவாகக் கிழித்துக்கொண்டு வெளியே கிளம்பி மறைந்துவிட்டனர். அசுரராஜன் இவ்வாறு மாய்ந்துவிட்டதைக் கண்டு தேவர்கள் மலர்மாரி சொரிந்தார்கள். அவ்வெட்டு அசுரர்களும் மாயவே அவர்களின் மாயையும் அழிந்துவிட்டது. வேதியரும், ரிஷிகளும், மன்னவரும் பயமில்லாமல் தியாகராஜனைத் துதித்துக்கொண்டு வெகு சிறப்புடன் வாழ்ந்தார்கள்.

இந்த லீலையைக் கேட்பதால் பரமேசுவரனுடைய அளவற்ற சக்தியும் அவருக்கு ஜனங்கள்மீதுள்ள கருணையும் நன்றாக விளங்கும்.



## 33. ஸஞ்சீவி வித்யையை க்ஷணகாலமளித்த லீலை.

முன் ஒருகாலத்தில் திருவாரூர் நகரத்தை நந்திசோழ மஹாராஜன் மனுநீதி வழுவாமல் பரிபாலித்து வந்தான். அவன் ஸ்ரீ தியாகராஜருடைய பாதாரவிந்தங்களை எப்பொழுதும் தியானித்து அதில் மிகவும் ஈடுபட்டிருந்தான். அந்த சமயம் கிரிஸாரன் என்னும் ராக்ஷஸன் பல இடங்களில் பிராணிகளுக்குத் துன்பம் விளைவித்துக் கொண்டிருந்தான். ஒருநாள் அவன் திருவாரூரில் ஒரு வேதியருடைய வீட்டில் அவருடைய பெண்ணுக்கு விவாஹம் நடந்துகொண்டிருக்கையில் ஆகாயமார்க்கமாக அந்த வேதியருடைய வீட்டிற்குவந்து அப்பெண்ணைத் தனக்கு விவாஹம் செய்துகொடுக்க வேண்டுமென்று அவ்வேதியரைக் கேட்டான். அதற்கு அவ்வேதியர் "ராக்ஷஸ ஜாதியில் பிறந்த உனக்கு என் பெண்ணைக் கனவிலும் கொடுக்கமாட்டேன்" என்று மறுத்துவிட்டார். அப்பெண்ணிடம் அதிக ஆசைகொண்ட அவ்வரக்கன் அப்பெண்ணின் அருகில் சென்று தன்னை மணந்துகொள்ளும்படி பலவாறு வேண்டினான். அப்பெண்ணும் அவன் வேண்டுகோளுக்கு இணங்காமற்போகவே அவ்வரக்கன் கடுஞ்சினங்கொண்டு அவ் விவாஹம் முடிவதற்குள் அப்பெண்ணின் கணவனை பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டு போய்விட்டான். அதனால் அவ்வீட்டில் எல்லோரும் அப்பெண்ணின் கணவனை நினைத்துக் கதறிப் புலம்பினார்கள். பிறகு நந்திசோழவர்ம மஹாராஜனிடம் போய் ஆதியோடந்தமாக எல்லா விருத்தாந்தங்களையும் கூறி முறையிட்டார்கள். தன் பெண்ணின் கணவனை மீட்டுக்கொடுக்கும்படி வேண்டிக்கொண்டார்கள்.

இதனைக் கேள்வியுற்ற சோழமகாராஜன் மிக்க வருத்தமுற்றான். அப்போது ஓர் இடையன் மன்னனுக்கெதிரே வந்து அவனை வணங்கி "மஹாராஜா, என் கண்கள்போல்

அருமையாக வளர்த்துவந்த என் ஐந்து கபிலைப் பசுக்களையும் அவை மேய்கையில் சில அரக்கர்கள் கொன்றுவிட்டார்கள். இந்த அநியாயத்துக்கு இடங்கொடுக்கலாமா?" என்று முறையிட்டான். அதே சமயம் ஒரு கிழவி ஓடிவந்து "மஹாராஜனே! சில விநாடிகளுக்குமுன் என் வீட்டிற்கு அரக்கர் சிலர் வந்து சிங்கநாதம் செய்து நடக்கையில் அவர்கள் குரலைக் கேட்டுப் பயந்த இப்பாலகனுக்கு இன்னும் மூர்ச்சை தெளியவில்லையே! என் செய்வேன்! நீரே கதி" என்று அழுதாள். ஒரே நாளில் தன் நகரில் அரக்கரால் இவ்வாறு நேரிட்ட துன்பங்களை நந்திசோழ மஹாராஜன் அறிந்து மிக்க துக்கமடைந்து ராஜ்யபாரத்தையும் செங்கோலையும் மந்திரிகளிடம் ஒப்புவித்துவிட்டுக் காடுசென்று ஓர் ஏகாந்தமான இடத்தில் அரிய தவம்செய்ய ஆரம்பித்தான்.

அரக்கர்களால் அடிக்கடி ஜீவராசிகளுக்கு உண்டாகும் வதையை நீக்கத் தான் ஸஞ்சீவி வித்தையை அறிந்துகொண்டால் பிராணிகளை மறுபடியும் சுலபமாகப் பிழைப்பிக்கலாமென்று எண்ணினன்.

ஆதலால் பரமேசன் ஸஞ்சீவி வித்தையைத் தனக்கு உபதேசிக்கும் வரையில் பஞ்சாக்கினி மத்தியில் நிலைபாக இருந்து கடுந்தவம் செய்வதென்று நந்திசோழன் உறுதி கொண்டு காட்டில் ஐஞ்சுடரின் நடுவில் தவம் புரியலானன். மகரிஷிகளும் தேவர்களும் செய்யக்கூடிய கொடிய தவத்தை மன்னவன் செய்யத் துணிந்ததைக் கண்ட வானவரும் தானவரும் மண்ணவரும் வியப்புற்றனர்.

உணவின்றி நீட்டிய கையுடன் பகலோனிடத்தில் கண்களை உயர்த்திக்கொண்டு கொடிய மழையையும் வெய்யிலையும் காற்றின் வேகத்தையும் பொறுத்து முப்பத்திரண்டு வருஷ காலம்வரையில் பரமேசனது பாத கமலத்தில் மனத்தைப்

பதித்து அம்மன்னவன் தவம் புரிந்தும் பரமேசுவரன் பிரத்தியக்ஷமாகவில்லை. அதனால் அரசன் அளவற்ற துயரத்தையடைந்தான். மறுபடி இரண்டு வருஷகாலம் ஏகபாதத்தோடு சுவாசத்தை அடக்கிக்கொண்டு கடினமான தவம் புரிந்தான். அப்போதும் கைலாசபதி தோன்றவில்லை. அதனால் மிக்க கவலையுற்று மன்னவன் "தான் செய்யும் தவத்தில் ஏதேனும் குற்றமிருக்கும். அதனாலேதான் கடவுள் பிரசன்னமாகவில்லைபோலும். என்ன காரணத்தால் குறைவோ அதுவும் தெரியவில்லையே! யோகம் செய்தும் பரமேசனைக் காணாமல் வீணே திரும்புவதைவிடத் தன் ஆன்மாவையே மாய்த்துவிடுவது நலமென்று கருதினான். பிறகு அம்மன்னவன் அக்கினி குண்டத்தில் தீயை வளர்த்து அதில் தன் உடலை ஆகுதி செய்வதாக நிர்ணயஞ் செய்துகொண்டு கண்களை மூடி "தியாக ப்ரபோ!" என்று சொல்லித் தீயிலே குதித்தான். அத்தருணம் தயாபரனாகிய தியாகராஜன் அரசன்முன் தோன்றி "நந்திசோழா! நீ செய்த அருந்தவத்தினால் எனக்கு மிக்க மகிழ்ச்சியுண்டாயிற்று. பூவுலகத்தில் ஸஞ்சீவி வித்தையை நீ அடைய விரும்புவது தகாத காரியம். வெகு சீக்கிரத்தில் கலியின் கொடிய காரியங்கள் உலகத்தில் பரவும். ஆதலால் சஞ்சீவி என்னும் தேவ வித்தையை உலகில் நீ பரவச்செய்ய எண்ணுவது தகாது. அதனாலேயே நான் உடனே தோன்றவில்லை. நீ இவ்வளவுகாலம் வரையில் கரணங்களை அடக்கி அருந்தவம் செய்து ஸஞ்சீவி வித்தையை அடைய விரும்பினபடியால் உனது மனத்தில் அவ்வித்தை க்ஷணகாலம் வரையில் விளங்கும். நமது அருளால் ஜீவராசிகளுக்கு இனி நன்மையே உண்டாகும். கொடிய அசுரரும், அரக்கரும் மாயும்படி நான் சங்கற்பம் செய்துவிட்டேன். ஜீவராசிகளின் க்ஷேமத்தைப்பற்றி நீ சிந்திக்கவேண்டாம்" என்று கூறிப் பரமசிவன் ஒரு மனித உருவத்துடன் மன்னனுக்கெதிரில் வந்து அவனது வலக்காதில் அந்த ஸஞ்சீவி வித்தையின் பீஜாக்ஷரத்தை உப

தேசித்துக் கைகளால் அவனைத் தடவிக்கொடுத்துவிட்டு மறைந்தனர். சோழமன்னன் பரமேசனுடைய கர ஸ்பரிசத்தால் மயிர்க் கூச்சலையடைந்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்து தியாகராஜனே தனது தெய்வமென்று நாமகீர்த்தனம் செய்து கொண்டு தன் நகருக்கு வந்து ஜனங்களால் கொண்டாடப் பட்டு உலகையாண்டு விளங்கினன்.

வேதியனுடைய பெண்ணின் மணாளன் முதலியவர்கள் துன்பத்தினின்றும் நீங்கிச் சுகமாக வாழ்ந்தார்கள்.

இந்த அற்புத லீலையைக் கேட்பவரைப் பசி, மூப்பு, பிணி, பிறவி இவை நெருங்கா. தியாகேசனுடைய கருணைக்கு அவர் கள் இலக்காவர்.

பொன்னு மெய்ப் பொருளுந் தருவானை
  போகமுந் திருவும் புணர்ப்பானை
பின்னை யென் பிழையைப் பொறுப்பானை
  பிழை யெலாந் தவிரப் பணிப்பானை
இன்ன தன்மையன் என்றறி யொண்ணு
  எம்மானை எளிவந்த பிரானை
அன்னம் வைகும் வயல் பழனத்
  தணியாநுரானை மறக்கலு மாமே.



## 34. புண்ணியத்தை அளித்தவனுக்குப் பதவிகொடுத்த லீலை.

வேத வேதாந்தங்களை ஓதுகிறவர்களும், தருமத்தில் விருப்பமுள்ளவர்களும், ஐம்புலன்களை அடக்கியவர்களும், வீணான காரியங்களைச் செய்யாதவர்களும், சத்தியத்தையே துணையாக உடையவர்களும், திருவாரூரில் விளங்கினார்கள். அங்கே அக்கினியை வளர்த்து ஹோமம் செய்துவரும் வேதியர்கள் தொழும் தியாகராஜன் அருளினால் பூலோக ஜனங்கள் யாவரும் நெடுநாள் வரையில் அசுர அரக்கர்களின் பயமற்றும் மனோரதங்கள் குறைவற நிறைவேறியும் வாழ்ந்தனர்.

அப்போது திருவாரூரில் சுருதசர்மா வென்னும் அந்தணரொருவர் இருந்தார். அவர் காலமுறை தவறாமல் நித்ய கர்மானுஷ்டானங்களைச் செய்து வருபவர். கைலாசம், கேதாரம், காசி முதலிய புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று லிங்க மூர்த்திகளைத் தரிசித்தும், கங்கை, காவேரி முதலிய புண்ணிய நதிகளில் நீராடியும், சியவனர், துர்வாசர், வியாஸர் முதலிய மகரிஷிகளின் ஆச்சிரமங்கள் சென்று ரிஷிகளுக்குப் பணிவிடை செய்து அவர்களுடைய பயனுள்ள ஆசிகளைப்பெற்றுப் பூவுலகை மும்முறை வலம்வந்து திரும்பித் தியாகேசருடைய சரண கமலங்களைச் சென்னிக்குத் திலகமாகக் கொண்டவர்.

அந்த மகா புண்ணியவானாகிய வேதியர் ஒருநாள் சிதம்பரத்திலுள்ள கனகசபையில் விளங்கும் பரம்பொருளை வந்தனம் செய்து திருவாரூருக்குத் திரும்பி வந்தார். அப்போது வழியில் ஓர் அழுகைக்குரல் அவர் காதில் விழுந்தது. நான்கு திசைகளிலும் திரும்பிப்பார்த்தார். ஒன்றும் புலப்படவில்லை. ஒரு நொடிப்பொழுது அசைவற்று நின்றார். சிறிதுநேரமான பின் மறுபடியும் அந்த அழுகுரல் கேட்டது. அந்தத்தொனி

உண்டான வழியே மேற்கு நோக்கிச் செல்லுகையில் அங்கே அவர் ஒரு குளத்தையும் அதன் கரையில் ஒரு பர்ணசாலையை யும் அந்த ஆச்சிரமத்தின் எதிரே மரணமடைந்து பூமியில் விழுந்திருக்கும் ஒரு பாலகனுக்காகப் புலம்பிக்கொண்டிருக்கும் அந்தகரான ஓர் அந்தணரையும் அவருடைய தரும பத்தினி யையும் கண்டார். சுருதசர்மா மிக விரைவாக அவர்களருகே சென்று "அந்தணோத்தமரே! எதற்காக நீர் இப்போது விசனப்படுகிறீர்? என்னிடம் சொன்னால் என்னால் முடிந்ததை செய்கிறேன்" என்று உரைக்கவே அவ்வேதியர் "புருஷ சிரேஷ்டரே! பூர்வ ஜன்ம பாவத்தினால் பிறவிக்குருடனாகப் பிறந்த என் கிரகஸ்தாச்சிரம தருமத்தை நிறைவேற்ற என் னிடம் அக்கினியை முன்னிட்டுவந்த இம்மாதின் வயிற்றில் அக்கினி கல்பனென்னும் இச்சிறுவன் தோன்றினன். மகா பாவிகளாகிய எங்கள் கட்டளையினால் இன்று காலையில் இவன் பூஜைக்குப் புஷ்பம் பறிக்கச்சென்ற இடத்தில் அசுர மாயையி னாலோ, அரக்கர் மாயையினாலோ, எங்கள் பாவத்தினாலோ உயிரற்றவனாகத் தோன்றுகிறான். இப்பாலகனை இழந்த நாங்கள் இவ்வித மூப்புள்ள காலத்தில் எப்படி ஜீவிப்போம்! இதுவரை காலந்தவறாமல் நடத்திவந்த என் லிங்க பூஜை இன்றோடு நின்றதே என்று நாங்கள் எண்ணவேண்டியிருக் கிறது" என்று கூறினார். சுருதசர்மா அவரை நோக்கி "மகாபுருஷனே! நீர் கவலைப்படவேண்டாம். என் வயதை யாவது, புண்ணியத்தையாவது கொடுத்து உமது பாலனுடைய உயிரை மீட்டும் அளிக்கச் செய்கிறேன். இன்னும் ஒரு முகூர்த்த காலத்துக்குள் உம்முடைய புத்திரன் முன்போல் பேசி உபகாரங்களைச் செய்வான். பார்ப்பீர்" என்று அவ ருக்குத் தைரியம் சொல்லி அக்குளத்தில் நீராடி விபூதி ருத்தி ராக்ஷங்களை அணிந்து தன் முடிமேல் கைகூப்பி வைத்துக் கொண்டு தென்திசை நோக்கி "ஓ, யமதர்மராஜனே, அஷ்ட திக்பாலகர்களும், சூரியனும், சந்திரனும், பஞ்ச பூதங்களும்,

சற்குருவும், தியாகர்ராஜனும் சத்தியமாயிருந்தால் இவர்களிடம் நான் வைத்த பக்தி உண்மையாயிருக்குமாயின் என் புண்ணியத்துக்குப் பலனாக இவ்வேதியர் மைந்தனுக்கு உயிரையளிப்பாய். ஓ யமதர்மராஜனே! என் புண்ணியத்தை உமது கையில் அளித்துவிட்டேன். இப்புண்ணியத்துக்குப் பதிலாக இவ்வந்தணர் மைந்தனுக்கு உயிரை அளிப்பாய். கங்கா ஜலத்தினால் கைலாசபதிக்கு நான் அபிஷேகம் செய்தது சத்தியமாயின் என் புண்ணியத்துக்குப் பலனாக இவ்வேதிய மைந்தனுக்கு உயிரையளிப்பாய்" என்று இவ்வாறு சொல்லிக் கதறினார். யமதர்மராஜன் அவ்வேதியருடைய வேண்டுகோளைச் சிறிதும் கவனிக்கவில்லை. அதனால் வேதியர் கோபங்கொண்டார். "ஓ யமப் பிரபோ, என் பேச்சை நீ அங்கீகரிக்க வேண்டும். அந்தப் பாலகனுடைய உயிரை விட்டுவிட்டு இப்போதே என் பிராணனைக் கைப்பற்றுவாய்" என்றார். அந்த வசனத்தையும் தர்மராஜன் கவனிக்கவில்லை. அப்போது பரோபகாரத்துக்காகத் துணிந்து தமது புண்ணியத்தையும் உயிரையும் அளிக்க விரும்பிய சுருதசர்மாவுக்கு அடங்காக் கோபம் உண்டாயிற்று.

அதனால் அவர் திக்பாலகரையும், சூரியனையும், சந்திரனையும் பஞ்ச பூதங்களையும், தியாகராஜ பிரபுவையும் நமஸ்காரம் செய்து தாம் சம்பாதித்திருக்கும் நிகரற்ற புண்ணியத்தினால் மற்றொரு யமதர்மராஜனை உண்டாக்கி அவன் மூலம் அப்பாலகனுடைய உயிரை மீட்கக்கடவேனென்று சிற்சில மகா மந்திரங்களை உச்சரித்தார். உடனே இந்திரன் முதலிய தேவர்களுக்கும் யமதர்மராஜனுக்கும் நடுக்கம் உண்டாயிற்று. அப்பொழுதே அவர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து தியாகேசனது சந்நிதானத்தை நாடி வணங்கித் துதித்து நின்றனர். அப்போது தியாகராஜர் அவ்வேதியருக்கு ஆகாயவாணியாக "நமது தொண்டர்களில் சிறந்த வேதியரே! உமது நல்ல சிந்தையைப்பற்றி மகிழ்கிறோம். நீர் கோபத்தை அடைய

வேண்டாம். உமது புண்ணியத்தினல் நீர் மற்றொரு யமனை யும் சிருஷ்டிக்க வல்லவரென்பதை நாமும் அறிவோம். அத் தேவர்களும் அறிவார்கள். இப்போது மாத்திரம் உமது புண்ணியத்தின் பயனாக அவ் வேதியன் மைந்தனுக்கு உயிரை யளித்தோம். இனி உம்மைப்போன்ற யாரும் இவ்வித முயற்சி செய்யக்கூடாது. திக்பாலகரின் அதிகாரத்தையும் பதவியையும் பாதுகாப்பது ஒரு கடமையாகும். ஆதலால் உம் புண்ணியத்தின் பயனாக அப்பாலகனுக்கு உயிரை அளித் தோம். இவ்வளவு நற்சிந்தையுள்ள உமக்கும் நமது பதவியை அளித்தோம்" என்று கட்டளையிடவே, சுருதசர்மா, தேவர் கள் கொணர்ந்த விமானத்தில் ஏறிச்சென்று பசுபதியின் ஐக்கிய செல்வத்தை அடைந்தார். அவ்வந்தக வேதியரின் குமாரன் தூங்கியெழுந்தவன் போல் எழுந்து பிதாவைப் பணிந்து முன்போல் பணிவிடைசெய்து வரலானன். இவ் வதிசயத்தைக் கண்ட எல்லோரும் ஆனந்தமடைந்து ஈசனைத் துதிசெய்தார்கள்.

சித்தம் தெளிவீர் காள்
அத்தன் ஆநரை
பக்தி மலர் தூவ
முக்தி யாகு மே.

## 35. தீயைப் பூவாக்கிய லீலை.

க்ஷேத்திரங்களுக்கெல்லாம் திலகம்போல் விளங்குவது திருவாரூர். அந்நகரிலே சிருதகீர்த்தி என்னும் மறையவர் ஒருவர் இருந்தார். அவர் நித்திய கர்மானுஷ்டானங்களிலும் அதிதி பூஜை, தேவ பூஜை, பித்ரு பூஜை முதலிய காரியங்களிலும் மிக்க ஊக்கமுள்ளவர். தியாகேசனது திருமேனியைக்கண்டு போற்றாமல் அவர் ஒருபொழுதும் உணவை அருந்தார். காசி நகரமும், விசாலா நகரமும், கேதாரமும், திருவாரூருக்கு நிகராகா என்றும் கங்கையும் கமலாலயத்துக்கு ஒப்பாகாதென்றும் புகழ்ந்துகொண்டே அவர் ஆனந்த பரவசராய் வீதிகளில் நர்த்தனத்துடன் தியாகேசனுடைய குணங்களைக் கீர்த்தனமாகப் பாடுவார். இவ்வாறு அவர் தம்வாழ்நாட்களைப் பரமேசனைப் பக்திபண்ணுவதிலேயே கழித்தார்.

ஒருசமயம் ஆருத்திரா தினத்தில் மங்கள நாயகியையும் அரவாபரணனையும் பணிந்து ஆன்மாவுக்கு நற்கதியை உண்டுபண்ணிக்கொள்ள எண்ணி அநேக வேதியரும், மகரிஷிகளும், வானவர்களும் திருவாரூருக்கு வந்து கூடினர். காலையில் கதிரவன் தோன்றும் முன்னரே கோடிக்கணக்கான பக்தர் குழாங்கள் ஹம்ஸ தீர்த்தத்திலும் கமல தீர்த்தத்திலும் ஸ்நானம் செய்து விபூதி ருத்திராக்ஷங்களால் பஞ்சபூத சரீரத்தைக் குற்றமற்றதாய்ச் செய்துகொண்டு தூயமனமுடையராகிக் கூப்பிய கையுடன் தேவாலயத்தை அடைந்து அங்கே வேதிகையில் விளங்கும் தியாகராஜ மூர்த்தியை வணங்கி வேதகானங்களாலும் துதிகளாலும் எண்டிசையையும் முழங்கச் செய்தார்கள். அச்சமயம் சிருதகீர்த்தியும் பரமேசனைத் தரிசித்து ஜன்மப் பயனை அடைந்து தம் வீடுசேர்ந்து தம் பத்தினியுடன் ஆலோசனைசெய்து புண்ணிய காலத்தில் ஈசனைப் பணிய வந்திருப்பவர்களுள் சில மகரிஷிகளுக்கும் சில

வேதியர்களுக்கும் தம் ஜாகையில் அன்னமளிக்க நிச்சயித்து அதற்கு வேண்டிய திரவியங்களை யெல்லாம் சேர்த்துவந்து அமுதுவர்க்கங்களைச் சமையல்செய்து சித்தப்படுத்திய பிறகு லிங்கமூர்த்தியின் பூஜையை முடித்துவிட்டு அமுதுண்ணும் தவசிகளையும் வேதியரையும் அழைத்துவருவதாக ஆலயம் சென்றார். அங்கே விளங்கிய சில வேதியர்களையும் கமலாலயக் கரையில் ஜபங்களை முடித்திருக்கும் சில ரிஷிகளையும் பணிந்து கைகூப்பித் தமது கிருகத்துக்கு வந்து உணவையருந்தி நன்மையை அளிக்க வேண்டுமென்று விநயத்துடன் வேண்டினார். இவ்வாறு சிருதகீர்த்தி அழைப்பதைக்கண்டு அவர்களும் அதற்கிசைந்து அவர் வீட்டுக்கு உணவருந்த வந்தார்கள்.

உடனே வேதியர் தம் புத்திரனைக் கொண்டும் தாமுமாக அம்மகரிஷிகளுக்கும் அந்தணர்களுக்கும் பாததீர்த்தம் முதலிய உபசாரங்களை முறைப்படி செய்து பூஜித்து ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்தார். பிறகு இலைகளை அவர்கள் எதிரிலே பரப்பி அவர்களுக்காகப் பக்ஷியம், போஜ்யம், காத்தியம், அன்னம் முதலியவற்றை எடுத்துவரச் சிருதகீர்த்தியும் அவர்பத்தினியும் சமையலறைக்குள் செல்லவே ஓர் அரக்கனுடைய மாயையினால் சமையற்கூடத்தில் சமைக்கப்பட்ட உணவுப்பொருள்கள் யாவும் மாமிசங்களாகக் காணப்பட்டன. தயிர், நெய், பால், பாயசம் முதலிய யாவும் கள் நிறைந்த பாத்திரங்களாகத் தோற்றின. அப்போது அவ்வந்தணரும் அவர் மனைவியும் "ஐயோ நாம் என்ன செய்வோம்! நிகரற்ற முனிவர்களும் பிராமணோத் தமர்களும் உண்ணும்பொருட்டுக் காத்திருக்கிறார்களே! நாம் மிக்க பக்தியுடன் சமைத்துவைத்த பண்டங்கள் தியாகராஜன் பாத சாட்சியாக எல்லாம் இவ்விதம் மாம்சங்களாகவும் கள்ளாகவும் காணப்படுகின்றனவே! இப்போது நாம் என்ன செய்வோம்? நமக்கு யார் கதி? திக்குப்பாலகர்களும் பூமியும் ஆகாயமும் மும்மூர்த்திகளும் இதற்குச் சாட்சி. நமது

ஜன்மம் இன்றோடு பாழாயிற்று. தொலையாப் பழியும் நமக்கு வந்துவிட்டது. இந்த மகரிஷிகளின் சாபமும் நமக்கு நேரிடும். நாம் அளவற்ற காலம்வரையில் நரகக் குழியில் கொடிய வேதனை அனுபவித்தாலும் இப்பாவம் நீங்காது. ஐயோ! நாம் என்ன செய்வோம், ஒன்றும் தெரியவில்லையே. ஈசனே கதி" என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருந்தனர். அதையும் சமையல் கட்டிலிருந்து வீசும் துர்நாற்றத்தையும் அறிந்த ரிஷிகளும் வேதியரும் திடீரென்று எழுந்து போய் விட்டார்கள். சில ரிஷிகள் "இந்த வேதியர் இவ்வாறு செய்யமாட்டாரே" என்று உரைத்தார்கள். வேறுசிலர் என்னமாயமோ என்று கூறினார்கள். அப்போது அந்த அந்தண தம்பதிகள் அபகீர்த்தியுடன் இவ்வுலகத்தில் வாழ்வதைக் காட்டிலும் உயிரை விடுவதே நலமென்று கருதி ஒரு குண்டத்தில் அக்கினியை வளர்த்தி அத்தீயில் சிருதகீர்த்தி முதலிற்குதித்தார். தம் பதி இறந்த பிறகு அபகீர்த்தியை யடைந்த தான்மட்டும் பூமியில் வாழ்வதில் என்ன பயனென்று எண்ணி அவர் பத்தினியும் அத்தீயிலே குதித்துவிட்டாள். தாயும் தந்தையும் அபகீர்த்திக்குப் பயந்து இறந்தபின் தான்மட்டும் எதற்காக வாழவேண்டுமென்று அவர்கள் புதல்வனும் அக்கினி குண்டத்திற் குதித்துவிட்டான். அரக்கனுடைய மாயையை அறிந்து கொள்ளமுடியாமல் வீண் பழிக்கு அஞ்சி அம்மூவரும் அக்கினியிற் குதிக்கையில் பக்த ரக்ஷணத்துக்காக விழித்திருக்கும் தியாகராஜர் அந்த அக்கினியைப் பூவாகும்படி நினைத்தார். நினைத்த மாத்திரத்திலேயே தீயின் ஜ்வாலை நிறைந்த அக்கினி குண்டம் மலர்கள் நிறைந்த குண்டமாக மாறி விளங்கியது. அம்மூவரும் ஒருசிறிதும் வருத்தமுமில்லாமல் எழுந்து வெளியே வந்து இது என்ன ஆச்சரியம்! என்று திகைத்து நின்றனர். இவ்வதிசயத்தைக் கண்ட வேதியரும் ரிஷிகளும் "இவ்வந்தணரின் பெருமை ஒப்பற்றது. இவர்கள் நமக்கு மாமிசத்தைச் சமைத்திருப்பார்களானால் இவ்வக்கினியால்

இவர்கள் மாண்டிருப்பார்களே" என்று பேசிக்கொண்டனர். அப்போது ஒரு மகரிஷி தம் ஞானக்கண்ணால் மாம்சக் காட்சி ராக்ஷஸ மாயையென்று அறிந்து கூறினர். அப்போது எல்லோரும் சிருதகீர்த்தியின் நல்லெண்ணத்தைப்பற்றிப் பலவாறு புகழ்ந்தார்கள். பிறகு அந்தணர் தம்பதிகள் சமையலறையையும் வீட்டையும் நன்றாகச் சுத்திசெய்து மறுபடியும் சுத்தமான பொருள்களை வருவித்துச் சமையல்செய்து எல்லோருக்கும் விருந்தளித்து அதிதி பூஜை செய்த மேன்மையுடன் விளங்கினார்கள்.

"கார் பொருவும் கருங்கூந்தல் செவ்வாய்
வெண்ணகை பச்சைக் கன்னியோடும்
தார் கமழ்பூங் காந்தளந் தோட் குமரனோடும்
மணிச் சிங்காதனத்தின் மேவி
சீர் பரவு வான் புலவர் நினைந்தன யாவையும்
சிறப்பின் நல்கும்
வார் புனல் சூழ் வயற் கமலைத் தேவர்கள்
சிந்தாமணியை மனத்துள் வைப்பாம்."



## 36. இலிங்கத்துடன் தண்ணீரில் இறங்கியவரை காத்த லீலை.

ஸ்ரீ தியாகேசனுடைய ஆச்சரியமான லீலைகள் உலகிலே பரவியபொழுது எட்டுத் திசைகளிலுமுள்ள பக்த ஜனங்கள் யாவரும் ஈசனைத் தரிசிக்க ஆவல்கொண்டு திருவாரூர் வந்து ஈசனை வணங்கி நகரத்தின் அழகையும் பரமேசனுடைய வைபவங்களையும் கண்டு வியப்புடன் தம்மிடம் திரும்புவார்கள்.

அவ்வித பக்தர்களில் சிவயோகியாரென்பவர் ஒருவர் அரச குலத்தில் அசுராம்சமாய்ப் பிறந்த சில துஷ்டர்கள் ஈசனைத் தரிசிக்க வரும் ஒவ்வொருவரையும் நடுவழியில் மறித்து 'நீ திருவாரூர் சென்று ஈசனைக் கண்டாயே! என்ன பயனையடைந்தாய்' என்று வீண் வழக்கிட்டு வம்புபேசி அவர்களுடைய மனத்தைப் புண்படுத்துவதுபோல் ஒருநாள் சிவயோகியாரையும் வழிமறித்துக் கேட்க அவர் ஈசுவரனுடைய மகிமையை எடுத்துரைத்தார். ஆனால் அந்தத் துஷ்ட அரச குமாரர்களுடைய மனத்தில் ஈசுவரத் தத்துவம் சிறிதும் விளங்கவில்லை. கோபமே மேலிட்டது. அவரை அவர்கள் பலவாறு பரிகாசம்செய்து அவரை நோக்கி, "நீர் கூறும் வல்லமை உங்கள் தெய்வத்துக்கு ஏது? உங்கள் பரமசிவன் அசுர மாயைக்கும் அரக்கர்களின் போருக்கும் பயந்துகொண்டு பலமுறை பின்வாங்கி ஓடினதாய் நாங்கள் கேள்விப்படுகிறோம்" என்று மொழிந்தனர். அதனைக்கேட்ட சிவயோகியார் "ஓ! ராஜகுமாரர்களே, நீங்கள் பால்ய வயதினாலோ, அஞ்ஞானத்தினாலோ பூர்வஜன்ம பாவத்தினாலோ பரமேசனுடைய பெருமையை இவ்வாறு பழித்துப் பேசுகிறீர்கள். ஈசுவரனுடைய மகிமையைக் கேளுங்கள்.

1. "திரிபுரம் யாரால் அழிக்கப்பட்டது?

2. கடலில் எழும்பிய விஷம் யாரால் புஜிக்கப்பட்டது ?
3. ரக்தாசுரன் யாரால் அழிக்கப்பட்டான் ?
4. அரக்கருடைய மாயைகள் எல்லாம் யாரால் வீணுக் கப்பட்டன ?
5. சிருஷ்டிக்கும் சக்தியை யார் பிரமனுக்கு அளித்தார்?
6. யோகிகளுடைய மனம் யாரை நாடுகிறது ?
7. இப்பூமியைக் காப்பவர் யார் ?''

என்று இவ்வாறு பரமேசனுடைய மகா சக்தியின் பெருமையைப் புகழ்ந்து மயிர்க்கூச்சலுடன் மொழிந்தார். அதைக் கேட்ட அரச குமாரர்களாகிய அவர்கள் யாவரும் யோகியை நோக்கி "உங்கள் தெய்வத்துக்கு அற்புத சக்தி இருக்குமாயின் அவ்வித வல்லமையை இப்போதே எங்கள் கண்முன் காண்பிக்க முடியுமா?" என்று கேட்டார்கள்.

ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலும் அவர்கள் சொன்னதைப்பற்றி மனவருத்தமுற்ற சிவயோகியார் "பக்தரைக் காக்கும் நாதனுகிய எங்கள் பரமசிவனுடைய அற்புத சக்தியை எவ்விடத்திலும் எக்காலத்திலும் எவராலும் தடுக்க முடியாது. நீங்கள் அப்படிப்பட்ட சக்தியுள்ள ஈசனைப் பழிக்கிறீர்கள். இதனுல் உங்களுக்குப் பாவம் உண்டாகுமேயன்றி ஒரு பயனும் உண்டாகாது" என்று கூறுகையில் அந்தத் துஷ்டர்கள் அவர்மீது கோபங்கொண்டு "பரமேசனுடைய சக்தியை நீர் எங்களுக்கு நன்ருக வெளிப்படுத்தாத வரையில் இவ்வழியே செல்லலாகாது" என்று அவருடைய வழியைத் தடுத்தார்கள். அவர்களுடன் சல்லாபம் செய்வதே மனத்தின் தூய்மையைக் கெடுக்குமென்று நினைந்த சிவயோகியார் அவர்களை மீறி முன்செல்ல முடியாமல் பின்னே நோக்கித் திரும்பலானுர். திரும்பிய வழியில் மூன்று பக்கங்களிலும்

விசாலமும் ஆழமுமான ஒரு பெரிய ஏரியின் ஜலம் சூழ்ந்திருந்தது. அதனால் ஜலத்தைத் தாண்டி எப்படிப் போகலாமென்று அவர் முதலில் யோசித்தார். பிறகு பரமேசனே கதியென்று நினைத்து தினந்தோறும் பூஜைசெய்ய வைத்திருக்கும் சிவலிங்கத்தை ஒரு பிரப்பம்பெட்டியிலிருந்து எடுத்துத் தமது தலையில் வைத்துக்கொண்டு அவர்களைத் திரும்பிப் பாராமல் 'சம்போ! சங்கர!' என்று சொல்லிக்கொண்டே ஏரியின் ஜலத்தில் இறங்கிச் சென்றார். அவர் தலையில் வீற்றிருக்கும் சிவலிங்கத்தின் மகிமையாலும், தியாகேசனைத் தரிசித்துவந்த பலத்தாலும் அந்த ஜலம் அவர் நடந்துசெல்லக் கூடிய ஒரு வழியாகவே காணப்பட்டது. அதன்வழியே அவர் ஒருவித துன்பமுமில்லாமல் நடந்து சென்றதைக் கண்ட அனைவரும் வியப்படைந்து பராபர ஸ்வரூபியின் திவ்ய சக்தியை உணர்ந்துகொண்டார்கள்.

## 37. காற்றினல் மலையை ஓட்டிய லீலை.

நள்ளிருள் தீர்க்கும் பரம்பிரான்
உள்ளம் புகுந்து நைகின்றன்
கள்ளவசுரர் கலக்க மெலாம்
கொள்ளைகொள்ளுங் கொழுஞ்சுடரே.

தியாகராஜ மூர்த்தியின் அருளால் ஜனங்கள் எல்லோரும் ஒருவிதமான தீங்குமில்லாமல் சுகமாக வாழ்ந்துவந்தனர். பிரமதேவனிடமிருந்து பெற்ற வரத்தின் மேன்மையாலும் மாயையினுலும் போரில் மலைகளையே வருஷிக்கவல்ல பர்வதாசுரன் என்பானெருவன் உலகை அழித்துவந்தான். அவனது மாயையினுல் ஏவப்பெற்ற மலைகள் கிராமங்களையும் நகரங்களையும் பலவாறு நாசம்செய்யும். இக்கொடிய செயலைக்கண்டு பயந்த ஜனங்கள் எல்லாரும் தம் இருப்பிடங்களாகிய கிராமங்களையும் புரங்களையும் துறந்து வனம்புகுந்து புதர்களில் ஒளிந்து உயிரைக் காப்பாற்றி வந்தனர். மலைகளையே வருஷித்து ஜீவராசிகளுக்குத் தீங்கிழைக்கும் அவ்வசுரன் ஒரு நாள் திருவாரூர் நகரின்மேல் சிறு கற்களையும் பெரும் பாறைகளையும், மலைக் குன்றுகளையும், பெரிய மலைகளையும் முறையே வீசியெறிந்து மிகவும் பயங்கரமான துன்பத்தை விளைவித்து வந்தான். அந்த மகா கொடிய ஆபத்தினுல் வருந்திய ஜனங்கள் பயந்து ஓடுகையில் வழிதெரியாமலும் திசையை அறியாமலும் ஒருவர் மீது ஒருவர் மோதிக்கொண்டும் தம் தலைமேல் மலைகளும், கற்களும் விழுந்துவிடுமோவென்று பயந்தும் புலம்பினார்கள்.

தனது மாயையினுல் அளவற்ற கற்களை உண்டுபண்ணி அவ்வசுரன் திசைதோறும் அவற்றை வீசி எறிகையில் சிலர் குழந்தைகளை விட்டு ஓடினர். சிலர் மாதாவையும், சிலர் பிதாவையும், சிலர் கணவரையும், சிலர் பொருளையும், சிலர்

வீட்டையும், சிலர் நகரையும் விட்டுவிட்டு ஓட ஆரம்பித்தார் கள். திருவாரூர் முழுவதிலும் ஹா ஹா என்னும் அழுகை யும் 'தியாகராஜா நீயே கதி, தியாகராஜா நீயே சரண்', என்ற பேரொலியும் பரவின. இதுவரையில் அசுர ராக்ஷஸ மாயையினின்றும் இந்த அழகிய நகரத்தைக் காப்பாற்றிய தியாகராஜா இன்று உபேக்ஷையாக இருக்கிறாரே. இது அசுர மாயையோ, ராக்ஷஸ மாயையோ, ஊழிகாலமோ தெரியவில்லையே. இந்நகரின் அழகிய மண்டபங்களும் மாளி கைகளும் கற்பாறைகளால் தாக்கப்பட்டுச் சிதறுகின்றனவே. அநேக வீடுகள் அழிந்துபோயின. சிலா வருஷம் இன்னும் நின்றபாடில்லையே. இச்சமயம் இந்திரன் வந்தாலும் அவன் தன் வஜ்ராயுதத்தை வீசி மலைகளை அழிப்பானே. இந்த நக ரத்தையும் நம்மையும் இப்போது காப்பவர் யார்? ஹா ஹா என் செய்வோம்" என்று சிலர் கதறினர். மலையை வில்லாக வளைத்து மலைமேல் வீற்றிருக்கும் மகாதேவர் கருணைசெய்வா ராகில் இம்மலைமாரி பஞ்சுபோல் பறந்தோடும்" என்று சிலர் கூறினர். ஆதியில் உலகத்தைப் படைக்கவும் பிறகு காப் பாற்றவும் அப்பால் அழிக்கவும் வன்மையுள்ள பரம்பொருளே இத்துன்பத்தையும் நீக்கவல்லவர். மக்கள் அழியும்படி தக்கையே பார்த்திருப்பாரோ. இந்நகரத்து எல்லா ஜீவராசி களுக்கும் நேரிட்டிருக்கும் இக்கொடிய துன்பத்தைத் தியாக ராஜாவையன்றி நீக்கவல்லார் யார்! நாம் அவரையே சரணுகப் பற்றியிருக்கிறோம். நம்மை ரக்ஷித்தாலும் அழித்தாலும் அது அவரது லீலையேயாகும். அதைப்பற்றி நாம் ஒன்றும் சொல்லலாகாது" என்று சிலர் கூறினர். ஜனங்களெல் லோரும் இவ்வாறு தத்தமக்குத் தோன்றியவாறு புலம்புகை யில் அந்தக் கல்மாரியின் கொடுமையைத் தாங்கமுடியாமலும் பார்க்கமுடியாமலும் அநேக ஸ்திரீகளும் குழந்தைகளும் பயந்து மூர்ச்சையை அடைந்தனர். எல்லா ஜனங்களும் அச் சமயத்தை ஊழிக்காலமென்றே நினைத்தனர். அப்போது

தியாகிதியாகிய தியாகேசர் அக்கொடிய தோற்றத்தைக் காணப் பொறுமல் தம் திவ்விய சக்தியினுல் ஒரு மென்மையான காற்று வீசும்படியும் அதனுலேயே அம்மலைகளெல்லாம் ஓடி விடும்படியும் மனத்தில் நினைத்தார். நினைத்தபொழுதே ஜீவராசிகளின் சரீரத்துக்கு மிக்க சுகத்தை உண்டுபண்ணியும் புஷ்ப வாசனையையும் ஜலபிந்துக்களையும் இழுத்தும் ஒரு மந்த மாருதம் வீச ஆரம்பித்தது. அழகிய அத்தென்றலினுலேயே அசுரன் ஏவிய மலைகளெல்லாம் ஆகாயத்திற் பறந்து மஹா நதியில் வீழ்ந்தன. சிறிய கற்பாறைகளும், பெரிய குண்டு களும் சிகரங்களோடு கூடிய மலைகளும் காற்றில் விடுத்த பஞ்சுபோல வெகு வேகமாய்ப் பறந்தன. அதைப்பார்த்த ஜனங்கள் யாவரும், "இவ்வற்புதக் காட்சி தியாகராஜாவின் லீலையாகத்தான் இருக்கவேண்டும்" என்று நினைந்து பரமேசனைத் துதிசெய்தனர். அப்போது சூரிய கிரணத்தினுல் பனி அழிவதுபோல் சிவபிரான் ஏவிய அச்சிறு காற்றினுல் மலைகள் கடலில் வீழ்வதைக் கண்ட பர்வதாசுரனும் பயந்து ஒளிந்துகொண்டான். கொடிப்பொழுதில் இடர்நீங்கிய ஜனங் களும் ஈசனைப் போற்றி மகிழ்ந்தனர்.

இந்த லீலையைக் கேட்பதனுல் ஈசனுடைய அஷ்ட சக்தியும் நன்கு விளங்கும்.



## 38. இரவைப் பகலாக்கிய லீலை.

உலகத்தைக் காப்பாற்றும்பொருட்டுத் திருவாரூர் நகரில் தியாகராஜ மூர்த்தியாகத் தோன்றிய கைலாசபதியானவர் கமலநாயகி தேவியாருடன் விளங்குகையில் ஒருசமயம் மனத்துக்கு உற்சாகத்தை அளிக்கவல்ல இளவேனிற் காலம் தோன்றியது.

அப்போது தியாகேசர் மலையரசன் மகளாகிய கமலநாயகி தேவியாருடன் விவகரிக்க வேண்டுமென்று நினைத்தபோது பரமேசனுடைய திவ்விய லீலைக்குத் தகுந்த மாலைப்பொழுது மேற்குத் திக்கில் விளங்கிற்று. மான்களும், பசுக்களும், பறவைகளும் தம் இருப்பிடத்துக்குத் திரும்பின. ஆகாயத்தில் செவ்வானம் தோற்றவே மகரிஷிகளும், வேதியரும் கமலஸரஸ்ஸையடைந்து ஸ்நாநாதி அக்காலத்துக்குரிய ஜபங்களைச் செய்ய ஆரம்பித்தனர். அஸ்தமனத்தையடையும் சூரியனுடைய கிரணங்கள்போல ஒவ்வொரு மாளிகையிலும் தீபங்கள் விளங்கின. மகாராஜாவின் அரண்மனையிலும் தியாகராஜாவினது தேவாலயத்திலும் தனிகர்கள் மாளிகைகளிலும் மங்கள வாத்தியங்கள் முழங்கின. மாதர்களின் அழகிய கீதமும் கருநெய்தல் மலர்களின் தேனையுண்டு களிக்கும் வண்டுகளின் கானமும் மனத்தைக் கவரும்படி எல்லாத் திசைகளிலும் பரவின. கமலநாயகியாரின் கூந்தல் நிறத்துக்குச் சமமான காரிருள் திசைகளில் படியும்பொழுது அவ்வசந்த காலத்துக்குத் துணைவனாகிய சந்திரனும் கீழ்த்திசையில் உதித்தான். இருளும் சிறிது சிறிதாக விலகிற்று. கமல தேவியாரின் புன்னகைக்கு நிகரான தாரகைகளினால் ஆகாயம் முத்துக் கோத்தாற்போல் விளங்கிற்று.

இத்தகைய அழகிய சமயத்தில் தியாகராஜனுக்கு இரவில்

செய்யக்கூடிய பூஜைகளை நிறைவேற்றிவிட்டுத் தொண்டர்கள் கதவுகளை மூடிக்கொண்டு சென்றனர். பிறகு தியாகராஜர் வும் உலகமாதாவும் கலியாண மண்டபம், வசந்த மண்டபம், ஊஞ்சல் மண்டபம், கிரீடை மண்டபம் முதலிய இடங்களிற் சென்று தம் விருப்பம்போல் பற்பல உருவங்களை எடுத்துக் கொண்டு களித்து விளையாடினர். அப்போது தேவியாருக்குப் பரமேசனிடம் கொஞ்சம் கோபமுண்டாயிற்று. கமலம் போன்ற அழகிய முகத்தைத் தாழ்த்திக்கொண்டு சற்று நேரம் ஈசனுடன் பேசாமல் தேவி சும்மா இருந்தாள். அது கண்ட பரமேசன் அளவில்லா துயரடைந்து தேவியினருகே சென்று, "பத்மாக்ஷி. மீனாக்ஷி நீ என்மீது காரணமின்றி ஏன் கோபித்திருக்கிறாய்? நான் ஒருவித குற்றமும் செய்ய வில்லையே. யௌவனமுள்ள மானின் கண்ணை வென்ற உன் நேத்திரத்தை. என்மீது செலுத்தலாகாதா? உனது மனத் துக்குக் கோபமுண்டாவதற்கு நான் எவ்விதமான தவறையும் செய்யவில்லையே. நான் வேறொரு மாதுடன் பேசிக்கொண் டிருப்பதாக நீ கனவு கண்டாயா? நான் எப்போதும் உன் சரீரத்திலேயே சேர்ந்திருக்கிறேனே. மனத்தினாலும் நான் மற்ற மாதரை நினையேனே. இப்படியிருக்க நீ என்மீது கோபங்கொள்ள என்ன காரணம்? இந்த லீலா சமயத்தில் நமது இன்பத்தைக் கெடுப்பது நியாயமா? என்று இவ்வாறு ஈசன் உரைக்கும்போதும் பார்வதி தேவியின் கோபம் தணிய வில்லை. அதுகண்ட தியாகேசர் "என் பிராண நாயகியே, நீ என் உன் கடாக்ஷத்தை என்மேல் இன்னும் செலுத்த வில்லை. உன் மனம் எதை விரும்புகிறது? அதை என் னுடன் சொல்வாயாகில் அப்பொருள் வானுலகிலிருந்தாலும் வைகுந்தத்தில் இருந்தாலும் இப்போதே கொண்டுவருவேன். உன் மனம் எப்பொருளின் மீது செல்லுகிறது?" என்று கேட்டார். அப்போது கமலநாயகி தேவியார் ஈசனை நோக்கி, "நமது லீலைக்குத் தக்க இவ்விரவிலேயே மற்றொரு பக்கத்

தில் பகலும் தோன்றும்படி செய்வீராகில் அவ்வழகைக்கண்டு என் மனம் களிப்படையும். இதுவே என் விருப்பம்" என்று உரைக்கவே, தியாகேசர் தம் மனத்தே அந்த நடு இரவில் கதிரவனை நினைத்தார். அப்போது பாதாளத்தில் நிலைபெற்றிருந்த சூரியன் தியாகராஜாவின் ஆலயத்துக்கு நேரே ஆகாயத்தில் விளங்கினன். பரமசிவன் உமையை நோக்கி "தேவி நீ விரும்பியபடி வடக்கே சூரியனும் தெற்கே சந்திரனும் விளங்குகிறார்கள் பார். நமது கமலாலயத்திலுள்ள தாமரைகள் ஒருபக்கம் மலர்ந்திருக்கின்றன. மற்றொரு பக்கம் லோற்பலமும் கருநெய்தல்களும் மலர்ந்திருக்கின்றன. ஆகாயத்தே ஒரு பக்கத்தில் நக்ஷத்திரங்கள் காணப்படுகின்றன. ஒரு பக்கத்தில் நிலவும் ஒருபக்கம் வெயிலும் தோன்றுகின்றன இவற்றையும் பார்" என்று இரவின் அடையாளங்களையும் பகலின் அடையாளங்களையும் பரமேசன் பார்வதி தேவிக்குக் காட்டுகையில் இரவில் பகலைத் தோற்றுவித்த தியாகராஜனுடைய அற்புத சக்திகளைக் கண்டு தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். திருவாரூர் ஜனங்களெல்லோரும் கண் விழித்து இரவில் பகல் தோன்றுவதைக் கண்டு ஆணும் பெண்ணும் கலந்து விளங்கும் அர்த்தநாரீசுவர மூர்த்தியான தியாகராஜாவைப் பலவாறு துதித்து மோக்ஷத்தைக் கண்டவர்கள்போல் பரமானந்தமடைந்தனர். இந்த லீலையைக் கேட்பதால் அஞ்ஞானம் நீங்கும். பார்வதி பரமேசுவரர்களின் பாதாரவிந்த பக்தியுண்டாகும்.



## 39. அரக்கன் நாக்கைக் கிழித்த லீலை.

ஒருசமயம் பிரதுஜங்கனென்னும் அரக்கனொருவன் இலங்கையிலிருந்து வெளிக்கிளம்பி வடதிசையை நோக்கி வந்தான். பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் நான்கு வருணத்தாரும் நிறைந்து செல்வ விருத்தை அடைந்து மண்மகளுக்கு மாலைபோல் விளங்கும் திருவாரூரைக் கண்டான். இந்நகரம் எப்போது உண்டாயிற்று? பாதாளத்திலிருந்து வெளிக்கிளம்பி வந்து இங்கே நிலை பெற்றதா? வானுலகிலிருந்து கீழிறங்கி இங்கு நிலைபெற்ற நகரமா? விஷ்ணுவின் இருப்பிடமா? சிவபிரானது வாசஸ்தானமா? பிரமதேவனுடைய இடமா? கந்தருவ லோகமா?" என்று பலவாறு யோசித்து வியப்புற்றான். கோபுரங்கள், மண்டபங்கள், மதில்கள் முதலியவற்றின் அமைப்பைக் கண்டு இது ஒரு சிவஸ்தலமாகவே இருக்கவேண்டும். இந்நகரத்தையும் இக்கோயிலையும் அழிப்பதற்கு இது சமயமன்று. நமது துணை அரக்கரை அழைத்துவந்து அவர்களது மாயையினாலும், நமது திறமையினாலும் பிறகு அழிப்போம். இப்போது இந்நகரவாசிகளை அழிப்பதே நமது குலத்துக்கேற்ற தொழிலாகும்" என்று யோசனைசெய்து ஒரு பெரிய மலைப் பாம்பின் உருவை எடுத்துக்கொண்டான். ஜனங்கள் செல்லும் மார்க்கத்தில் மறைந்திருந்தான். தினந்தோறும் பிராணிகள் செல்லும் வழியில் மலைப்பாம்பாகத் தோன்றி ஒரு குகைபோல் அகன்ற வாயைத் திறந்து வைத்துக்கொண்டான். இதை ஜனங்கள் அறியவில்லை. அரக்கனது மாயையினால் பாம்பின் வாய் செடிகள் போலவும் கொடிகள் போலவும் மரங்கள் போலவும் காணப்பட்டமையால் ஜனங்களும் மற்றப் பிராணிகளும் வழக்கமாய்ப் போய்வருவதுபோல் திருவாரூர் நகரின் எல்லைகள் வெளியே செல்லும்போதும் நகருக்குள் நுழையும்

போதும் பாம்பின்வாயை மார்க்கமென்றே நினைத்து நுழைந்து விடுவார்கள்.

சிலசமயங்களில் அம்மலைப்பாம்பு அருகே வரும் ஜீவராசிகளைக் கவர்ந்து விழுங்கிவிடும். இவ்வாறு அவ்வரக்கன் தினந்தோறும் மயில்களையும், மான்களையும், பசுக்களையும், ஆடுகளையும், குதிரைகளையும், மனிதர்களையும், வன ஜந்துக்களையும் கவர்ந்து தின்று நாசம் செய்கையில் மாயையால் ஏவப்பட்ட அம்மலைப்பாம்பின் வடிவத்தை ஒருவரும் அறிந்துகொள்ள முடியவில்லை. கர்ப்பத்திலிருக்கும் ஜீவராசி முதல் புல், பூண்டு, மனுஷ்யர், தேவர், பிரமர் முதலிய சகல பிராணிகளையும் காப்பாற்றிவரும் தயாநிதியாகிய தியாகராஜா ஒருநாள் காலையில் வேட வடிவத்தோடு கையில் வில்லுடன் வீதிவழியே சென்று அம்மலைப்பாம்பு இருக்கும் இடத்தை அடைந்தார். அசுரர்கள், அரக்கர்கள் இவர்களுடைய மாயைகளை அழிப்பதற்காகக் கங்கணம் கட்டிக்கொண்டுள்ள தியாகராஜ மூர்த்திக்கு அவ்வரக்கன் உள்ள இடம் நன்றாகப் புலப்பட்டது. அப்போது வேட வடிவந்தாங்கிய பரமேசன் தம் கையிலுள்ள வில்லை வளைத்து நாணேற்றி ஒரு கூர்மையான அம்பை அரக்கன்மீது எய்யவே அக்கொடிய அம்பினால் அடியுண்ட அவ்வரக்கன் கடுஞ்சினங்கொண்டு மலைப்பாம்பின் சரீரத்தாலேயே வேடரூபியாகிய தியாகராஜாவை விழுங்கிவிட முயன்றான். அப்பாம்பின் நீண்ட நாக்கு வெகுதூரம் பரவி வந்திருப்பதைக் கண்ட பரமேசன் அவனை மாய்க்க அதுவே நல்ல உபாயமென்று எண்ணித் தம் இரண்டு கைகளாலும் நாக்கை உறுதியாகப் பிடித்திழுத்தார்.

வேடரூபியால் தன் நாக்கு இழுக்கப்பட்டபோது கொடிய வேதனையையடைந்த பாம்பு கடுஞ்சினம்கொண்டு சீறிச் சீறிப் பெருமூச்செறிந்து அம்மூச்சுக் காற்றினால் அநேக மரங்கள் வேரோடு பிடுங்கிக்கொண்டு தரையிலே சாய்ந்தன. வனத்

தியுள்ள ஜீவராசிகள் நடுக்கத்துடன் திசை திசையாய்ப் பறந்துசென்றன. அப்பாம்பு தனது கொடிய வாலைச் சுற்றி வீசுகையில் வாலினால் அடிபட்ட பல பிராணிகள் ஜீவனை இழந்தன. இப்படி துன்பத்தை விளைவித்த பாம்பின் நாக்கை ஒரு நொடிக்குள் இரு பிளவாகக் கிழித்துவிடவே ஜீவனை இழந்த அரக்கன் கர்ஜனைசெய்து பூமியில் வீழ்ந்தான். பூமியும் மரங்களுடனும் மலைகளுடனும் நடுங்கிற்று. திசைகளெட்டும் சிறிதுநேரம் வரையில் கலக்கமடைந்து தெளிவுற்றன. இவ்வாறு பரமேசன் அவ்வரக்கனுடன் சண்டை செய்கையில் தேவாலயத்தில் ஈசனைக் காணேமென்று பூஜை செய்யும் தொண்டர்கள் தேடலானார்கள். அப்போது வேர்வையுற்ற திருமுகத்துடன் வேட வடிவங்கொண்டு ஆலயத்துள் நுழைந்து மறைந்தார்.

பிறகு நகருக்கு வெளியே மலைபோல் வீழ்ந்து மாண்டிருக்கும் மலைப்பாம்பைக் கண்ட ஜனங்கள் இக்கொடிய ஜந்துவை ஈசனே வதைத்திருக்க வேண்டுமென்று நினைந்து பீடை நீங்கிச் சந்தோஷமடைந்தார்கள்.



## 40. ராஜபத்தினிக்கு ஆடை அளித்த லீலை.

பிறவிப்பிணி இன்றி நன்மையை உண்டுபண்ணும் செல்வம் நிறைந்த திருவாரூரில் தியாக சோழ மஹாராஜன் மனுமுறை தவறாமல் செங்கோல் செலுத்திக்கொண்டு சிங்காசனத்தே வீற்றிருந்தான். பல ஆண்டுகள் சென்றும் அவனுக்குப் புத்திரபேறு உண்டாகவில்லை. அதனால் மனக்குறை கொண்ட மஹாராஜனுடைய பட்டமகிஷியாகிய சந்திரலேகை என்பவள் அதிகாலையில் எழுந்து தியாகேசன் சன்னிதானத்துக்கு வந்து பணிந்து 108 முறை பிரதக்ஷணம் செய்து அம்மூர்த்தியின் எதிரேயுள்ள மங்கள வேதிகையென்னும் மேடை மீது நெய்யினால் மெழுகி முத்துக்களாலும் மற்ற ரத்தினங்களாலும் கோலம்போட்டு அதன் நடுவே நெய்விளக்கிட்டு பரமேசனைத் துதித்து வருவாள். மாலையில் தனது புஷ்பவனத்துக்குத் தானே சென்று மலர்களைக் கொய்து விசித்திர மாலைகள் கட்டிக் கமலநாயகியாருக்கும், தியாகராஜாவுக்கும் மகிழ்ச்சியுண்டாகும்படி அளித்து வருவாள்.

தான் அணிந்துள்ள ஆபரணங்களைக் கழற்றித் தியாக ராஜாவின் பாத கமலத்தில் காணிக்கையாகச் சேர்ப்பிப்பாள். இவ்வாறு நெடுநாள் வரையில் ஒப்பற்ற பக்தியுடன் சந்திரலேகையானவள் பரமேசனுக்குப் பணிவிடைசெய்து வருகையில் அதனால் மகிழ்ந்த தியாகேசர் ஒருநாள் அவள் தொண்டு செய்து அரண்மனைக்குத் திரும்பிக் கோபுரவாயிலுக்கு நேரே செல்லுகையில் ஆகாயவாணியாக "ஓ தர்மதேவியே! சோழ மஹாராஜனது குலத்தை நிலைநிறுத்தவல்ல குமாரனொருவன் உன் வயிற்றில் ஜனிப்பான். இதுவரை நீ செய்துவந்த சிறப்பான பணிவிடையினால் உன் பூர்வஜன்ம பாவங்கள் அகன்றுவிட்டன. இனி உனக்குச் சிறந்த மங்களமே உண்

டாகும். நாளைத் தினம் விடியற்காலம் உன் கணவனுடன் கம லாலயத்தில் நீராடி நமது சன்னிதானத்தை மூன்றுதடவை பிரதக்ஷணம் செய்வாயானால் நாளை முதல் உன் வயிற்றில்கர்ப்பம் உண்டாகி மன்னர் மன்னனாக விளங்கக்கூடிய குமாரன் உதிப் பான்" என்று உத்தரவு செய்தார். தியாகராஜ மூர்த்தி அசரீரி மூலமாக இவ்வாறு அருள் செய்ததைப்பற்றி மன மகிழ்ச்சியுடன் அரண்மனை சென்ற சந்திரலேகை சக்கர வர்த்தியிடம் இந்தச்செய்தியை அறிவித்து அவனை ஆனந்தக் கடலில் அமிழ்த்தினாள். மிக்க களிப்படைந்த மன்னன் அப்போது பூதானம் முதலிய சிறந்த தானங்களைச் செய்து நியமத்துடன் ஏகவாரபோஜனம் செய்து அன்றிரவு தர்ப்பப் படுக்கையில் படுத்திருந்து மறுநாள் உதயத்தில் சந்திரலேகை யுடன் கமலாலயத்துக்கு நீராட வந்தான். அப்போதும் அரசன் செய்யும் அநேகம் தானங்களை வாங்கிக்கொள்ளலா மென்று ஆயிரக்கணக்கான வேதியர்களும், யாசகர்களும் அங்கே வந்து கூடினார்கள்.

முதல்நாள் பட்டமகிஷிக்குக் கோபுரத்தின் அருகே தியாக ராஜா அசரீரியாக உரைத்ததை அக்கோபுர நிலையில் தங்கிக் கவனித்த அரக்கனொருவன் தன் குலத் தொழிலாகிய வஞ்சனை யால் பட்டமகிஷியை எவ்வாறேனும் அவமானப்படுத்த எண்ணி ராஜ தம்பதிகள் கமலாலயத்துக்கு வருமுன்னரே ஒருவருக்கும் தெரியாமல் தண்ணீரில் மூழ்கி ஒளிந்திருந்தான்.

இந்தச் சூதை அறியாத ராஜ தம்பதிகள் சுபசமயத்தில் சங்கற்பம் செய்விக்கப்பெற்றுத் தியாகேசன் பாதகமலங்களை மனத்தில் நினைத்து வருண ராஜனுக்கும் கங்கா தேவிக்கும் புஷ்பம், சந்தனம் இவற்றால் அர்ச்சனை செய்து நீரில் மூழ்கி னார்கள். வஞ்சனை செய்யச் சமயத்தை எதிர்பார்த்திருந்த அரக்கன் ஜலத்தில் மூழ்கிய பட்டமகிஷியின் வஸ்திரத்தைத் தன் மாயையினால் தண்ணீரில் அமிழ்ந்து போகும்படி செய்து

விட்டான். நீராடிவிட்டு வெளியே எழும்போது தன் உடலில் ஆடை திடீரென்று காணப்படாமையால் பெருந் துக்கத்தையும் சோகத்தையும் அடைந்து அந்தப் பட்டமகிஷி "நாத, தியாகராஜ, இப்போது என்னைக் காப்பது உமது கடமை, உமது கருணை, நீரே கதி" என்று புலம்புகையில் அம்மெல்லிய அழுகுரலைச் செவியிலேற்ற தியாகராஜா அக் கொடியிலேயே உயர்ந்த பட்டாடைகள் பட்டமகிஷியின் சரீரத்தில் விளங்கும்படி நினைத்தார். உடனே ராஜபத்தினியின் உடலில் சிறந்த பட்டுகளும் பீதாம்பரங்களும் முன்பிருந்ததைக் காட்டிலும் பன்மடங்கு அழகு வாய்ந்து விளங்கின. "இது வும் ஈசனருளே! என்று எண்ணி மிக்க சந்தோஷத்துடன் நீராடிப் பல தானதிகளைச் செய்து அரண்மனையை அடைந்து தன்னை ஈசன் காப்பாற்றிய நற்செய்தியைப் பூபாலருக்கு அறிவித்தாள். பரமேசனுடைய குணங்களைப் பலவாறு புகழ்ந்து வருகையில் நற்புத்திரனொருவன் உதித்து நீடூழிகாலம் சிறப்புடன் உலகத்தை ஆண்டு விளங்கினன்.

இந்த லீலையைக் கேட்பதினால் பக்தர்கள்மீது பரமேசனுக்கு உள்ள கருணை விளங்கும்.



## 41. தீயைத்தண்ணீராக்கிய லீலை.

தியாகராஜன் அருளால் செழிப்புற்று விளங்கும் சோழ நாட்டின் கண் ஒருசமயம் சந்திரகேது மஹாராஜன் திருவாரூரில் இருந்து கொண்டு செங்கோல் ஓச்சிவந்தான்.

அப்போது சும்புராசுரன் என்னும் ஒரு மாயாவி சில வேவுகாரர்களையும் சாரணர்களையும் வெளியிடங்களுக்குப் போய் அங்கங்குள்ள விசேஷங்களை அறிந்துவரும்படி ஏவியனுப்பினன். அவர்கள் எல்லோரும் பூவுலகில் ஒவ்வொரு தேசத்துக்கும் சென்று, அங்கங்கேயுள்ள சிறப்புக்களையெல்லாம் தெரிந்துவந்து அவ்வசுர வேந்தனிடம் விவரமாக உரைத்தார்கள். "ஓ அசுர சிரேஷ்ட, உமது கட்டளைப்படி நாங்கள் ஒவ்வொரு தேசத்துக்கும் சென்று ஒவ்வொரு ஜாதியாரிடத்திலும் நடக்கும் நடவடிக்கைகளை நன்றாக அறிந்து வந்தோம். அவற்றுள் ஆச்சரியமான தேசமொன்று உண்டு. அதனைச் சோழ நாடென்றும் காவிரி நாடென்றும் வழங்கிவருகிறார்கள். அதற்குத் திருவாரூர் என்னும் நகரம் ராஜதானியாக விளங்குகிறது. அந்நகரை அளகையென்றும் அமராவதி யென்றும் சொல்லலாம். அந்நகரில் ஒன்றுக்கொன்று பகையே இல்லை. பசுவும் புலியும், யானையும் சிங்கமும், பாம்பும் கீரியும், கிளியும் பூனையும் மிக்க நட்புடன் பழகி விளையாடுகின்றன. அதனைக் கண்ட நாங்கள் மிக்க வியப்புற்றோம். இதற்குக் காரணம் யாதாயிருக்குமென்று நாங்கள்தேடிச்செல்லுகையில் அந்நகரின் மேற்குத் திசையில் ஒரு தேவாலயத்தைக் கண்டோம். அதற்குள் சோழ சக்கரவர்த்திகளால் அமைக்கப்பட்ட நவரத்னமயமான ஜன்னல்களையும், மேடைகளையும், படிக்கட்டுகளையும், பலவித மண்டபங்களையும், ஸ்வர்ண கலசங்கள் நிறைந்த விமானங்களையும் பல நேர்த்தியான கட்டிடங்களையும் பார்த்து ஆச்சரியமடைந்தோம்" என்று இவ்வாறு வர்ணிக்கவே

திருவாரூரின் மேன்மையை அறிந்துகொண்டு சும்புராசுரன் கடுஞ்சினத்துடன் ஆகாயமார்க்கமாய் வந்து அம்பிகைக்கும், ஈசுவரனுக்கும் அபிஷேகம் நடக்கையில் பொற்கோயில் மீது ஆக்கினேயாஸ்திரத்தைப் பிரயோகித்து எல்லோருக்கும் துன்பத்தை விளைவித்தான். அதுதெரிந்த தியாகராஜா தம் அற்புத சக்தியினல் அந்த நெருப்பு மழையை நீர் மழையாக மாற்றி ஜனங்களின் துயரத்தை நீக்கிக் காப்பாற்றினர்.

இந்த லீலையைக் கேட்பதனல் வேதாத்யயன பலன் உண்டாகும். ரஜோகுணம் நீங்கும். ஸத்வ குணம் வளரும்.

மணியினுன் மந்திரத்தான் மருந்தினுன் மாய்ந்திடாத
பிணிகளு மாயுமாயாப் பெரும்புகழ் சிறப்பு வாய்மை
துணிமத நெறிமெய்ஞ் ஞானம் துநமொழி யற வொழுக்கம்
உணர்வுசால் கல்வி செல்வம் ஒழிந்திடாவாயுளுண்டாம்.

தினப்பொருட்டுயிர் வதைத்த பாவமுஞ் சிதையும்வேறு
மனைப்பொருட்டார்வம் வைத்த பாவமும் மடியும் சொன்றி
புனற் பகர் பாவந்தானும் பொன்றிடு மகளிர் வாசி
தனைப் பகர் பாவந்தானுந் தழற் படு பஞ்சில் மாயும்.

பரமனை வணங்கல் செய்யாப் பாவமும் பரமற் கன்பாம்
பெரியவர் தமையிகழ்ந்த பாவமும் பீடு சான்ற
திருவெணீறணிதல் செய்யாப் பாவமுஞ் சிவன துன்மை
யரியவஞ் செழுத்துக் கூறப்பாவமு மகலுமம்மா.

திரு ஆரூர்ப் புராணம்



## 42. இந்திர தீர்த்தத்திற்கு மகிமையளித்த லீலை.

சுவர்க்கலோகத்தை இந்திரன் பரிபாலனம் செய்து வருகையில் ஒருசமயம் லம்பாசுரன் என்னும் அசுரன் அநேக கோடி அசுர சேனைகளைச் சேர்த்துக்கொண்டு இந்திரனை எதிர்க்கத் தொடங்கினன். நூறு யாகங்கள் செய்த இந்திரனும் ததீசி மகரிஷியின் முதுகெலும்பாகிய ஒப்பற்ற வஜ்ராயுதத்தை எடுத்துக்கொண்டு கோடிக்கணக்கான தேவசேனையுடன் அவ்வசுரனை எதிர்த்து அவனுடைய மாயா சூழ்ச்சிகள் சுவர்க்கலோகத்தின் மீது செல்லவொட்டாமல் தடுத்து நின்றான். பலபலவிதமாய் அந்த லம்பாசுரன் பிரயோகித்த மாயைகளையெல்லாம் இந்திரன் கண்டித்துவிட்டான். அப்போது லம்பாசுரன் கடுஞ்சினமுற்று மூன்று உலகங்களிலுமுள்ள எல்லா அசுரர்களையும் எல்லா மாயாவிகளையும் எல்லா அரக்கர்களையும் ஒருங்கு திரட்டிக் கடல்போன்ற சேனை வெள்ளத்தைச் சுவர்க்கத்தின்மீது செலுத்தினன். அப்போது அளவற்ற அவ்வசுர சேனைக்கு முன் தேவ சேனை எதிர்நிற்க முடியாமல் சீர்குலைந்து ஓடத்தொடங்கிற்று. அசுர சேனையினல் முறிக்கப்பட்டுப் பயந்தோடும் தேவ சேனையை இந்திரன் மடக்கித் திரும்பச்செய்து தைரியங்கூறிப் பிளக்கக் கூடாத கவசங்களையளித்து அநேக அஸ்திர சஸ்திர மந்திரங்களை உபதேசித்து அவ்வசுரப் படையை எதிர்த்து நிற்கும்படி செய்து தானும் ஐராவதத்தின் மீது ஏறிச்சென்று போர் முகத்தில் கோடிக்கணக்கான அசுரக் கூட்டத்தை மடியச் செய்தான்.

தேவசேனை வீரர்களின் பலத்தைக் கண்டு கொஞ்சமேனும் பயப்படாத அவ்வசுரப்படை எதிர்த்து நின்று போர் புரிய ஆரம்பித்தது. இவ்வாறு தேவேந்திரனுக்கும் லம்பாசுரனுக்கும் மூன்று வருஷகாலம் யுத்தம் நடந்தது. இரவும்

பகலும் ஓயாமல் சண்டை நடக்கையில் ஒருநாள் தேவசேனை பின்வாங்கத் தொடங்கிற்று. அதனால் தேவேந்திரனும் தைரியத்தை இழந்து முகவாட்டமுற்றுப் பெருமூச்சுவிட்டு மனங் கலங்கி நின்றான். அத்தருணத்தில் லம்பாசுரன் தன் அந்தப்புர மகிஷியாகிய ஸுஜாதை என்பவளை விமானத்தில் ஏற்றி அழைத்துவந்து தேவசேனை வீரர்கள் நிலைகுலைந்து ஓடுவதையும் தன் சேனை ஜயசப்தத்துடன் களித்திருப்பதையும் யுத்த காலத்தில் தான் செய்த மாயைகளையும் காட்டிக்கொண்டு நின்றான்.

அப்போது நாரத மகரிஷி அவன் எதிரில் தோன்றினர். கையில் வீணையை ஏந்திக்கொண்டு சாமகானம் செய்துவரும் அம்மகரிஷியைக் கண்ட லம்பாசுரனது பட்டமகிஷியாகிய சுஜாதை நாரதரைக் கைகூப்பி வணங்கி "வாரீர் எனது குலகுருவே" என்றாள். அதைக்கேட்ட லம்பாசுரன் "ஏ, பிராண நாயகி, இந்த மகரிஷி உன் குலத்துக்கு எப்படி குருவாகிறார்?" என்று வினவவே, சுஜாதையானவள் "ஓ அசுர நாத, பூர்வஜன்மத்தில் நான் ஒரு யக்ஷராஜன் புத்திரி. நான் சிறு பருவத்தில் கானம்செய்து வருகையில் இந்த நாரத மகரிஷி என் தகப்பனர் மாளிகைக்கு வந்து சில ஸ்வரங்களின் பேதங்களை எனக்கு உபதேசித்தார். அப்போது அவற்றை நான் பக்தியுடன் கேட்டுக்கொள்ளாமல் மதியின்மையால் இகழ்ந்தேன். இவர் அப்போது கோபமுற்று "நீ அசுர ஜாதியில் ஜனிக்கக்கடவாய்" என்று சாபமிட்டார். பிறகு எனக்கு நல்லறிவு உண்டாகி அவரைப் பயத்துடன் வணங்கிச் சாபவிமோசனத்தை யாசித்தேன். உடனே இவர் "பெண்ணே நீ ஓர் அசுர வீரனையடைந்து அவனால் போரில் துரத்தப்பட்ட தேவேந்திரனை எப்போது பார்ப்பாயோ அப்போது உனக்கு நான் என் தரிசனத்தை அளிப்பேன். அத்தருணத்திலேயே உன் ஜன்மம் மாறி மறுபடி யக்ஷராஜன் கன்னிகையாக ஆவாய்" என்று கருணைபுரிந்தார். அதுபோலவே ரிஷி

இப்போது தோன்றினர். எனது ஜன்மம் மாறிவிடப் போகிறது" என்று சொல்லிக்கொண்டிருக்கையில் அநேக யக்ஷர்கள் விமானத்துடன் வந்து சுஜாதையை அழைத்துக் கொண்டு கந்தர்வ லோகம் போய்ச் சேர்ந்தார்கள்.

இவ்வித சம்பவங்களை யெல்லாம் பார்த்திருந்த லம்பாசுரன் அத்தருணத்தில் மதியிழந்து பலம்குன்றி ஒளிநீங்கிப் பிணம்போல் நின்றான். சுஜாதை பிரிந்துவிடவே அவனது பலம் குறைந்துவிட்டது என்று நாரதர் இந்திரனுக்கு அறிவித்து "ஏ, தேவேந்திர, இப்போதே நீ பூவுலகத்தை நாடிப் புண்ணிய க்ஷேத்திரத்தில் ஒரு தடாகத்தை உண்டாக்கி அதில் நீராடித் தியாகேசரைப் பணிந்து வருவாயானால் அவ்வசுரனை எளிதில் ஜயிப்பாய்" என்று உரைத்துச் சென்றார்.

தேவரிஷிகளுள் சிறந்தவரான நாரதரின் உபதேசத்தைப் பெற்ற இந்திரன் வெகு சீக்கிரத்தில் புண்ணிய ஸ்தலமென்னும் திருவாரூரையடைந்து ஒரு ஸரஸ்ஸை நிர்மாணம்செய்து வேத சாகையினால் தியாகராஜாவைத் துதிசெய்து நின்றான். தியாகராஜா அப்போது, "வாசவ, இந்த ஸரஸ்ஸில் நீ ஸ்நானம் செய்தபடியால் உனக்கு அளவற்ற பலமும், தேஜஸ்ஸும், மனச் சாந்தியும் உண்டாகிவிட்டன. இவ்வசுரனை இனி நீ வெகு சுலபமாக வென்று சுவர்க்கலோகத்தை நெடுநாள் சிறப்புடன் பரிபாலிப்பாய்" என்று உரைத்தார். வாசவன் தியாகேசனை நமஸ்கரித்துத் துதித்து அவரது அருளைப்பெற்றுச் சுவர்க்கத்துக்கு வந்து தேவசேனையைத் திரட்டி லம்பாசுரன் மீது செலுத்தி அநேகம் சஸ்திரங்களைப் பிரயோகித்து அவ்வசுர சேனையை முறியச்செய்து லம்பாசுரனை யமதர்மராஜனுக் அதிதியாகச் செய்தான். இந்திரனால் உண்டாக்கப்பட்ட அந்த ஸரஸ்ஸுக்கு அதுமுதல் இந்திர தீர்த்தம் என்று பெயரென்றும் அதில் நீராடுபவர்கள் ஒளியையும், ஜயத்தையும் அடைவார்களென்றும் தியாகராஜா வரமளித்த மகிமை

உலகத்தில் பரவியப்படியால் வானவரும் இடர் நேரிட்டபோது அங்கேவந்து இந்திர தீர்த்தத்தில் நீராடித் துன்பங்கள் நீங்கி இன்பத்துடன் விளங்கலானார்கள்.

செல்வம் வேண்டிடிற் செல்வமதீந்திடுந் தெய்வக்
கல்வி வேண்டிடிற் கல்விய தளித்திடுங் காம
னல்ல பேரெழில் வேண்டிடி லவ னெழினல்கு
மல்லறீர் கதிவேண்டிடிற் கதியினிதருளும்.

மகவு வேண்டிடின் மலரின் மேன்மங்கையின் வனப்புத்
திகழ மங்கையர் வேண்டிடிற் சேணுலகாளும்
புகழ் செய் வேந்தரா வேண்டிடிற் பொரு கடலாடை
யகிலமன்னரா வேண்டிடில் வேண்டியாங்களிக்கும்.

அழுதுநோயோடு துட்டநோயடைந்துரு வழிந்து
வழவிவாலெயிறக்கை கூன் சிலையென வளைந்து
விழி மறைந்து கைகால் தறைவிருத்த மாந்தரும்போய்
முழுக வித்தட மாரனிற் பொலிவரால் முனிவீர்.

பாவமெண்ணில விழைத்தோராயினும் பங்கயப்பொற்
பூவலர் வாசநாறும் புதுநறுந் தேவதீர்த்த
வாவிநீர்த்தி வலையொன்று வந்து மேற்படில் வயங்குத்
தேவுரு வெய்தி மானமூர்ந்து சேணுலகஞ் சேர்வார்

திரு ஆரூர்ப் புராணம்



## 43. பெண்ணை ஆணாக்கிய லீலை.

முனிவர்களாலும் காண்டற்கரிய கைலாசபதியானவர் பூலோக ரக்ஷணார்த்தமாக சோழநாட்டிலுள்ள திருவாரூரில் தோன்றியதுமுதல் மகரிஷிகளுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் மற்ற ஜாதியார்களுக்கும் மனத்தில் சந்தோஷம் குடிகொண்டிருந்தது. முகத்தில் எப்போதும் ஒப்பற்ற ஒளி விளங்கிற்று. ஜனங்களுக்கு ஒருவிதமான துன்பமும் நேரிடவில்லை. நினைத்த காரியங்களெல்லாம் இடையூறின்றிப் பலனை அளித்து வந்தன. பசுக்கள் முதலிய ஜீவராசிகளும் எவ்விதத் தீங்குமின்றிப் புஷ்டியுடன் வளர்ந்து வந்தன. சிற்சில சமயங்களில் அசுர ராக்ஷஸ மாயையினால் ஜீவராசிகளுக்குக் கஷ்டம் ஏற்பட்டபோதிலும் தியாகராஜன் அக்கஷ்டங்களை விரைவில் நீக்கிவந்தபடியால் உண்டாகும் துன்பங்களெல்லாம் கனவில் கண்டவைபோல் நீங்கி வந்தன. எல்லா ஜீவராசிகளுக்கும் வாழ்நாட்கள் பெரும்பாலும் சுகமாகவே கழிந்து வந்தன.

எல்லா ஜனங்களும் குடும்பத்துடன் சேர்ந்த ஜனங்களாயிருந்தபோதிலும் தாமரையில் ஜலம்போல் குடும்பத்தில் நிலைபெறாமல் ஈசுவர தத்துவத்தின் மேன்மையையே நன்றாக அறிந்துகொண்டு வந்தனர்.

அப்போது பஞ்சநத க்ஷேத்திரத்தில் (திருவையாற்றில்) யஜ்ஞதத்தரென்னும் பிராமணோத்தமர் ஒருவர் இருந்தார். அவருக்கு வெகுகாலம் வரையில் புத்திரோத்பத்தி ஏற்படவில்லை. அதனால் அவர் தமது தர்ம பத்தினியை அழைத்துக் கொண்டு காவிரிக் கரையில் விளங்கும் ஒவ்வொரு லிங்கஸ்வரூபியையும் நமஸ்கரித்துக்கொண்டு திருவையாற்றுக்குத் திரும்புகையில் அவருக்கு வழியிலே நற்சகுனம் உண்டாகவில்லை. அதனால் அவர் சிறிதுநேரம் தயங்கி நின்று பிறகு அவர்

கிழக்கு நோக்கிச் செல்லுகையில் நல்ல சுபசகுனங்கள் தோன்றின. சகுன சாஸ்திரத்தை நன்றாக அறிந்தவராகிய அவர் மிகவும் மகிழ்ந்து சகுனத்தினால் கண்ட வழியைப் பின்பற்றி வருகையில் திருவாரூரை அடைந்தார். அதனால் அதிக மகிழ்ச்சியடைந்த அந்த வேதிய தம்பதிகள் திருவாரூரில் இந்திர தீர்த்தத்திலும், கமல தீர்த்தத்திலும் நாள் தோறும் நீராடித் தியாகேசனது ஸந்நிதானத்தைப் பிரதக்ஷிண நமஸ்காரங்களினால் பஜித்துவருகையில் தியாகேசனருளால் அவர்களுக்கு ஒரு சற்புத்திரன் தோன்றினான்.

நூல்முறைப்படி ஜாதகர்மம், நாமகரணம், அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம் முதலிய கிரியைகளை நடத்தி வைக்கப் பெற்றவனான வேதப்பிரியனென்னும் அவ்வந்தண குமாரன் குருகுலத்தை யடைந்து வேதங்களையும் அவற்றின் ஆறு அங்கங்களையும் மற்றக் கலைகளையும் கற்று ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் தியாகராஜனது வடிவழகைக் கண்டு களித்துப் பணிந்துவிட்டுச் செல்வான்.

இவ்வாறு வேதப்பிரியனென்னும் பிராமண குமாரன் 32 பிராயம்வரையில் திருவாரூரில் தங்கி வித்தியா குருவின் அருளால் சகல சாஸ்திரங்களையும் கற்றபிறகு அவரிடம் குரு தக்ஷிணையை அளித்து விடைபெற்றுத் தனது தந்தையாராகிய யஜ்ஞதத்தரை யடைந்து பணிந்து நின்றான்.

அவ்வேதியரும் தம் மகனைக் கண்டு மகிழ்ந்து ஆசிகூறி அப்போதே அவனுக்கு விவாகம் செய்விக்க வேண்டுமென்று கருதினர். தமக்குச் சமமான வேதியர் குலத்தில் உதித்த ஒரு பெண்ணை வேதப்பிரியனுக்கு நிச்சயம்செய்து விட்டார். அதனையறிந்த அவ்வந்தண குமாரன் தந்தையைப் பணிந்து "தந்தையே! குடும்ப வாழ்க்கையை நான் விரும்பவில்லை. குருவின் கடாக்ஷத்தினாலும் உமது அருளினாலும் சம்பாதித்

துள்ள வித்தையின் ஞானத்தினால் தியாகராஜ பரப்ரம்மத்தின் திவ்ய குணங்களைக்கண்டு ஆனந்திப்பதிலும் சம்சார சுகம் சிறந்ததென்று எனக்குத் தோன்றவில்லை. நான் ஒரு பெண்ணை விவாகம் செய்துகொண்டால் பலவழிகளாலும் ஈசுவர குணானுபவங்களுக்கு இடையூறு நேரிடும். பிறகு அதை நீக்க முடியாது. ஆகையால் இப்போது நான் விவாகத்தை விரும்பவில்லை. தியாகராஜதியானம், கீர்த்தனம் இவற்றையே என் மனம் நாடுகிறது" என்றான்.

• அப்போது அவன் தாயும் தந்தையும் பந்துக்களும் அவ் வேதப்பிரியனுக்குப் பலவாறு நல்வார்த்தைகளைக் கூறியும் அவன் விவாகம் செய்துகொள்ள உடன்படவேயில்லை. இல்லற தர்மத்தின் மேன்மைகளைப் பலவாறு எடுத்துக் கூறியும் அவை அவன் மனத்தில் இடம்பெறவில்லை. பலாத்காரமாக வாவது தம் குமாரனுக்கு அப்பெண்ணை விவாகம் செய்விக்க யக்ஞதத்தர் முயன்றார். அதனையறிந்த வேதப்பிரியன் தியாகேசரை தியானம் செய்ய ஆரம்பித்தான். "தியாகேச, உம்முடைய குணங்களையும், பிரபாவங்களையும் அறிந்து கொள்ளவே நான் சாஸ்திர ஞானத்தை அடைந்தேன். அந்த ஞானத்தைக் குடும்பக்கடலில் வீசும் துக்கங்களாகிய அலைகளால் அலைப்பிவிட வேண்டுமென்று என் தாயும் தந்தையும் முயலுகிறார்கள். அம்முயற்சி பலியாவண்ணம் அருள்புரிவாய். என் ஜன்மம் முடியும் வரையில் உன் திவ்ய குணங்களே என் மனத்தில் தோற்றவேண்டும். பிறவித் துன்பம் தோன்றாத படி அருள்புரிவாய்" என்று தியானம் செய்துவந்தான்.

பிறகு அவனுடைய தாயும் தந்தையும் ஸம்பந்திகளுடன் சேர்ந்து நல்ல சுபமுகூர்த்தத்தில் பலாத்காரமாக அப்பெண்ணை அக்கினி சாக்ஷியாக அவனுக்கு விவாகம் செய்துவைத்தார்கள்.

"வேதப்பிரியன் அம்மணத்தை விரும்பாமல் இருக்கையில்

அவன் தாய் தந்தையர்கள் வலுவில் அப்பெண்ணை விவாகம் பண்ணுவித்தார்களாம். அத்தம்பதிகள் உலகில் எப்படி வாழ்வார்களோ" என்று அவ்விவாகத்தைப் பார்க்க அக் கலியாணப் பந்தலில் கூடியிருக்கும் ஆயிரம் பிராமணர்களில் பலர் சொல்லிக்கொண்டனர்.

சாஸ்திர முறைப்படி அப்பெண்ணை அவள் தாய் தந்தையர்கள் தாரைவார்த்து மந்திரத்தை உச்சரித்துத் தானம் செய்கையில் வேதப்பிரியன் இல்வாழ்க்கையில் மனம் செல்லாமலும் பெற்றோர் வார்த்தையை மீற முடியாமலும் தியாகராஜனை எண்ணிக்கொண்டே அப்பெண்ணின் கையைப் பிடித்தான். உடனே தியாகராஜன் அருளால் அப்பெண்ணுக்கு ஆணுரு உண்டாயிற்று. வேதப்பிரியனுக்கு சமமான உருவத்தை உடையவனாகவும் விபூதி ருத்திராக்ஷங்களை அணிந்துகொண்டு ஒரு சிஷ்யன்போல் அவனெதிரில் தோன்றி வணங்கினான். அதனைக்கண்ட எல்லோரும், "என்ன மாயை இது! சாஸ்திரமறிந்த இக்குமாரன் இப்பெண்ணை ஆணாக்கிவிட்டானே. இதற்காக இவனை சிக்ஷிக்கவேண்டும்" என்று ஒருவருக்கொருவர் பலவாறு பேசுகையில் தியாகராஜா ஓர் அசரீரி வாக்கினால் "ஓ வேதியர்களே! இதுஅந்த அந்தணச் சிறுவன் செய்த மாயையன்று. அவனுக்கு விருப்பமில்லாதபோது நீங்கள் ஒரு பெண்ணை விவாகம் செய்வித்தது நியாயமன்று. ஈசுவர தியானத்தையே விரும்பிய அவனுக்குத் தானஞ்செய்த இப்பெண்ணை நானே ஆணாக்கி அவனுக்குச் சிஷ்யனாக்கிவிட்டேன். நீங்கள் விசாரப்படவேண்டாம்" என்று உரைத்தார். அதைக்கேட்ட எல்லோரும் வியப்புற்று ஈசனைத் துதித்தனர். வேதப்பிரியனும் அவன் சிஷ்யனும் அதுமுதல் எல்லாக் கலைகளையும் பயின்று திருவாரூரிலேயே ஈசுவர பக்தியை மற்றும் பலருக்கு வெளிப்படுத்திக்கொண்டு முடிவில் கைலாசபதியின் திருமேனியில் ஐக்கியமானார்கள்.

## 44. நரபலியாக நின்ற வேதியனைக்காத்த லீலை.

விவாக சமயத்தில் ஸர்வாபரணங்களால் அலங்கரிக்கப் பெற்ற ஒரு பெண்ணைத் தம் பக்தனுக்காகத் தியாகேசர் ஆணைக்கி விட்டாரென்ற அற்புதத்தைக்கேட்ட நிராயு என்னும் பாஞ்சால தேசத்து மன்னனொருவன் தியாகராஜாவின் திருமேனியை நேரிற்கண்டு ஆனந்திக்க வேண்டுமென்று உறுதிபூண்டான்.

அதற்காக ராஜ்யபாரத்தை அமைச்சரிடம் ஒப்புவித்து விட்டு சோழநாட்டின் திலகமாக விளங்கும் திருவாரூருக்கு வந்து கமலதீர்த்தம் முதலிய புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து பூதானம், வஸ்திரதானம், சுவர்ணதானம், ரஜததானம் முதலிய பல சிறந்த தானங்கள் புரிந்தான். பிறகு தேவாலயத் தில் விளங்கும் தியாகேசரின் அழகையும் கருணையையும் கண்டு வியப்புற்று இமைகொட்டாத கண்களையுடையவனாகி இமை யவர்போல நின்று துதிசெய்து விலையற்ற நவரத்தினங்களினால் பிரபுவின் பாதாரவிந்தங்களில் அர்ச்சனை செய்து திவ்யாபி ஷேகம் நகரப்பிரதக்ஷிணம் முதலிய உத்ஸவங்களை நடப்பித்து ஆனந்தமுற்று அந்த நாட்டரசனாகிய உத்தமசோழ மகாராஜ னுடைய அரண்மனையில் சிலநாள் வரையில் தங்கியிருந்தான். அப்போது பாஞ்சால நாட்டிலுள்ள வசுராதனென்னும் சாமந்த ராஜனொருவனிடம் ஒருநாள் காலவமஹரிஷி வந்து அவன் அரண்மனையிலுள்ள தேவாலயத்தில் தங்கியிருந்து மழைக் காலத்தைக்கழிக்க வேண்டுமென்று விரும்பினார். அவரை வசுராதன் பணிந்து துதிசெய்து அவரது ஆசியைப்பெற்று அவர்து கருத்துப்படியே மழைக்காலத்தைத்தன் அரண் மனையில் கழிக்கும்படி ஏற்பாடு செய்தான்.

அரண்மனையிலுள்ள தேவாலயத்தின்கண் விளங்கும் ரத்தினலிங்கஸ்வரூபியைக் காலவரிஷி தரிசித்து அவரது

தியானத்திலேயே மழைக்காலமாகிய நான்கு மாதங்களை அங்கே கழித்துவிட்டு வெளியே செல்ல முயன்றார். அப்போது அவரை வசுராதராஜன் வணங்கி நிற்கையில் அவன் மீது கருணைகொண்டு மகரிஷியானவர் ஞானதிருஷ்டியினால் அவனுக்கு புத்திரப்பேறு இல்லாமையை அறிந்து, "ஓ பூபால, நீ நரபலியை அளித்து ஒரு யாகம் செய்வாயானால் உனக்கு ஒரு சிறந்த புத்திரன் உதிப்பான்" என்று சொல்லிவிட்டு இமய மலைக்குச்சென்றனர்.

காலவமகரிஷியின் உபதேசப்படி யாகம் செய்யக்கருதிய வசுராதமன்னன் அளவற்ற திரவியத்தை எடுத்துக்கொண்டு ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு நகரத்திலும் ஒவ்வொரு அக்ரஹாரத்திலுமுள்ள வேதியர்களின் வீடுகளை நாடி "நரபலிக்காக ஒரு புத்திரனை அளிப்பீர்களா? அதற்காக அளவற்ற திரவியத்தை அளிக்கிறேன்" என்று சொல்லி விசாரித்துக்கொண்டு சென்றான்.

அப்போது திரமிடதேசத்தில் தாதகிபுரத்திலுள்ள சிவதாசனென்னும் ஓரேழை அந்தணனுக்கு மூன்று புத்திரர்கள் இருந்தார்கள். அவர்களில் நடுப்புத்திரனை அவ்வரசனுக்கு அளிப்பதாக அவனுடைய தாய் தந்தையர் கூறி அரசனிடமிருந்து அளவற்ற திரவியத்தை அடைந்து மத்திய குமாரனை நரபலிக்காக அவனுக்கு விற்றனர். தாய் தந்தையருடைய உத்திரவை முகமலர்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு அவ்வந்தணச் சிறுவன் அவ்வரசனுடன் அவனது நகரத்தை அடைந்தான். பிறகு அவ்வரசன் அநேக மகரிஷிகளையும், பிராமணோத்தமர்களையும் வருவித்து அவர்களை முறைப்படியே பூஜித்து அவர்களைக் கொண்டு யாகசாலையை நிர்மாணம் செய்து யாகம் செய்யத் தொடங்கி யூபஸ்தம்பத்தில் அவ்வந்தண குமாரனைக் கட்டினன்.

யாகத்தில் பலியிடுவதற்காக அளவற்ற திரவியத்தை வாங்கிக்கொண்டு தன் குமாரனை அரசனிடம் கொடுத்த பிராமணனுக்கும் அவன் மனைவிக்கும், தம் நடுக்குமாரனைப் பற்றி மிக்க அனுதாபமுண்டாயிற்று. "மூத்த குமாரனும் இளைய குமாரனும் உலகில் வாழும்பொழுது நாம் நமது மத்திய குமாரனை மாத்திரம் வஞ்சித்து விற்றுவிட்டோமே. நமது கருத்தை அறிந்து அவன் வெகு சந்தோஷத்துடன் நம் கட்டளையைச் சிரசால் வகித்து அரசனது யாகத்தில் உயிரைத் துறக்கச்சென்றனே. அவனது குணமல்லவா உத்தமகுணம். இப்படிப்பட்ட உத்தம புத்திரனை இழந்தபின் நமது ஜன்மம் இருந்து என்ன பயன்? இந்தத் திரவியத்தைக் கண்டு மோகங் கொண்டோமே! இவ்வித பாவப்பொருளால் நமக்கு நன்மை உண்டாகுமா? மோகத்தினல் புத்திரனை விற்ற திரவியத்தை நாம் வைத்துக்கொள்ளலாகாது. தானத்துக்கும் தக்கதன்று. கொடிப்பொழுதில் புத்திரனை விற்றப்பாதகத்தைத் தேடிக் கொண்ட நாமிருவரும் தியாகராஜாவின் பாதகமலத்தைப் பணிந்து இதற்குப்பிராயச்சித்தம் தேடிக்கொள்ளவேண்டும்" என்று யோசனை செய்து திருவாரூரையடைந்து தியாகேசனை வணங்கி நின்றனர்.

பூர்வஜன்மபாவத்தினல் நிலையற்ற திரவியத்தைவிரும்பிப் புத்திரனை விற்ற அவ்வேதியன் மீது தியாகேசர் கருணை புரிந்து அசரீரி வாக்கினல் "ஓ பக்தர்களே! உங்கள் குமாரனைப்பற்றி நீங்கள் வருத்தமுற வேண்டாம். திரவியத் தில் உங்களுக்கிருந்த அற்ப ஆசையினல் நீங்கள் அவ்வுத்தம குமாரனை விற்பனை செய்தீர்கள். ஆனாலும் நாம் அவனை மீட்டுவிட்டோம். அரசனுடைய யாகமும் நரபலியாலடைய வேண்டிய பயனை அடைந்துவிட்டது. அவ்வரசனே தேரி லேற்றி உங்கள் மைந்தனை உங்களிடம் கொண்டுவந்து விடு வான். இனி உங்களுக்கு நமது தத்துவ ஞானம் உண்டாகும்" என்று அவ்விருவருக்கும் உத்தரவிட்டார்.

வசுராதன் யாகசாலையிலும் அசரீரி வாக்கினால் "இவ் வேதிய குமாரனை யூபஸ்தம்பத்திலிருந்து அவிழ்த்துவிடுங்கள். அவனை நரபலியாகக் கொடுத்தால் எந்தத் தேவதை சந்தோஷமடைந்து உங்கள் அரசனுக்கு மகனை அளிக்கக் கூடுமோ அந்த தேவதை நரபலியில்லாமலே நமது கட்டளையினால் திருப்தியுற்று நற்புத்திரனை அளிக்கும்" என்று உத்தரவு பிறந்தது.

இவ்வித அசரீரி வாக்கைக் கேட்ட மகரிஷிகள் யாகசாலையின் பூர்வபாகத்தில் குண்டத்தினருகில் அக்கினியைப் பாது காத்துக்கொண்டிருக்கும் அரசனையடைந்து "ஓ ராஜதிலக, பரமேசன் உமது யாகத்தைப்பற்றி மகிழ்ந்து நரபலியில்லாமலே இந்த யாகத்தை நிறைவேற்றி விட்டார்" என்று அவ்வசரீரியின் மகிமையை உரைத்தனர். அது கேட்ட அரசன் மகிழ்ந்து அவ்வேதிய குமாரனை நமஸ்கரித்துப் பூஜித்து அவனுக்கு அளவற்ற திரவியத்தைச் சன்மானமாக அளித்துத் துதி செய்து தேரிலேற்றித் தாதகிபுரத்துக்கு அனுப்பினான். பிறகு யாகத்தை அரசன் பூர்த்திசெய்து அவ்வாறே ஒரு புத்திரனை அடைந்து சிறப்புடன் விளங்கினான்.

அனுதாபத்தை அடைந்த பிராமண தம்பதிகளும் தியாகராஜனுடைய அசரீரி வாக்கினால் சந்தோஷமடைந்து தியாகேசரைப் பணிந்து தம்மிருப்பிடம் செல்லுகையில் அசரீரி வாக்குப்படி அரசனால் தேரில் ஏற்றியனுப்பப்பெற்ற புத்திரன் வீட்டில் வந்திருக்கக் கண்டு மகிழ்ந்தனர்.



## 45. விமானிகளை வாழ்வித்த லீலை.

தனத்திலாசைகொண்ட வேதியன் தன் மத்யம குமாரனை நரபலிக்காக விற்பனை செய்த பிறகு அனுதாபத்தையடைந்து ஈசனை வேண்டிக்கொள்ளவே அவ்வேதியன்மீது கருணை கொண்ட தியாகேசன் நரபலி இல்லாமலே அரசனது யாகத்தை நிறைவேற்றுவித்து அவ்வந்தண குமாரனை உயிருடன் காப்பாற்றி தந்தையிடம் திரும்பச்செய்தானென்று தெரிந்து வியப்படைந்த பாஞ்சால நாட்டரசன் தன் நாட்டுக்குச் சென்று தன் சிற்றரசனாகிய வசுராத பூபாலனைக் கொண்டு தியாகராஜருக்கு அநேக நவரத்தின ஆபரணங்களைச் செய்வித்தான்.

இவ்வளவு மகிமைவாய்ந்த தியாகராஜாவின் கடாக்ஷத்தினால் பூவுலகில் பலநாள் வரையில் ஒருவிதமான தீங்கும் நேரிடாமல் வருணாச்சிரம தருமங்கள் குறைவின்றி நடந்து வந்தன.

ஒரு சமயம் சுவர்க்கலோகத்தில் தேவர்களின் மீது அசுரர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து பலவித ஆயுதங்களைப் பிரயோகித்து தேவசேனையைப் பிளந்து திக்குகளில் ஓடிவிடும்படி செய்தனர். கொடிய அசுரர்களால் பங்கப்படுத்தப்பெற்ற தேவசேனை பயமுற்று வாடி நிற்கையில் தேவேந்திரன் மற்றத் திக்குப்பாலகர்களைத் தனக்கு உதவியாகக்கொண்டு அவ்வசுரர்களுடன் போர் செய்ய ஆரம்பித்தான்.

இவ்விஷயங்களை அறிந்த பிரமலோசனனென்னும் அசுர மன்னனொருவன் நெடுநாள் தவம்புரிந்து தான் பெற்ற வரத்தினால் கர்வமடைந்து அப்போர் முனையில் நின்று காலதண்டமென்னும் ஆயுதத்தைக் கையிலேந்தி விளங்கும் யமதர்மராஜனெதிரில் போய் அவனது வாகனமாகிய எருமையின்மீது ஓர்

இருப்புலக்கையை வீசியெறிந்தான். அதனல் அடியுண்ட அவ்வெருன்ம மண்டையில் தாக்கப்பட்டு மூக்கினுலும் வாயி னுலும் உதிரத்தைக்கக்கிப் பயந்து பின்வாங்கிவிட்டது. அதனல் வெகுண்ட யமதர்மன் தன் உக்கிரமான தண்டத்தை அவ்வசுரன்மீது வீசினன். அசுரன் பயந்து தன் மாயை யினல் ஆகாயத்தில் மறைந்து ஒளிந்துகொண்டான். அந்த தண்டாயுதமானது அசுர சேனையின்மீது வீழ்ந்து அநேகரை அழித்தது. அதைக்கண்ட மாயாவிகள் யமதர்மனுடைய இருப்பிடம்சென்று அங்குள்ளவர்களை அடித்துக் கொன்று சிலரைத் துறத்திச் சிலரை முறித்துப் பலவிதமான துன்பங் களைச் செய்தனர். தன் இடத்தைக் காக்கும்பொருட்டு யமதர்மன் அடியுண்ட வாகனத்துடன் வாடிய முகத்தோடு தன் இருப்பிடம் வந்தான்.

அப்போது பிரமலோசனன் அளவற்ற மாயாவிகளை ஏவி அக்கினியையும், வருணனையும், பவனையும், குபேரனையும் மாயையினல் மோகமுறச்செய்து அவர்களுடைய திவ்விய ஆயுதங்களையெல்லாம் முறித்துவிட்டு அவர்களுடைய கண் களில் இருளை உண்டுபண்ணச்செய்தான். இவ்வித மாயை யினல் அழிக்கமுடியாத திக்குப்பாலகர்கள் சாதாரண மனி தர்கள்போல் வெகுநேரம் வரையில் பிரமத்தையும் மூர்ச்சை யையும் அடைந்தனர். அப்போது பிரமலோசனன் இந்திரன் கையில் விளங்கும் வஜ்ராயுதத்தின் மீது ஒருவித மாயையை ஏவி அதை மறையச்செய்து இந்திரனுடன் கைச்சண்டை செய்தான். அதில் இந்திரன் பயந்தோடும்படி ஏற்பட்டது.

இவ்வாறு பிரமலோசனசுரன் தன் மாயையினுலும் அசுர பலத்தினுலும் திக்குப்பாலகர்கள் எழுவரையும் தன் எதிரில் நிற்கவொட்டாமல் ஜயித்துவிடவே பலமற்ற தேவர்கள் கைலாசபதியாகிய சங்கரனிடம் சரணடைந்து துதிசெய்து தங்க ளுக்கு நேரிட்ட அபஜயத்தையும் சுவர்க்க உலகம் அழிவுற்ற

தையும் தேவகாரியங்கள் பாழாகிவிட்டதையும் தெரிவித்து முறையிட்டனர்.

சங்கரனே புண்ணிய க்ஷேத்திரத்தில் தியாகராஜாவாக விளங்குவதால் அசரீரி வாக்கினால் ஏவப்பட்ட தேவர்கள் எல்லோரும் வெள்ளியங்கிரியிலிருந்து திருவாரூருக்கு வந்து தியாகராஜனுடைய பாதகமலங்களைக் கற்பக விருக்ஷ மலர்களால் பூஜித்துத் தமக்கு நேரிட்ட துன்பத்தைப் பற்றி அபயம் வேண்டினர். உடனே தியாகேசர் அவர்கள்மீது தம் ஒப்பற்ற கடாக்ஷத்தைச் செலுத்தி அவர்களுக்கு அபயமளித்துத் தாம் ஒரு மனித வடிவங்கொண்டு கையில் வில்லுடன் தேவலோகம் சென்று அவ்வில்லில் நாணைப் பூட்டி அந்நாண் கயிற்றை ஒலிக்கும்படி இழுத்தார். அந்நாணொலி அசுரர்கள் காதில் நுழையும்போதே மிக்க கோபத்தைத் தூண்டி விட்டது. அஃதுவரையில் கேட்டிராத நாணொலியின் கொடுமையையறிந்து, அசுர வீரர்கள் கடுஞ்சினங்கொண்டு கர்ஜனைசெய்து தோள்களைத் தட்டிக்கொண்டும், பற்களைக் கடித்துக்கொண்டும் அவ்வேடன்மீது சீறிக்கொண்டும் "கொன்றுவிடுகிறேன், முறித்துவிடுகிறேன், பக்ஷித்துவிடுகிறேன், பிசைந்துவிடுகிறேன், தேய்த்துவிடுகிறேன், தூளாக்கிவிடுகிறேன்" என்று இவ்விதம் அட்டகாசம் செய்துகொண்டு கூட்டம் கூட்டமாய் வேடரூபம் பூண்ட பரமசிவன்மீது பாய்ந்து நெருக்கமாய் அம்புகளைப் பிரயோகித்தார்கள். இரும்பு உலக்கைகளை வீசினார்கள். மலைகளை எறிந்தார்கள். கத்திகளை விடுத்தார்கள். கயிறுகளைச் சுழற்றினார்கள்.

இவ்வாறு அக்கொடிய அசுரர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து "இன்று அஸ்தமனத்துள் தேவர்கள் எல்லோரையும் தொலைத்துவிடுவோம். சூரியனையே பிடுங்கிவிடுவோம். யமனை அழித்துவிடுவோம். கடலைக் கலக்கிவிடுவோம். மலைகளைத் தூளாக்கிவிடுவோம்" என்று தம்மையே புகழ்ந்து

கொண்டு பரமசிவனருகில் நின்று போர்புரிந்தனர். அப்போது திசைகள் நடுங்கின. தேவர்கள் திகைத்தனர். ரிஷிகள் ஈசனைத் துதித்தனர். தியாகேசர் அப்போது தம் அற்புத சக்தியினால் ஒரு மாயையை உண்டுபண்ணி ஒரு அசுரன் கண்ணுக்கு மற்றோர் அசுரன் மானிட வேடன்போல் தோன்றும்படி மகாமாயையை ஏவினர். ஈசுவரனுடைய அம்மகாமாயையை மீறமுடியாத அவ்வசுரர்களெல்லோரும் இரண்டு முகூர்த்தகாலத்துக்குள் ஒருவரையொருவர் வெட்டிக் கொண்டு உயிரைவிட்டனர். அந்த அசுர நாசத்தைக்கண்டு களித்த பரமசிவன் கடைசியாய் நின்று போர்புரியும் சில வீரர்களைக்கண்டு திரிபுர ஸம்ஹாரம்செய்த பாணங்களைப் பிரயோகித்தார். அதனால் அசுரர்கள் பயந்து ஓடிச்சென்று பாதாளத்தில் நிலைபெற்றனர்.

தியாகேசர் இவ்வாறு வானுலகுக்கு உண்டான இடரை நீக்கியபோது தேவர்கள் மலர்மாரி சொரிந்தனர். தேவ துந்துபி நாதம் திசைகளெங்கும் முழங்கிற்று. அரம்பையர் ஆடினர். கந்தர்வர் பாடினர். ரிஷிகள் துதித்தனர். தேவர்கள் பணிந்தனர். முன்போலவே திக்பாலகர்களும் தேவர்களும் தத்தம் நிலையில் விளங்கினர்கள்.



## 46. பஸ்மத்தை அரசனுக்கிய லீலே.

தேவர்களுக்கு அபயமளித்த தியாகராஜர் அசுரக் கூட்டத்தை அழித்துத் தேவர்களைத் தமது பதவியில் வீற்றிருக்கச்செய்து தேவர்களால் வருஷிக்கப்பட்ட கற்பக விருக்ஷ மலர் வாசனையுடனே திருவாரூர் வீதிவழியே வேடவடிவங்கொண்டு நடந்துவந்து ஆலயத்துக்குள் சென்றார். அவர் சென்ற வழியெல்லாம் நிகரற்ற தேவ மலர்களின் வாசனை வீசுவதையறிந்த கமலாலயத்தின் மலர்களில் இருந்த வண்டுகள் யாவும் அப்பரிமளத்தால் இழுக்கப்பட்ட மனத்துடன் தியாகேசர் ஸந்நிதானத்தைச் சுற்றிப் பிரதக்ஷிணம்செய்து துதிப்பதுபோல் விளங்கின.

திருவாரூர் நகரை அப்போது பரிபாலிக்கும் ஸம்வர்த்த சோழ மகாராஜனுடைய பட்டமகிஷி பத்துமாத கர்ப்பிணியாக இருந்தாள். அழகிய மாலை நேரத்தில் திசைகளிலிருந்து பறவைகள் கூட்டிற்குத் திரும்பும் அழகைப் பார்க்கும்பொருட்டுத் தன் தோழிகளுடன் உப்பரிகையின்மேல் விளங்கும் சந்திர சாலையின் முன் நின்றனள். அக்கொடிய ராக்ஷச வேளையில் மாயா மந்திரத்தை உச்சரித்துக்கொண்டே ஆகாயமார்க்கமாகச் சென்ற ஓர் அரக்கனுடைய கொடிய உடம்பின் நிழலானது அப்பட்ட மகிஷியின் சரீரத்தில் விழுந்தது. அதனால் திடீரென்று பயத்தையும், நடுக்கத்தையும், பெருமூச்சையும் அடைந்த பட்டமகிஷியானவள் மெய்மறந்து மூர்ச்சையுற்றாள். அதைக்கண்ட தோழியரும் அந்தப்புர மாதரும் பயந்து கதறி அரசனுக்கு அறிவித்தனர்.

காரணமின்றி ராஜமகிஷிக்கு உண்டான மூர்ச்சை நீங்கும் பொருட்டு அரசனால் ஏவப்பெற்ற வைத்தியர்களும் அதை நீக்கமுடியாமல் திகைத்தனர். அக்கொடிய அரக்கனுடைய

மாயையின் சம்பந்தம் உண்டாகவே ராஜமகிஷியின் கர்ப்பமானது கலங்கிக் கருகி அக்கினியினால் எரிக்கப்பட்ட கட்டையின் சாம்பல்போல் வெளியில் தோன்றிற்று.

அவ்விஷயத்தை அறிந்த மகாராஜனும் மந்திரியும் மிக்க துக்கத்தை அடைந்தனர். "தியாகராஜனருளால் வளர்ச்சியுற்றிருக்கும் சோழ வம்சத்தின் கர்ப்பம் இவ்வாறு சாம்பலாய் வெளிவந்தது நியாயமாகுமா? யாருடைய பாவத்தினால் இப்படி நேர்ந்ததோ?" என்று தியாகேசரின் பாதகமலங்களை மனத்தில் தியானித்துக்கொண்டே அந்த ஸம்வர்த்த சோழ மகாராஜன் புலம்பினான். அப்போது தியாகப்பிரபு கருணை கொண்டு ஆகாயவாணி மூலம் "ஓ, நமது பக்தர்களிற் சிறந்த பூபாலனே! உனது பட்டமகிஷியின் கர்ப்பம் சாம்பலாக மாறிவிட்டதை நினைந்து நீ வருத்தமடையவேண்டாம். உனது தேவி திசைகளின் அழகைப் பார்த்துக்கொண்டு நிற்கையில் ஆகாயமார்க்கமாகச் சென்ற ஓர் அரக்கனுடைய சாயை படவே இவ்விதம் நேரிட்டது. இன்னும் சிறிது நேரத்துக்குள் அந்தச் சாம்பல் தொகுதியே அழகிய ஓர் அரசகுமாரனாகத் தோன்றி உன் வம்சத்தைச் செழிக்கச் செய்யும் சிறப்புடன் விளங்குவான். அதற்குள் நீ நமது ஸன்னிதானத்தை அடைந்து நமது பாத பீடத்தில் விளங்கும் விபூதியையும் வில்வத்தையும் எடுத்துச் சென்று உன் தேவியின் சரீரத்தில் தடவுவாயாக. உடனே எல்லாம் மங்களமாக முடியும்" என்று உத்தரவிட்டனர்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட ஸம்வர்த்த மன்னன் அப்போதே கமல தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து சுத்தமான ஆடையை அணிந்து பிரபுவின் சன்னிதானத்தை வலம்வந்து வணங்கி அவரது பாதபீடத்தில் இருக்கும் விபூதியையும் வில்வதளத்தையும் எடுத்து சிரஸில் வைத்துக்கொண்டு வந்து தேவிக்கனுப்பினான். தோழிகள் பக்தியுடன் அவ்விபூதியையும் வில்

வத்தையும் வாங்கித் தேவியின் சரீரத்திலும், கர்ப்பச் சாம்பலி லும் தடவவே ஒரு கொடிக்குள் அழுதுகொண்டிருக்கும் அழகிய குழந்தையொன்று அங்கே உற்பவித்தது. அவ்வழு குரலைக்கேட்டு எழுந்தவள்போல் ராஜமகிஷி கண்களைத் துடைத்துக்கொண்டு எழுந்து குழந்தையைக் கண்டு களித்து தன் மார்போடணைத்துக் கொண்டாள். சோதிடரும் புரோகி தரும் வேதியரும் அப்போது அரசனால் அழைக்கப்பெற்று வந்து ஜாதகர்மம் நாமகரணம் முதலியவற்றைத் தர்ம சாஸ்திர முறைப்படி நடத்தி வைத்தார்கள். பூபதி அப் போது செய்த பலவித தானங்களை வேதியர்கள் பெற்று மகிழ்ந்து ஆசி கூறினர். மந்திரிமார்களின் கட்டளையினால் அந்தருணத்தில் செய்விக்கப்பெற்ற குளிர்ந்ததோர் அபி ஷேகத்தினால் மனங்குளிர்ந்து தியாகப் பிரபுவும் கருணையுடன் ராஜ குழந்தையையும் உலகையும் காத்துவந்தார். பஸ்மத்தை அரசகுமாரனுகச் செய்த தியாகேசனுடைய அற்புதச் செயலைக் கேட்டவர்கள் யாவரும் ஈசனைத் துதித்தனர்.

இந்த லீலையைக் கேட்பதினால் பரமேசனிடம் விளங்கும் அஷ்ட சக்தியின் மேன்மை விளங்கும்.



## 47. பிரமனுக்கு அருள்செய்த லீலை.

தியாகராஜா இவ்வாறு அசுரர்களின் மாயையையும் அரக்கர்களின் மாயையையும் அவர்களது பலத்தையும் அழித்துப் பதினன்கு உலகுகளையும் கருணையாலும் பார்வதி தேவியின் துணையாலும் பாதுகாத்துவந்தார். அப்போது சத்தியலோகத்தில் ஸரஸ்வதி தேவியின் நாயகராக விளங்கும் சதுர்முக தேவர் தம் நான்கு முகங்களாலும் நான்கு வேதங்களையும் ஓதிப் பரம்பொருளைத் துதிசெய்து வருகையில் ஒரு நாள் பிரம்மதேவருடைய மதி மயங்கிவிட்டது. அதனல் அவரது முகத்திலிருந்து வெளிக்கிளம்பும் வேதங்கள் தகுந்த உச்சரிப்பையடையாமல் அபஸ்வரங்களால் அழிக்கப்பட்ட பதங்களையுடையனவாக விளங்கின. அதைக்கண்ட தேவ ரிஷிகளும் பிரம்ம ரிஷிகளும் மானஸ புத்திரர்களும் பயத்தை யடைந்து பிரம்ம தேவனருகே சென்று வணங்கி, "திரிமூர்த்திகளின் மத்திய ஸ்தானத்தை யடைந்து விளங்கும் கமலாஸனனே! நீர் இப்போது வேதங்களை ஏன் இவ்வாறு அபஸ்வரத்தோடு உச்சரிக்கிறீர்? என்ன காரணம்?" என்று கேட்கையில் பிரம்மதேவர் அவர்கள் கேட்டதை அறிந்து கொள்ளவில்லை. சிருஷ்டி முறையையும் நன்கு செய்யவில்லை.

அப்போது அவர்கள், "பிரமதேவருக்கு இவ்வித புத்தித் தடுமாற்றம் ஏற்பட்டபடியால் இனி உலக சிருஷ்டியின் முறையும் குன்றிவிடும். மந்திர கலாபங்களும் யாக காரியங்களும் முறைதவறி நடக்க நேரிடும். அநேக மந்திர ராஜங்களுக்கு அதிஷ்டான தேவதையான பிரமதேவருக்கு இவ்வித் துன்பம் நேரிட்டபடியால் மூன்று உலகங்களுக்கும் இது ஓர் அபசகுனமேயாகும்" என்று எண்ணி ஜீவராசிகளுக்கு இதனல் என்ன துன்பம் நேரிடுமோ தெரியவில்லையே! என்ன செய்வோம்?" என்று சற்று நேரம் ஆலோசனைசெய்து சகல கலை

களுக்கும் அதிஷ்டான தேவதையாகவும் பிரமருக்குத் தரும பத்தினியாகவும் விளங்கும் ஸரஸ்வதி தேவியின் அருகில் சென்று பணிந்து, "ஓ, உலகமாதாவே, பிரமன் தேவியே, பிந்துஸ்வரூபியாகவும், பீஜஸ்வரூபியாகவும், நாதஸ்வரூபியாக வும், அக்ஷரஸ்வரூபியாகவும், வேதஸ்வரூபியாகவும், சாஸ்திர ஸ்வரூபியாகவும், சாஸ்திரார்த்த ஸ்வரூபியாகவும், மந்திர ஸ்வரூபியாகவும், மந்திரார்த்த ஸ்வரூபியாகவும், தந்திர ஸ்வரூபியாகவும், தந்திரார்த்த ஸ்வரூபியாகவும் விளங்கும் வாணி தேவியே! உனக்கு நமஸ்காரம். உனது கடாக்ஷம் இல்லையா ஞல் இவ்வுலகில் யார்தான் பிழைத்திருக்க முடியும்? சிறந்த மகிமையுள்ள உன் நாதரான பிரமதேவர் தேஜஸ்ஸையும், மதி யையும் ஏன் இவ்விதம் இழந்திருக்கிறார்? இதனல் உலகமே பாழாகிவிடும்போல் தோற்றுகிறதே" என்று முறையிட் டார்கள்.

அதைக்கேட்ட சாரதாதேவியும் "மகரிஷிகளே, மானஸ புத்திரர்களே! பிரமதேவருக்கு இப்போது நேரிட்டிருக்கும் துன்பத்தின் காரணம் எனக்கும் புலப்படவில்லை. என்ன செய்வோம்" என்று உரைக்கையில், திரிகால ஞானியாகிய நாரத மாமுனிவர் அவ்விடம் வந்து தமது தாயை வணங்கி, "பூவுலகில் காவிரியின் கரையில் விளங்கும் தியாகராஜாவின் அபிஷேக தீர்த்தத்தினல் நமது தந்தையின் திருமேனியில் புரோக்ஷணம் செய்தால் மதிமயக்கம் என்னும் இந்நோய் நீங்கி விடும்" என்று பரமேசனுடைய மகிமையையும் முன்பு தமக்கு நேரிட்ட அசுர மாயையை நீக்கித் தம்மைக் காத்தருளிய பிரபுவின் பிரபாவத்தையும் எடுத்துக் கூறினர். அதைக் கேட்ட ஸரஸ்வதி தேவியும், தேவ ரிஷிகளும் பிரம ரிஷிகளும் மானஸ புத்திரர்களும், நாரதரும் ஒரே கூட்டமாகத் திருவா ரூரை அடைந்து தியாகராஜாவுக்குச் சிறந்ததோர் அபிஷே கத்தைச் செய்து அந்த சுத்த தீர்த்தத்தினல் சதுர்முகனின்

சிரஸில் புரோக்ஷணம் செய்தவுடனே அவரது முகத்தில் சூரிய பிரகாசம்போன்ற பிரமதேஜஸ் உலாவியது. கண்கள் மலர்ச்சியுற்றன. நாவிலிருந்து முன்போல் வேதங்கள் அபஸ்வரமில்லாமல் வெளிவந்தன. அவரது புத்தியும் தெளிவையடைந்து முன்போல் உலக சிருஷ்டிகாரியத்தில் செல்ல ஆரம்பித்தது.

பரமேசனுடைய அபிஷேக ஜலத்தைப் புரோக்ஷணை செய்ததனால் உண்டான இவ்வித மேன்மையை அடைந்த பிரமதேவர் பத்மாஸனத்தில் வீற்றிருந்து நான்கு முகங்களினாலும் நான்கு வேதங்களையும் ஓதத்தொடங்கினார். சிருஷ்டிகர்த்தாவான பிரமதேவருக்கும் உண்டான மருளைத் தீர்த்த தியாகராஜனுடைய திவ்விய குணங்களை யெல்லாம் அவர் ஸத்தியலோகவாசிகளுக்குச் சிறப்பாக எடுத்துக் கூறி விளக்கினார். அதுமுதல் பிரமதேவருடைய தர்ம பத்தினியாகிய சாரதா தேவியும் அவருடைய மானஸ புத்திரரான பதினொரு மகரிஷிகளும் பிரமனுக்கு உண்டான இடரை நீக்கிய தியாகராஜருக்கு ஆண்டுதோறும் ஒருமுறை கங்கா ஜலத்தினால் திவ்யாபிஷேகம் செய்விக்க ஆரம்பித்தனர்.



## 48. பிலம்பாஸுரன் வாய் பிளந்த லீலை.

பிலம்பனெனும் அசுரனொருவன் முன் ஒரு ஸமயம் நெடுநாள் அருந்தவம்செய்து பார்வதிபதியாகிய சங்கரனிடமிருந்து நிகரற்ற வரத்தைப் பெற்று அதனால் கர்வத்தை அடைந்து தனக்கு வரமளித்த உமைபாகனிடமே அவ்வரத்தின் பயனைப் பரீக்ஷிக்க வேண்டுமென்று நினைத்தான்.

தனது தவம் முடியும்வரையில் பரமேசனிடத்தில் அளவற்ற பக்தியைச் செலுத்திய அவ்வசுரன் வரம்பெற்ற பிறகு தன் ஜாதியின் குணத்தாலும் துஷ்ட அசுரர்களின் சேர்க்கையாலும் துஷ்ட அரக்கர்களின் ஏவுதலாலும் ஈசனிடம் வைத்திருந்த பக்தியைத் துறந்து அவரையே அவமானப்படுத்த எண்ணினன்;

ஒருநாள் அவன் கைலாச மலைக்குச் சென்று ப்ரமதகணங்களால் புடைசூழப்பெற்றவராயும், தேவரிஷிகளாலும், பிரமரிஷிகளாலும், திக்குப்பாலகர்களாலும், முனிவர்களாலும், யக்ஷர்களாலும், கந்தர்வர்களாலும், கின்னரர்களாலும், கிம்புருஷர்களாலும் தொழப்பட்டுத் துதிக்கப்பெற்றவராயும், உமாதேவியுடன் விளங்கும் சங்கரனைக் கண்டு பணியாமல் கர்வத்தினால் தலையை அசைத்துக்கொண்டு ஈசனெதிரில் சென்று, "ஓ, கைலாசபதியே, மூவுலகையும் காக்கும் பரம்பொருளென்று தொண்டர்கள் உம்மைத் துதிக்கிறார்களே! இவ்வளவு வயதுசென்ற பிறகும் மூவுலகையும் காக்க இப்போது உம்க்கு பலம் இருக்கிறதா? அவ்வித பலம் உமக்கு இருப்பது உண்மையாயின் நீர் என்னுடன் மல்யுத்தத்துக்கு வந்து உமது பலத்தை வெளிக்காட்ட வேண்டும். இல்லாவிடில் உம்மை இக் கைலாசத்திலிருந்து கீழே இறக்கி விடுவேன்" என்று அஞ்ஞானத்தினால் தம்மை வலுவில் மல்யுத்தத்துக்கு அழைத்

தபோது கைலாசபதியானவர், "ஓ! பிலம்பாசுரனே, உனது வலிமையை நான் அறிவேன். பலாத்காரமாக நீ என்னை மல்யுத்தத்துக்கு அழைக்கிறாய். அதற்கு நானும் சம்மதிக்கிறேன். ஆகிலும் பாரத வருஷத்தின் தென்திசையில் உள்ள புண்ணிய க்ஷேத்திரத்தில் என் துணைவர் ஒருவர் இருக்கிறார். அவருடன் நீ முதலில் மல்யுத்தம் செய்தபிறகு என்னுடன் யுத்தம் செய்ய வரலாம். அதற்குள் நானும் சித்தமாகிக் காத்திருக்கிறேன்" என்று உத்தரவிட்டார்.

தனக்கு வரமளித்த கைலாசபதி இவ்வாறு உத்தரவிட்டதை மீறமுடியாமல் தாக்ஷிண்யத்தால் அவ்வசுரன் அதற்கு இணங்கினான்.

"சிவபிரானுடன் இவ்விடத்திலேயே யுத்தம்செய்து இவரை மாய்த்தபிறகு இவருடைய துணைவரிடம் செல்லலாம்" என்று பலவிதமாக அசுரர்கள் கலகம் செய்தார்கள். ஆனாலும் பிலம்பாசுரன் கைலாசபதியின் கட்டளையை மீறமுடியாமல் அவர்களுக்கு ஒருவாறு நன்மொழி கூறி அவர்களை அழைத்துக்கொண்டு வாயுவேகத்துடன் ஆகாயமார்க்கம் பறந்து சென்று புண்ணிய க்ஷேத்திரத்தை அடைந்தான்.

பிலம்பாசுரன் தன் துணைவர்களுடன் திருவாரூருக்கு வருமுன்னரே கைலாசபதியாகிய தியாகேசர் ஒரு யுத்த வீரனுடைய உருவத்தை எடுத்துக்கொண்டு நகரின் வெளியே நின்று தோள்களைத் தட்டிக்கொண்டு விருஷபராஜன்போல் கர்ஜனை செய்துகொண்டிருக்க, அப்புருஷனே கைலாசபதி கூறிய புருஷனாக இருக்கலாமென்று நினைந்து வானிலிருந்து மத்தகஜம்போல் பிலம்பன் அவ்வீர புருஷன்மீது குதித்தான்; அடித்தான். கைகளை முறுக்கிப் பிடித்தான். பூமியில் தள்ளினான். மிதித்தான். அவ்வீரபுருஷனைக் கையில் தூக்கிக்கொண்டு ஆகாயத்தில் சற்றுநேரம் பறந்துசென்றான்.

அவ்விடமிருந்து பூமியில் மோதினன்; கற்பாறைகளால் தலையை உடைத்தான்; மரங்களால் மார்பில் மோதினன்; மறுபடியும் அவ்வீரனை ஆகாயத்துக்குத் தூக்கிச்சென்று அங்கிருந்து சுழற்றிவிட்டான்; பற்களால் கடித்தான்; காலால் உதைத்தான்; நகங்களால் கிறினன்; இரும்பு உலக்கையால் அடித்தான்; ஈட்டியால் குத்தினன்; வாளால் அறுத்தான்.

பக்தியில்லாமல் பிலம்பாசுரன் வீரபுருஷனாகிய தியாகேசரை இவ்வாறு வதம்செய்ய நினைந்து துன்புறுத்துகையில் அத்துன்பங்களையெல்லாம் பரமேசுவரர் லீலையால் பொறுத்திருந்தார். சிறிதும் ஆயாசத்தை அடையாமல் முன்போலவே சுகமாகத் தோற்றினர். அதைக்கண்ட அசுரன் திடுக்கிட்டுத் திகிலடைந்து "இவ்வித அடிகளை நம்மிடமிருந்து பெற்றுக் கொண்டு உயிருடன் பிழைத்திருக்கும் இப்புருஷனுடைய பலமே பலம்" என்று ஆச்சரியமுற்று மேல் செய்யத்தக்கது இன்னதென்று தோன்றாமல் பிரமித்து நிற்கவே, ஈசன் அவனை நோக்கி, "ஓ, அசுரபதியே, உன் பலமும் பராக்கிரமமும் இவ்வளவுதானா? இதுவரை உன் புஜபலத்தை அறிந்து கொண்டேன். இனி உன் மாயையை அறிய விரும்புகிறேன்" என்று கூறி அஷ்ட சக்திகளில் ஒன்றாகிய மஹிமாவென்னும் சக்தியினால் பர்வதங்களைக்காட்டிலும் பதின்மடங்கு பெரிதான உருவத்துடன் அவனெதிரிலே நின்றார். அப்போது அசுரன் மனத்துக்குச் சிறிது ஆறுதல் செய்துகொண்டு மாயையினால் தன் வாயை நூறு யோசனை தூரமுள்ளதாய்த் திறந்தான். அதைக்காட்டிலும் கொஞ்சம் பெரியதான உருவத்தை ஈசுவரன் எடுத்துக்கொண்டார். அதற்குத் தக்கபடி பிலம்பனும் வாயைத் திறந்தான். வாயைத் திறப்பதற்கு மாயையின் எல்லை முடிந்துவிடவே அவ்வசுரன் திகைத்து நின்றதை அறிந்த பரமேசுவரன் அத்தருணத்தில் அவன் வாயைக் கிழித்துவிடும்படி தம் காலபைரவ ரூபத்தை ஏவினர்.

அதனுல் வாய் பிளப்பையடையவே பிலம்பாசுரன் உயிரை விட்டு மலேபோல் பூமியில் வீழ்ந்தான். அதைக்கண்டு மற்ற தானவர்கள் பயந்தோடி விட்டனர்.

இடர்கெடுமா றெண்ணுதியே னெஞ்சே நீ வா
வீண்டோளிசேர் கங்கைச்சடையா யென்றும்
சுடரொளியா யுள்விளங்கு சோதி யென்றும்
தூநீறுசேர்ந் திலங்கு தோளாவென்றும்
கடல்விடம துண்டிருண்ட கண்டாவென்றும்
கலேமான் மறியேந்து கையாவென்றும்
அடல்விடையா யாரமுதே யாதியென்றும்
ஆரூரா வென்றென்றே யலரா நில்லே.

நிலேபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலே புனேந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலேயாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்றும்
அலேபுனல்சேர் செஞ்சடையெம் மாதியென்றும்
ஆரூரா வென்றென்றே யலறு நில்லே.

அப்பர் சுவாமிகள்.



## 49. கலியிடமிருந்து காத்தருளிய லீலை.

வானவருலகுக்கும் மானவருலகுக்கும் தீங்கிழைத்து வந்த பிலம்பன் வாயைப் பிளந்து மூவுலகுக்கும் மங்களகரமாகிய க்ஷேம தீபத்தை ஏற்றி வைக்கையில் கார்த்திகை மாதம் வந்தது. அக்கினி, இந்திரன் முதலிய திக்குப்பாலகர்களும் மகரிஷிகளும் வேதம்வல்ல வேதியரும் தியாகராஜ மூர்த்தியின் எதிரில் கிருத்திகை தீபத்தை ஏற்றி மங்களகரமான அத் தீபத்தின் ஜ்வாலையினால் மானவரின் மனத்தில் பதிந்துள்ள அஞ்ஞான இருளை நீக்கிப் பரமேசனை வேதங்களாலும் அற்புத துதிகளாலும் தோத்திரம்செய்து பணிந்து தம் இருப்பிடம் சென்றனர். கிருத்திகை தீபத்தினால் ஆர்த்திகை செய்யப் பட்ட உமையும் பரமேசனும் தொண்டருடைய சகல விருப்பங் களையும் அளித்து விளங்குகையில் ஒருநாள் தியாகராஜாவின் எதிரே கலி புருஷன் தோன்றி வணங்கி, "பரமேச, உமது திருவருளால் சகல புவனங்களையும் சிருஷ்டிப்பதற்கு வல்லமை பெற்ற சதுர்முகன் உண்டாக்கிய உலகங்களில் இதுவரையில் கிருதயுக தர்மங்களும், திரேதாயுக தர்மங்களும், துவாபரயுக தர்மங்களும் முறையே செழிப்புடன் ஓங்கி விளங்கின. இனி எனது யுகமாகிய கலியுகமானது விசேஷமாகப் பூவுலகில் பரவும். அப்போது என் பார்வையினால் சகல ஜாதி தரு மங்களும் அழிந்துவிடும். ஒவ்வொரு ஜாதி ஜனங்களும் தம் ஜாதிக்குரிய காரியங்களை விட்டு வேறு ஜாதியாரின் தருமங் களைக் கைப்பற்றுவர். பெரும்பாலும் பூவுலகிலுள்ள ஜனங் கள் கலி புருஷனாகிய என் கடாக்ஷத்தினால் மோகத்தை அடை வர். பித்ரு பக்தியும், தேவ பக்தியும், ஈசுவர பக்தியும் அவர் களுக்குக் குறைந்துவிடும். எல்லோரும் காலை நேரத்தில் ஸ்நான ஸந்தியா காரியங்களை நடத்தார். சத்தியத்தைக் கைவிடுவர். தர்மத்தை நீக்குவர். நாள்தோறும் அளவற்ற

குற்றங்களைச் செய்யத் துணிவர். ஜனங்கள் பெரும்பாலும் இத்தன்மையை உடையவர்களாகி நாஸ்திக மதத்திற் புகுந்து ஸங்கீர்ண ஜாதியுடன் சேர்ந்து பாவங்களைச்செய்து நரகத்தை அடைய நேரும். தியாகேச, அப்போது நீர் என்மீது கோபிக்கலாகாது. உமது கட்டளைப்படியே நான் செய்யவேண்டியவனாக இருக்கிறேன்'' என்று அஞ்சலிசெய்து கூறினான்.

அப்போது தியாகேசர் புன்சிரிப்புடன் அவனை நோக்கி, ''கலிபுருஷா, நீ சொல்லிய யாவும் உண்மையே. சென்ற யுகத்தின் முடிவில் நான் யார் யாருக்கு எவ்வாறு கட்டளையிட்டிருக்கிறேனோ அதுபோலவே அவரவர்கள் நடந்து தீர வேண்டும். என் உத்தரவை மீறாமல் நடப்பவர்களே என் துணைவர்களாவர். திரிமூர்த்திகளும், திக்குப்பாலகரும், சந்திர சூரியர்களும், பஞ்சபூதங்களும் என் கட்டளையை மீறி நடவாமலிருப்பதுபோல் கலிபுருஷனே, நீயும் என் கட்டளையை அழிக்காமல் நடந்துகொள்வாய். உனக்கு நான் அளித்திருக்கும் அதிகாரத்தை நீ உலகில் செலுத்தக்கடவாய். உன் பார்வையினால் பூவுலகத்துக்கு அநேக மாறுதல்கள் ஏற்பட்ட போதிலும் எனக்கு அவை சம்மதமே. கலிபுருஷனாகிய நீ பூவுலகம் முழுவதிலும் பரவிப்படரும்போது சத்தியத்தை உடைய மகரிஷிகளும், புண்ணியசீலர்களும் பெரும்பாலும் பூவுலகை நீங்கி வேறுவடிவங்களுடன் செல்வார்கள். தர்மம் குறைவதால் ஜனங்களுக்கு மிகவும் சுலபமாகப் பாவங்கள் நேரிடும். உனது காலமாகிய கலியுகத்தில் நான்கு வர்ணத்து ஜனங்களும் மற்றவர்களும் பொய்யை உரைத்தாலும் தம் மதத்தை விட்டுப் பிறமதத்தைத் தழுவினாலும் பெரியோர்களை இகழ்ந்தாலும் பிறர் மனைவியை விரும்பினாலும் கொடிய பாதகங்களைச் செய்தாலும் பஞ்சேந்திரியங்களின் வேகத்தை அடக்காவிட்டாலும், போஜன நியமத்தை இழந்தாலும், நித்திய கர்மங்களையும், நைமித்திகங்களையும் விட்டாலும், மதுபானம்

செய்தாலும், பிரம்மஹத்தி, கோஹத்தி, சிசுஹத்தி முதலிய மகா பாதகங்கள் புரிந்தாலும், சத்தியத்தைக் கைவிட்டாலும், காம பரவசர்களானாலும், வேதத்தைப் பழித்தாலும், தேனுவை இகழ்ந்தாலும், குருவின் மனைவிக்குத் துரோகம் செய்தாலும், சரண் புகுந்தவரைக் கைவிட்டாலும், அன்ன தானத்தை விலக்கினாலும், கோமாமிசத்தை விரும்பினாலும், நீச சேவை செய்தாலும், வஞ்சகர்களாக இருந்தாலும், நன்றி கெட்டவர்களானாலும், செல்வத்தையும் காமத்தையுமே விரும்பினாலும், எப்போதாவது எவ்விடத்திலாவது தம் மனத்தில் அவர்கள் என்னை நினைப்பார்களானால் அவர்கள் மீது கருணையுடன் அவர்கள் செய்த பாவங்களை நீக்கி அவர்களுக்கு நற்பயனை அளிப்பேன். ஓ கலிபுருஷ, உனது மோகத்துக்கு உட்படாமலிருக்கும் ஞானிகளுக்கு என் தத்துவம் விளங்கும்படி செய்ய அநேக குருக்களையும், ஆசிரியர்களையும், தொண்டர்களையும் பூவுலகில் தோன்றும்படி செய்ய நான் சங்கற்பம் கொண்டுவிட்டேன். என் கருணையினால் அவ்வித குருக்கள் மெய்ஞ்ஞானமடைந்து என் ஸ்வரூபத்தின் பெருமையைப் பல வாறு சாஸ்திரங்களாகவும் துதிகளாகவும் எடுத்துரைத்து உலகில் தத்துவத்தைப் பரவச்செய்வார்கள். அதனால் சிலர் நற்கதி அடைவார்கள். குருக்களின் உபதேசத்தாலும் சாதுக்களின் சேர்க்கையாலும் என்னிடமுள்ள பக்தியினாலும் உலகில் உள்ள ஜனங்கள் பெரும்பாலும் நற்கதி அடைவார்கள்'' என்று அருளிச்செய்தார்.

அப்பால் கலிபுருஷன் ஒன்றும் பேசாமல் வாடியமுகத்துடன் சென்று லிங்கஸ்வரூபிகள் விளங்கும் க்ஷேத்திரங்களையும், புண்ணிய ஸ்தலங்களையும், புண்ணியநதி தீரங்களையும் விட்டுவிட்டுத் தன் கொடிய காரியத்துக்கு உட்பட்டு நடக்கக்கூடியவர்கள் வசிக்கும் இடங்களைத் தேடிப் பார்த்துக்கொண்டு மிலேச்சர், புளிந்தர், கிராதர், பாவிகள் வசிக்கும் இடத்தைத

முக்கிய ஸ்தானமாகப் பெற்றுக் கலியுகமென்னும் தன் கொடிய காலத்தை உலகத்தில் பரவச்செய்தான்.

இந்த லீலையைக் கேட்பதால் கலியுகத்தின் மாயையினால் ஏற்படும் எவ்வித பாவங்களும் தொலைந்து முடிவில் ஜனங்கள் பரமேசன் பதவியை அடைவார்கள்.

உயிர்நிலை யுடம்பேகாலா வுள்ளமே தாழியாகத்
துயரமே யேற்றமாகத் துன்பக்கோ லதனைப்பற்றிப்
பயிர்தனைச் சுழியவிட்டுப் பாழ்க்குநீ ரிறைத்துமிக்க
அயர்வினா லவர்க்காற்றே னாரூர்மூ லட்டனீரே.

கற்றதே லொன்றுமில்லை காரிகை யாரோடாடிப்
பெற்றதேற் பெரிதுந்துன்பம் பேதையேன் பிழைப்பினாலே
முற்றினா லவர்வந்து முறைமுறை துயரஞ்செய்ய
அற்றுநா னலந்துபோனே னாரூர்மூ லட்டனீரே.

பத்தனாய் வாழமாட்டேன் பாவியேன் பரவிவந்து
சித்தத்து ளைவர்தீய செய்வினை பலவுஞ்செய்ய
மத்துறு தயிரேபோல மறுகுமென் னுள்ளந்தானும்
அத்தனே யமரர்கோவே யாரூர்மூ லட்டனீரே.

தடக்கைநா லைந்துங்கொண்டு தடவரை தன்னைப்பற்றி
எடுத்தவன் பேர்க்கவோடி யிரிந்தன பூதமெல்லாம்
முடித்தலை பத்துந்தோளு மிறுதர விறையேயூன்றி
அடர்த்தருள் செய்த தென்னே யாரூர்மூ லட்டனீரே.



## 50. சிருஷ்டிமுறை உரைத்த லீலை.

தியாகராஜாவுக்கும் கலிபுருஷனுக்கும் நடந்த சம்பாஷணையைத் தம் ஞானதிருஷ்டியினால் அறிந்த மகரிஷிகளும் ஞானிகளும், வேதம் ஓதும் அநேகம் பிராமணர்களை அழைத்துக்கொண்டு திருவாரூர் வந்து ஈசனைப் பணிந்து கூப்பிய கையுடன், "ஓ ஜகத்காரண பரமேச, நேற்றைய தினம் கலிபுருஷன் இதுவரை உலகில் நிலைத்திருந்த தர்மமாகிய பசுவை அழிக்கக் கருதி இங்கே உமது சன்னிதானத்தில் தர்க்கம் செய்ததை நாங்கள் அறிந்து பயந்து வந்தோம். கலிபுருஷன் உம்மிடம் விடை பெற்று வெளியே செல்லும் போதே அவனது கொடிய பார்வையை அடைந்த உலகத்தோருக்குக் கிருதயுகத்திலும் திரேதா யுகத்திலும் துவாபர யுகத்திலும் தாம் செய்துவந்த நற்காரியங்களின் ஞாபகமே மாறிவிட்டது. தவத்தின் மேன்மையும் தத்துவ ஞானமும் அகன்றுவிட்டன. உலகெங்கும் இப்போது அஞ்ஞான இருள் மூடிவிட்டது. ஆரம்பத்திலேயே இப்படியிருக்கையில் கலியின் யௌவன காலத்தில் உலகம் எவ்வாறு இருக்குமென்பதை அறியோம். ஆகையால் பரமேச, எங்களிடங் கருணைகூர்ந்து உமது தத்துவத்தையும் உலக சிருஷ்டி கிரமத்தையும் கலியுகத்திலும் நன்றாக விளங்குமாறு நீரே உரைக்க வேண்டும்" என்று முறையிட்டனர்.

பரமசிவன் கருணையினால் அவர்கள் முன் தோன்றி, "கேளீர் மகரிஷிகளே, கலிகாலத்தின் கொடுமையைப்பற்றி நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம். முதல் மூன்று யுகங்களிலும் லக்ஷம் தடவை காயத்திரி ஜபம் செய்தால் எவ்வித பலன் உண்டோ அவ்வித பலனை இக் கலியுகத்தில் ஒருதடவை ஜபம் செய்தால் அடையலாம். மூன்று யுகங்களிலும் தவஞ்செய்து போக்கவல்ல பாவமெல்லாம் இக்கலியுகத்தில் எனது நாமத்தை

எப்போதேனும் ஒருதடவை கூறினால் அப்பாவம் நீங்கும். அவ்வித புருஷனுக்கு எனது பதத்தை அளிப்பதாக வாக்களித்துவிட்டேன். என் நாமத்தைச்சொல்வதாலும், என்னிடம் பக்திசெய்வதாலும், எனக்குப் பணிவிடை செய்வதாலும், எனக்கு அபிஷேகம் செய்வித்தலாலும், என்னையே தெய்வமென்று நம்புவதாலும் நான் இக்கொடிய கலியுகத்தில் பாவத்தால் வருந்தும் ஜனங்கள் மீது கருணைகொண்டு அவர்களது இடரை நீக்கி நன்மையை அளித்து முடிவில் பரமானந்த பதவியையும் கொடுப்பேன். எவ்விதமான பாவம் செய்தாலும் கலியுக ஜனங்களுக்கு என்னிடம் பக்திமட்டும் இருக்குமானால் அவர்களது பாவம் தானகவே போய்விடும். இமையோரால் தொழப்படுவார். கலியுகத்தில் எந்தத் திக்கிலும் உள்ள சகல ஜீவராசிகளுக்கும் நற்கதியை அளிப்பதாக நான் உறுதி கொண்டு ஸத்குருக்களையும், சிறந்த பக்தர்களையும் பூவுலகில் புண்ணிய பூமியில் அவதரிக்கும்படி செய்யப்போகிறேன். அவ்வாறு என் அம்சமாக அவதரிக்கும் என் பக்தர்கள் இயற்றும் துதிநூல்களையும் தத்துவ நூல்களையும் அறிந்து சகல ஜீவராசிகளும் உய்யும்.

"கலியுகப்பிரஜைகளுக்கு ஸத்குருவின் கடாக்ஷத்தால் எளிதில் மோக்ஷம் உண்டாகும்படி நான் சங்கற்பம் செய்துவிட்டேன். இவ்வாறு நான்கு வருணத்தாரும் கலியுகத்தில் விளங்குவார்கள். வேதமார்க்கமும் தர்ம நெறியும் அழியா. கலியின் கொடுமையால் மயங்கிச் சிலர் பாவம் செய்தாலும் அவர்களும் என்னிடம் பக்தி செலுத்தி நற்கதியை அடைவார்கள். இதுவரை கலியுக விஷயத்தைச் சொன்னேன். இனிமேல் சிருஷ்டி முறையைச் சொல்லுகிறேன். கேளீர் மகரிஷிகளே! பராபரப் பொருள்கள் நிறைந்த சகல புவனங்களுக்கும் மூல காரணனுகிய நான் பிரளயகால ருத்திர ரூபியாய்த் தோன்றி ஆதியில் உலகங்களையெல்லாம் ஸம்ஹரித்தபின் என் விருப்பம்

போல் பரம்பொருள் ஸ்வரூபியாகி அவயவமற்றவனாகவும் சில சமயங்களில் அவயவங்களுடன் கூடியவனாயும் சுடராயும் விளங்கினேன். ஸம்ஹாரகால கோபத்தை அடக்கிக்கொண்ட நான் பிறகு உலக சிருஷ்டி செய்வதாக மனத்தில் சங்கற்பம் செய்துகொண்டு அயனையும் அரியாயும் அரனையும் தோன்றினேன். அம்மூவருக்கும் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் அதிகாரத்தை யளித்தவுடன் சதுர்முகன் என் அருளால் படைக்கும் ஞானத்தை அடைந்தான். ஸகல சிருஷ்டிக்கும் காரணமாகிய பஞ்சபூதங்களை முதலில் நான் சிருஷ்டிக்கவே அவற்றைக்கொண்டு பிரமதேவன் முதலில் மானஸ புத்திரர்களையும், பிறகு பிரஜாபதிகளையும், தேவ ரிஷிகளையும், தேவர்களையும், அசுரர்களையும், யக்ஷர்களையும், ராக்ஷஸர்களையும், கின்னரர்களையும், கிம்புருஷர்களையும், மனுஷ்யர்களையும், பசுக்களையும், உரகங்களையும் மற்றுமுள்ள பல கோடிக்கணக்கான ஜீவராசிகளையும் படைத்தான். இவ்வித ஜீவராசிகளுக்கு ஆகாரமாயும் பூமியின் சாரமாயுமுள்ள உணவுப்பொருள்களை உண்டாக்கினான். பிரமன் முதல் பூச்சிவரையில் உள்ள உலக சிருஷ்டியானது இவ்வாறு படைக்கப்பெற்ற பிறகு சகல வேத சாஸ்திரங்களையும் பிரமனுக்கு முதலில் உபதேசம் செய்தேன்.

"அப்பிரமதேவனாலும் திரிகால ஞானிகளான அநேக மகரிஷிகளாலும் தவஞ்செய்து சித்திபெற்ற பிறகு அவர்கள் பலவிதமான சாஸ்திரங்களையும் உலகில் கற்பித்தார்கள். மந்திர சாஸ்திரம், தந்திர சாஸ்திரம், ஆகமம், வியாகரணம், மீமாம்ஸை, வைத்தியம், சங்கீதம், காமசாஸ்திரம், சகுன சாஸ்திரம், மோக்ஷ சாஸ்திரம், தர்க்க சாஸ்திரம், நீதி சாஸ்திரம், தத்துவ சாஸ்திரம், பாக சாஸ்திரம், பூகோள சாஸ்திரம், கணித சாஸ்திரம், தர்ம சாஸ்திரம், அசுவ சாஸ்திரம், கஜ சாஸ்திரம், பக்ஷி சாஸ்திரம், சிற்ப சாஸ்திரம், யந்திர சாஸ்திரம் முதலிய அநேக சாஸ்திரங்களையும், அவற்றின் லக்ஷணங்களையும்

இயற்றி ஸத்குருக்கள் மூலமாக உலகத்தில் பரவும்படி செய்தார்கள். இவ்வித சாஸ்திரங்களெல்லாம் யுகங்கள் தோறும் கொஞ்சங்கொஞ்சமாய்க் குறைந்து இக்கலியுக ஆரம்பத்தில் சூத்திரம்போல் சுருக்கமாகவும் கொஞ்சமாகவும் விளங்குகின்றன. ஆனாலும் நல்லாசிரியர்களுடைய கடாக்ஷத்தினாலும் நம்மிடம் வைத்த பக்தியின் மேன்மையாலும் கலியுக ஜனங்கள் எல்லோரும் தருமம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் நான்குவித புருஷார்த்தங்களையும் அடைவார்கள்" என்று உரைத்துவிட்டு அந்தர்த்தானமானார்.

மகரிஷிகள் முதலான எல்லோரும் கலியுக ஜனங்களின் மீது பரமேசன் செய்தருளிய கருணையைப்பற்றிப் பலவாறு புகழ்ந்து துதிசெய்து பரமானந்தத்தை அடைந்தார்கள்.

ஒருவனு யுலகேத்த நின்ற நாளோ
வோருருவே மூவுருவ மான நாளோ
கருவனுய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனுய் மண்ணுவிண்ணுந் தெரித்த நாளோ
மான்மறிக்கை யேந்தியோர் மாதோர் பாகம்
திருவினுள் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே.



# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

## முதல் பிரிவு

## சிறப்புப் பெயர் அகராதி.

